# அறிஞர் மு.வ.



டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

# அறவோர் மு. வ.

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம். ஏ., எம். லிட், பிஎச். டி.
தமிழ்ப் பேராசிரியர் —
தமிழ்மொழித்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை—600 005.

விற்பனை உரிமை :
பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

முதற் பதிப்பு : டிசம்பர், 1986

நறுமலர்ப் பதிப்பக வெளியீடு

விலை ரூ. 16-00

## ஆசிரியரின் பிற நூல்கள்

தமிழ் இலக்கிய வரலாறு
உருவும் திருவும்
கட்டுரை வளம்
காரும் தேரும்
வாழையடி வாழை
மனோன்மணீயம் (பதிப்பு)
முருகன் காட்சி
இலக்கிய அணிகள்
பெருந்தகை மு. வ.
மலர் காட்டும் வாழ்க்கை
இலக்கியக் காட்சிகள்
சான்றோர் தமிழ்
நெஞ்சின் நினைவுகள்
நல்லோர் நல்லுரை
ஆண்டாள்
கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்
சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்
புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன்
The status of women in Tamilnadu during the Sangam Age
A study of the Literature of the Chera Country
Papers in Tamil Literature

அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம், சென்னை-600 002.

# முன்னுரை

வேலம் என்னும் சிற்றூரிற் பிறந்து, திருப்பத்தூரில் தமிழாசிரியராக வாழ்வைத் தொடங்கி, சென்னையில் தமிழ்ப் பேராசிரியராக மலர்ந்து, மதுரையில் துணை வேந்தராகப் பணியாற்றி நிறைவெய்திய வாழ்வு, டாக்டர் மு. வ. அவர்களுடைய வாழ்வாகும். அவர்களுடைய மாணவனாகப் பச்சையப்பர் கல்லூரியில் 1954ஆம் ஆண்டிற் சேர்ந்தேன். 1958ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அவர்கள் பணியாற்றிய பச்சையப்பர் கல்லூரியிலேயே தமிழ்த் துறையில் அவர்கள் தலைமையில் பணியாற்றும் வாய்ப்பு அவர்களால் கிடைத்தது. அவர்கள் 1961இல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்று வதற்குச் சென்றார்கள். 1966ஆம் ஆண்டில் அவர்கள் தலைமையின் கீழ், சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளனாகப் பணியாற்றும் பெரும்பேறு எனக்குக் கிட்டிற்று. இவ்வாறான பேற்றினைப் பெற்ற எனக்கு, அவர்கள் அருள் நிழலிலிருந்தும், அறிவு வீச்சிலிருந்தும், அன்பு நெகிழ்ச்சியிலிருந்தும் பாடங்கள் பலவற்றைக் கற்கும் வாய்ப்பு பலகாலும் வாய்த்தது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தினர் என்னைப் பேராசான் மு. வ. குறித்து அறக்கட்டளைச் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்த அழைத்தபொழுது, அவர்களை அறவோராகவும், கலைஞராகவும் கண்டு மகிழ்ந்தேன். அதன் விளைவே இந்நூல்.

அவர்கள் குறித்த பிற கட்டுரைகள் நூலின் பிற்பகுதியில் இடம் பெற்றுள்ளன. டாக்டர் மு. வ. அருகில் இருந்து யான் பெற்ற எண்ணங்களும் உணர்வுகளும் கருத்துகளும் இந்நூற்கண் இடம்பெற்றுள்ளன எனலாம்.

என் நூல்களை ஏற்று என்னைப் புரந்துவரும் தமிழுலகம், இந்நூலினையும் ஏற்று என்னை ஆதரிக்கும் என்னும் துணிபுடையேன்.

— சி. பா.

# உள்ளுறை

## முதற் பகுதி



## இரண்டாம் பகுதி

முதற் பகுதி

# I

# அறவோர்

**முன்னுரை**

டாக்டர் மு. வரதராசனார் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்து வளர்ந்து எளிய வாழ்வே வாழ்ந்தவர். பிறப்பும் வாழ்வும் எளிமையாக இருந்தபோதிலும், அவர்தம் எழுத்திலும் சொல்லிலும், செயலிலும் பெருமை பல விளங்கின. அவர் இணையற்ற எழுத்தாளர்; சிந்தனையலைகளைச் சிந்தையில் எழுப்பும் பேச்சாளர்; அறநெறி பிறழாச் செயலாளர்; உயர்நிலைப் பள்ளி ஆசிரியராகவும், கல்லூரிப் பேராசிரியராகவும், நாவலாசிரியராகவும் விளங்கி அவர் தமிழ் மொழிக்குச் சிறந்த எழுத்துப்பணி புரிந்துள்ளார்; அவருடைய எழுத்துகள் இளைஞரின் உள்ளங்களைக் கவர்ந்து, அவர்களின் வாழ்க்கையைத் துலக்கியது. அவர்தம் தமிழ்நடை எளிமையும் எழிலும், திட்பமும், நுட்பமும், தெளிவும் இனிமையும், பீடும் பெருமிதமும் வாய்ந்தது.

அவர் தொடாத துறை ஒன்றுமில்லை; தொட்ட துறைகளை அழகுபடுத்தாமல் விட்டதில்லை. சாகித்திய அகாதெமியின் பரிசினை 'அகல் விளக்கு' பெற, அந்நாளையத் தமிழக அரசின் பரிசினை, 'கள்ளோ

காவியமோ', 'அரசியல் அலைகள்', 'மொழியியற் கட்டுரைகள்' ஆகிய மூன்று நூல்களும் பெற, 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்', 'மொழி நூல்', 'விடுதலையா', 'ஓலைச்செய்தி' ஆகிய நான்கு நூல்களும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பாராட்டினைப் பெற்றன. இவருடைய நூல்கள் ஆங்கிலம், உருசியம், சிங்களம், இந்தி, மராத்தி, மலையாளம், தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

1952ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற ஐந்தாம் தமிழ் விழாவில் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் 'சங்க இலக்கியம்' என்னும் பொருள் குறித்துச் சொற் பெருக்காற்றினார். தலைமை தாங்கிய அந்நாளைய இலங்கை அரசாங்க அஞ்சல் துறை அமைச்சர் நடேசன் அவர்கள் மு. வ. அவர்களை அவையினருக்கு அறிமுகப் படுத்தும்போது 'தமிழ்நாட்டின் இலக்கிய நோபல் பரிசாளர்' என்று குறிப்பிட்டார்.

இத்தகு பீடுசால் பெருமை மிக்க டாக்டர் மு. வ. அவர்கள் பதின்மூன்று நாவல்களையும், சிறுகதைகள் இரண்டனையும், சிந்தனைக் கதைகள் இரண்டனையும், நாடகம் ஆறனையும், இலக்கிய நூல்கள் இருபத்து நான்கனையும், கட்டுரை நூல்கள் பதினொன்றனையும், சிந்தைக்கினிய சிறுவர் இலக்கியம் நான்கனையும், சிந்தனைக்குரிய கடித இலக்கியம் நான்கனையும், பயண இலக்கியம் ஒன்றனையும், வாழ்க்கை வரலாற்று நூல்கள் நான்கனையும், மொழியியல் நூல்கள் ஆறனையும், ஆங்கில நூல் இரண்டனையும், சிறுவர் இலக்கண நூல் மூன்றனை யும், மொழிபெயர்ப்பு நூல் இரண்டனையும், இலக்கிய வரலாற்று நூல் ஒன்றனையும் தமிழ்கூறு நல்லுலகிற்கு இனிமையுற இயற்றியளித்த தமிழர்; கலைஞர்; அறவோர் ஆவர். இந்த மூவருள் அவரை அறவோராகக் காண்பதே இப்பகுதி.

**அறவோர் மு. வ.**

டாக்டர் மு. வ. அவர்கள் சிறந்த கருத்துகளைச் சிந்தையில் வடிக்கும் சிந்தனைச் சிற்பி. இளைய தலைமுறையினரை நெறிப்படுத்தும் நெறிகாட்டி. வாழ்க்கைக் கடலில் அலைப்புண்டு அலமருவோருக்கு வாழ்க்கை விளக்கமாகத் திகழுபவர். சிக்கல்களை மேற்போக்காகக் கண்டு மருந்திட்டுச் செல்லாமல் அடிப்படைத் தேவைகள் உணர்ந்து சிக்கல்களை அவிழ்க்கும் செல்வர் அவர். எனவே தான் அவர் அறிஞர் பெர்னாட்ஷாவை மதித்துப் போற்றுகின்றார்.

> அறிஞர் பெர்னாட்ஷாவை நான் மதிப்பதற்குக் காரணம், வாழ்க்கைச் சிக்கல் எதுவாயினும் அதை மேற்போக்காகக் கண்டு மருந்திட்டுச் செல்லாமல், அடிப்படைக் காரணம் கண்டு திருத்தும் ஆற்றல் அவருடைய எழுத்துக்களில் இருத்தலே ஆகும்.
>
> — அறிஞர் பெர்னாட்ஷா - முன்னுரை, 1948

என்ற பகுதியினால் இது தெளிவாகிறது. திரு. வி. க. அவர்களும் திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் என்ற நூலிற்கு எழுதியுள்ள அணிந்துரையில், மு. வ. அவர்களின் உள்ளத்தினின்று எழும் கருத்துகள் சிந்தனைக்குரியன என்று பாராட்டுகின்றார்.

> ஆசிரியர் மு. வரதராசனார் திருவள்ளுவர் சுரங்கத்தில் பன்முறை மூழ்கி மூழ்கிப் பலதிற மணிகளைத் திரட்டிக் கொணர்ந்தவர். அவரது நெஞ்சம் திருவள்ளுவர் நெஞ்சுடன் உறவாடி உறவாடிப் பண்பட்டது. அந்நெஞ்சினின்றும் அரும்பும் கருத்துச் சிந்தனைக்குரியதே.
>
> — திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் - அணிந்துரை, பக். 14

இப்படி, தாம் மிகவும் மதித்துப் போற்றும் பெரியாரின் பாராட்டையே பெற்ற டாக்டர் மு. வ. அவர்கள் தனக்

கெனத் தனியிடம் பிடித்துக் கொள்வதை விரும்பாத அறவோர். இதனை அவர்தம் தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் பல இடங்களில் காணலாம்.

> மு. வரதராசன், கு. ராஜவேலு ஆகியோர் எழுதும் நாவல்களின் நடை பலருடைய உள்ளங்களைக் கவர்ந்தது. நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகள் வைத்துக் கொண்டே கதை பின்னி, படிப்பவர் உள்ளத்தில் புதிய உணர்ச்சிகளை ஊட்டும் நாவல்கள் அவர்களுடையவை. 'கள்ளோ காவியமோ', 'அகல் விளக்கு', 'கரித் துண்டு', 'கயமை', மு. வரதராசனின் நாவல்களில் குறிக்கத்தக்கவை.
>
> — தமிழ் இலக்கிய வரலாறு, பக். 292

> ஆராய்ச்சி நூல்கள் எழுதித் தமிழ் உரைநடையில் தெளிவும் எளிமையும் சேர்ந்து வளர உதவியவர்கள் மா. இராசமாணிக்கம், சாமி. சிதம்பரனார், மு. அருணாசலம், மு. வரதராசன், வெள்ளைவாரணர், அ. மு. பரமசிவானந்தம், வேங்கடராம செட்டியார் முதலியவர்கள். உரையாசிரியர்களின் நடையைப் பின்பற்றியவர்கள் துரை. அரங்கசாமி, கா. அப்பாத் துரை, வ. சுப. மாணிக்கம், இராமநாதன் செட்டியார் முதலானோர்.
>
> — தமிழ் இலக்கிய வரலாறு, பக். 330

> திருக்குறளைப் பற்றிக் கணக்கற்ற நூல்கள் வெளி வந்துள்ளன. திரு. வி. க., நாமக்கல் கவிஞர், பாரதி தாசன் முதலியோரின் புதிய உரைகளும் வெளியாகி யுள்ளன. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மு. வரத ராசன், கோதண்டபாணி பிள்ளை முதலியோரின் ஆராய்ச்சி நூல்களும் இங்குக் குறிப்பிடத்தகுந்தவை.
>
> — தமிழ் இலக்கிய வரலாறு, பக். 331.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் மிகப் பழைய தொகை நூல்களின் பாடல்களைப் பற்றி ஆராய்ந்து ஆழ்ந்த நுட்பங்களையும், நயமான கருத்துகளையும், விளக்கி நூல்களை எழுதியவர்கள் கி. வா. ஜகந்நாதன், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், இலக்குவனார், வேங்கடராம செட்டியார், கு. ராஜவேலு, அ. ச. ஞான சம்பந்தன், மு. வரதராசன், போ. குருசாமி, ந. சஞ்சீவி முதலானோர்.

— தமிழ் இலக்கிய வரலாறு, பக். 331

கடிதம் எழுதும் வடிவில் பல அருமையான கருத்துக் களை விளக்க நூல்களாகத் தரும் எழுத்தாளர்களும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரிந்துள்ளனர். அறிஞர் அண்ணா, மு. வரதராசன் முதலானவர்களின் நூல்கள் இவ்வகையில் மக்களிடையே நன்கு பரவி யவை.

— தமிழ் இலக்கிய வரலாறு, பக் 332

இப்படிப் பல்வேறு துறைகளிலும் கற்றுத் துறைபோகிய போதும் தமக்கெனத் தனியிடம் வைத்துக் கொள்ளும் ஆர்வலராய் அல்லாமல் பிறரோடு தம்மையும் ஒருங்கு வைத்து எண்ணும் பரந்த மனப்பான்மை கொண்ட அற வோராக மு. வ. அவர்கள் துலங்குவதைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

மேலும் காந்தியார் குண்டுபட்டு இறந்து, பொதுமக்கள் பார்வைக்கு அவர் திருவுடலம் வைக்கப்பட்டிருந்த நிலையில் செய்தித்தாளில் வெளிவந்த அப்படத்திற்குக் கண்ணாடிச் சட்டமிட்டு வைத்திருந்ததும், அவ்வாறு வைத்திருந்தமைக்கு அவர் கூறும்,

"அறம் வளர்த்த பொதுநலம் பேணிய நாட்டின் தந்தைக்கே இந்நிலை; எனவே வாழ்வில் ஒவ்வொரு வரும் அயராது தம் வாழ்நாளில் ஒவ்வொரு நாளிலும்

கடமையுணர்வுடன் தாம் ஏற்ற பணிகளை இனிதே யாற்றி வர வேண்டும் என்பதனை அப்படம் நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கிறது''

என்ற காரணமும் அவரைச் சிறந்த அறவோராகவே காட்டி நிற்கின்றன.

**தனிநெறி**

அறத்தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர் டாக்டர். மு. வ.

"அறம் என்பது எல்லோருடைய மனத்திலும் உள்ள பொதுச் சட்டம். இயற்கைச் சட்டம்."

"அறம் என்பது ஆற்றல் மிக்கது. அதை எதிர்த்து வாழ முடியாது."

"அறத்தை வெல்லவும் முடியாது".

"மனிதனின் மனத்தில் உணர்வு உள்ள வரையில் அறத்தை அழிக்கவும் முடியாது."

என்ற பகுதிகள் அறத்தில் அவர் கொண்ட நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன. இப்படி அறத்தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டதனால் தான் அதை உணர்த்துவதற்குத் தமக்கெனத் தனிநெறியினை வகுத்துக் கொண்டார்.

"அறவுரை கூறுவதால் ஒரு சிலரைத்தான்—இயல்பாகவே பண்பட்டு வரும் ஒரு சிலரைத்தான் திருத்த முடியும். மற்றவர்களைத் திருத்த அறவுரை பயன் படுவதில்லை. பயன்படுவதானால் புத்தரும், ஏசுவும், வள்ளுவரும், காந்தியும் பிறந்த பிறகு அறிஞர்களின் மூளைகள் அணுக்குண்டையும் நீரகக் குண்டையும் கண்டுபிடிப்பதில் முனைந்திருக்குமா? அறிவுரையால் பெரும்பாலோரின் மனத்தைத் திருத்தலாம் என்பது வீண்கனவு. அழும் குழந்தையை முத்தமிட்டு அமைதிப்

படுத்த முயலும் தாயின் முயற்சி போன்ற வீண் கனவு தான்''

—நண்பர்க்கு-பக். 102

என்பது அவர் உணர்ந்து தெளிந்த உண்மை.

'' கருத்துகள் ஆற்றல் மிக்கவை. உண்மையும் ஆழ்ந்த உணர்வும் கூடிப் பிறந்த கருத்துக்கள் உலகத்தின் போக்கையே மாற்றி அமைக்கக் கூடியவை''

—உலகப் பேரேடு, பக். 153

என்பது மு.வ. அவர்களின் எண்ணம். எனவே தான் தாம் உணர்த்த விரும்பிய அறங்கள் கருத்துகளாகவே—எண்ணங்களாகவே கூறிச் செல்கின்றார். இந்த எண்ணங்கள் உலகையே மாற்றி அமைக்கும் ஆற்றல் வாய்ந்தவை என்பதை மற்றோர் இடத்திலும் குறிக்கின்றார்.

'' மனத்தால் எண்ணும் எண்ணம் ஆற்றல் உடையது. பலர் சேர்ந்து எண்ணும் எண்ணங்களே உலகை மாற்றி அமைக்கும் வல்லமை உடையவை.''

'எண்ணம் திருந்தினால் எல்லாம் திருந்தும்' என்ற கருத்துடைய மு.வ. அவர்கள் இன்றில்லாவிட்டாலும் என்றேனும் ஒருநாள் செயலாக ஆக்கம் பெறும் என்று மொழிகின்றார்.

'' உண்மையான எண்ணமும் உள்ளம் கலந்த பேச்சும் சேர்ந்தால் உருப்படியான செயல் ஆவது திண்ணம்''. ''நம்மால் உடனே மாற்றியமைக்க முடியாமற் போகலாம். மாற்றியமைக்க வேண்டும் என்று எண்ணுவது நம்மால் ஆகும். திட்பமாக எண்ணிப் பிறர்க்கும் உணர்த்த முடிந்தால் அதுவே பெரிதுதான். இன்று எண்ணத்தை வெற்றியுடன் பரப்பிவிட்டால் நாளை அது செயலாக உருக்கொள்வது திண்ணம். விதைத்த விதை முளைக்கத் தவறினாலும் தவறும். பெரும்பாலோர் எண்ணும் எண்ணம் செயல் ஆகத் தவறாது.''

—நண்பர்க்கு. பக். 26

'எண்ணங்களாகிய விதைகளை ஊன்றிச் செல்வோம், நூல்களின் வாயிலாக; பயன் தரும்போது தரட்டும்'' என்று கூறிவந்தது எண்ணங்கள் மாற்றங்களை ஏற்படுத்தும் என்பதில் அவர் கொண்டிருந்த உறுதியைப் புலப்படுத்துகின்றது. எனவேதான் அவர் தம் சிந்தனைகளை — கருத்துகளை — எண்ணங்களைப் பரப்புவதற்கு ஏற்ற களமாக இலக்கிய வடிவங்களைக் கொண்டுள்ளார்.

## இலக்கிய வடிவங்களில்

கலை கலைக்காக அன்று. வாழ்க்கைக்காக. இலக்கியக் கலையும் வாழ்க்கைப் பயன்பாட்டிற்கு ஏற்றதாகவே அமையவேண்டும். இந்த இலக்கியக் கலையைப் பற்றிப் பேசும்போது டி. எச். லாரன்ஸ் அவர்கள்,

> '' கலையின் முடிந்த நோக்கம் அறம் உணர்த்தலே. இலக்கிய இன்பம் நல்குவது அன்று. அணிநலன் பயப்பது அன்று. பொழுதுபோக்கப் பயன்படுவது அன்று.
>
> '' அறம் உணர்த்தல் வேண்டும். போதிக்கும் முயற்சி கூடாது. தெளிவும் உணர்ச்சியும் அந்த அந்த அற நோக்கு கற்போரின் இதயப் பாங்கை மாற்றாமல். இரத்தப் போக்கையே மாற்றும் ஆற்றல் பெற்றிருத்தல் வேண்டும். முதலில் இரத்தத்தை மாற்ற வேண்டும்: பிறகு தொடர்ந்து இதயத்தை மாற்ற வேண்டும்''

என்று கூறுவர். டாக்டர் மு.வ. அவர்களும் தாம் கண்ட வாழ்க்கை உண்மைகளை — அறங்களை மற்றவர்க்கு உணர்த்த நாவல், சிறுகதை, நாடகம், கடிதங்கள் என்று பல்வேறு இலக்கிய வடிவங்களைக் கருவியாகக் கொண்டுள்ளார்.

> '' உண்மையிலேயே நெஞ்சார்ந்த ஈடுபாட்டுடன் தாம் கண்ட வாழ்க்கையையும் அதன் நோய்களையும், அவற்றிற்கான மருந்தினையும் கலந்து தருவதற்கே

நாவல் இலக்கியத்துறையை அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டதாகத் தெரிகிறது.''

—மு.வ.வின் இலக்கியங்கள், பக். 23

''தம்முடைய நாடித்துடிப்பை மட்டுமன்றித் தமிழ்ச் சமுதாயத்தின் நாடித்துடிப்பையும் அவர் நன்கு உணர்ந்தவர். இது இயற்கையாக இயங்காததற்குச் சமுதாய நோய்களே காரணம் எனத் தெளிந்து, நோயைக் கண்டறிந்து அவர் தந்த மருந்துச் சீட்டுகளே (Prescriptions) அவர் எழுதிய நாவல்களாகக் காணப் படுகின்றன. தம்முடைய இதயம் தம்மிடம் பேசிய பேச்சைக் குறித்துவைத்து நாவலாக்க இயற்கை ஒத்துழைக்காவிட்டாலும், தாம் உணர்ந்த சமுதாயத் தின் பேச்சைக் குறித்துவைத்து நாவல் வடிவில் வெளியிட இயற்கை அவரைத் தடுக்கவில்லை''

—மு.வ.வின் இலக்கியங்கள், பக். 23-24

என்று டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்கள் நாவல் துறையை அவர் தேர்ந்தெடுத்தமைக்கான காரணத்தை விளக்குகின்றார். நாவல் துறையை மட்டுமன்றிப் பிற இலக்கியத் துறைகளை அவர் தேர்ந்தெடுத்தமைக்கும் இவர் கூறும் காரணமே பொருந்தும்.

தாம் உணர்ந்த—உணர்த்த விரும்பிய வாழ்க்கை உண்மைகளை—அறங்களைத் தாம் படைத்த இலக்கிய மாந்தர்களின் வாயிலாகவே உணர்த்துகின்றார். ''மு.வ. கருத்துக்களையே பாத்திரங்களாகப் படைத்துள்ளார்'' என்பார் டாக்டர் க. கைலாசபதி. டாக்டர் இரா. மோகன் அவர்கள்,

''டாக்டர் மு.வ.வின் எழுதுகோலிலிருந்து கருத்துக் களால் ஆன சில பாத்திரங்கள் உருவாகியுள்ளன என்பது உண்மை. அந்தப் பாத்திரங்கள் எலும்பும் தசையும் கொண்டு ஆக்கப்பட்டன அல்ல. மனித

சிந்தனையின் பிரதிநிதிகளாகவே படைக்கப்பட்டன என்பது உண்மை. அறவாழி (அல்லி, நெஞ்சில் ஒரு முள்), முருகய்யா (கள்ளோ காவியமோ, வாடாமலர்), மெய்கண்டார் (மண்குடிசை) ஆகிய பாத்திரங்களை மு.வ. மனித சிந்தனையின் பிரதிநிதிகளாகவே படைத்துள்ளார். எனினும் இங்கே நாம் ஓர் உண்மையை மறந்து விடுதல் கூடாது. அந்தப் பாத்திரங்களில் மு.வ.வின் நாவல்களில் தலைமைப்பேறு இல்லை. அறிவுரை கூறும் பொறுப்பே உண்டு''

—டாக்டர் மு.வ.வின் நாவல்கள், பக். 84

என்பர். இவர் கூறுவது போன்றே டாக்டர் மு. வ. அவர்கள் கதைத் தலைவர்கள், துணைவர்கள் என்று பலர் வாயிலாகத் தம் கருத்துகளை அறிவுறுத்தியதோடு அமையாமல் அறிவுரை கூறுவதற்கென்றே சில மாந்தர்களைப் படைத்துள்ளார். இம்மாந்தர்களின் நூல்களைப் பயின்றும் சான்றோர் வாழ்க்கையைக் கண்டும் இப்படித் தான் வாழவேண்டும் என்று நெறி வகுத்துக் கொண்டவர்கள். அறத்தில் அசையாத நம்பிக்கை உடையவர்கள். தனிநாயக அடிகளார் அவர்களும் டாக்டர் மு.வ.வின் கதைமாந்தர்களை அவர்களின் கருத்துகளாலேயே நினைவில் கொள்ள முடியும் என்கின்றார்.

''வரதராசன் புனைகதைகளில் கருத்துகளும் கலந்துரையாடல்களுமே தலைமை இடம் பெறுகின்றன. கதைமாந்தரின் ஆளுமையையே மறையச் செய்யும் அளவிற்குக் கருத்துக்கள் அவரது நாவல்களில் முதன்மை இடம் பெறுகின்றன...அவரது பாத்திரங்களை நாம் அவரவர்களின் மனிதப் பண்பால் நினைவில் கொள்ள முடியாது. அவரவர்களின் கருத்தாலேயே நினைவில் கொள்ள முடியும்.''

—தனிநாயக அடிகள்

இப்படியாக இலக்கிய வடிவங்களில் அவர் உணர்த்தும் உண்மைகள் — கருத்துகள் உலகத்தைச் சீர்திருத்தும் கீர்த்தி வாய்ந்தன. நாட்டிற்கு நன்மை பயக்கும் நீர்மையன. சமுதாயத்திற்கு நலன் நல்கும் பெற்றின. அமைதியான வாழ்க்கைக்கு வழிகாட்டும் ஆற்றல் சான்றன. தனி மனிதனை நெறிப்படுத்தும் பாங்கின.

## குறையும் நிறையும்

டாக்டர் மு.வ அவர்களின் உள்ளம் புதிய உலகம் காண விழையும் உள்ளம். அவர் தம் சிந்தனை உலகளாவிய சிந்தனை. எனவேதான் உலகத்தில் உள்ள குறைகளை மட்டும் சுட்டிக் காட்டுவதோடு அமைந்துவிடாமல் அக்குறைகளை நிறைகளாக்கவும் வழி தேடுகிறார். மூடநம்பிக்கையும் ஆடம்பரமுமே உலகில் காணப்படும் குறைகள் எனக் கருதுகின்றார்.

> 'உலகத்துக்கே பொதுவான குறைகள் இரண்டு உள்ளன. மூடநம்பிக்கை ஒன்று. ஆடம்பரம் ஒன்று'.
>
> —மண்குடிசை, பக் 221

எனவேதான் அவர் ஆடம்பரத்தையும் மூடநம்பிக்கைகளையும் வெறுக்கின்றார். ஆடம்பரமாக வாழ்வதே பாவம் என்பது அவர் கருத்து.

> " நம்மைச் சுற்றிலும் ஏழைகள் உணவுக்கும் உடைக்கும் வழியில்லாமல் வாழும்போது நாம் ஆடம்பரத்தைத் தேடுவது பாவம் என்பது என் கொள்கை. அவர்களுக்குப் பணம் கொடுத்து உதவி செய்யாவிட்டாலும் ஏக்கம் உண்டாக்கி மனத்தைக் கெடுக்காமலிருக்க வேண்டும். தேவைகளைக் குறைத்துக் கொண்டு எளிய வாழ்க்கை வாழ்வது என்றைக்கும் நல்லது. அதுவே முதன்மையான தவம். கவலை இல்லாமல் வாழ்வதற்கு ஒரு வழி வேண்டாமை அன்ன விழுச்செல்வம் என்கிறார் திருவள்ளுவர். தேவையே

இல்லாமல் மனிதன் வாழ முடியாது. தேவைகளைக் குறைத்து வாழலாம் அல்லவா?''

—மண்குடிசை, பக். 52

கவலையற்ற வாழ்க்கையும் சிக்கன வாழ்க்கையும் வாழ மனத்தில் ஆடம்பரம் இல்லாமல் வாழ வேண்டும் என்கின்றார்.

"மனத்திலேயே ஆடம்பரம் இல்லாமல் இருந்தால்தான் சிக்கன வாழ்க்கையையும் கவலையற்ற வாழ்க்கையையும் வாழ முடியும். தாய்வீட்டுப் பட்டாக இருந்தாலும் அதை விரும்புகிற மனமே நல்ல மனம் அல்லவாம். இன்றைக்கு அந்த ஆசைக்கு இடம் கொடுத்தால் நாளைக்கு வேறுபல ஆடம்பர ஆசைகள் மனத்தில் வரு(மா)ம்.''

—அகல் விளக்கு, பக். 290

ஆடம்பர விரும்பிகளிடம் பழகாமல் இருத்தல் நலம் என்பது இவர் எண்ணம்.

"ஆடம்பரக்காரரோடு பழகினால் ஒருவேளையாவது மனத்தில் ஏக்கம் வரும். பழகாமலே இருந்தால் தலைநிமிர்ந்து வாழலாம்.''

—அகல் விளக்கு, பக். 290

ஆடம்பரம் அமைதியான வாழ்க்கையைப் பாழ்படுத்த வல்லது ஆதலின் பாவங்களில் பெரிய பாவம் ஆடம்பரம் என்கின்றார்.

"மனமாரச் சொல்கிறேன். இன்றைய நிலையில் பாவங்களில் பெரிய பாவம் குற்றங்களில் முதல் குற்றம் எது என்று என்னைக் கேட்டால் விபசாரம், கொள்ளை, கொலை என்று எவ்வெவற்றையோ சொல்லமாட்டேன். ஆடம்பர வாழ்க்கை என்ற ஒன்றைத்தான் சொல்வேன். ஏன் தெரியுமா?

விபசாரம், கொள்ளை, கொலை முதலியன ஒரு சிலரைத்தான் அழிக்கின்றன. ஆனால் ஒரு சிலருடைய ஆடம்பர வாழ்க்கை எத்தனையோ ஏழை மக்களின் அமைதியான வாழ்க்கையைப் பாழ்படுத்தி அல்லல் விளைவிக்கின்றது.''

—தங்கைக்கு, பக். 36

ஆடம்பரம் தடுக்கப்பட வேண்டிய ஒன்று என்பது டாக்டர் மு. வ. அவர்களின் கருத்து.

''ஏழை மக்களின் வாழ்க்கையை நிலையை உயர்த்துதல் உணவு, உடை, தொழில், கல்வி ஆகிய அடிப்படைத் தேவைகளை எல்லோர்க்கும் அமைத்துத் தருதல் இவைகளைச் செய்யக் காலம் ஆனாலும் ஆகட்டும். போட்டிக்கும் பூசலுக்கும் குறைகளுக்கும், குற்றங் களுக்கும் வழி அமைத்துத் தருகின்ற இந்த ஆடம்பரங் களையாவது தடுக்கலாமே! இதற்கு ஒரு சட்டம் பிறப்பிக்க ஒருவர் துணிவாரானால் அவரைத்தான் நாட்டின் முதல் தொண்டர் என்று நான் போற்றுவேன்.''

—தங்கைக்கு, பக். 37

ஆடம்பரப் போக்கினை விரும்புதலே உண்மையான பிற்போக்கு என்று மொழிகின்றார்.

''எந்த அளவிற்கு ஆடம்பர ஏணியில் ஏறி நிற்க முடியும் என்றுதான் பெண்கள் முயல்கின்றார்கள். ஆடம்பரப் போக்கு இல்லை என்று எண்ணும் தாழ்வு மனப் பான்மை பெண்கள் பலரிடம் இயல்பாக உள்ளது. இதுதான் உண்மையான பிற்போக்கு என்பது என் கருத்து.''

—தங்கைக்கு, பக். 38

உலகில் உள்ள மற்றொரு குறை மூடநம்பிக்கை. இந்த மூடநம்பிக்கையையும் வெறுக்கின்றார் டாக்டர் மு. வ.

"மற்றவர்களைக் கெடுத்துத் தான் வாழ வேண்டும் என்பதுதான் கெட்ட தன்னலம். மற்றவர்களும் வாழத் தானும் வாழ வேண்டும் என்பது நல்ல தன்னலம். தனக்குமட்டும் நல்ல காலம் வரவேண்டும் என்பது கெட்டது. நாட்டுக்கே நல்ல காலம் வரும் என்பது நல்லது. அதனால்தான் மூடநம்பிக்கைகளை நான் வெறுக்கிறேன்."

—அகல் விளக்கு, பக். 207

புதிய உலகம்

இவ்வாறாக உலகில் உள்ள குறைகளைக் கூறி அவற்றை நிறைவாக்குவதற்கு உரிய முறைகளைக் கூறுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை. ஒரு புதிய உலகம் காணவும் விழைகின்றது அவர் உள்ளம்.

**வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்**
**திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்**
**உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்**
**ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்.**

— கம்ப; பால; நாட்டுப் படலம்: 53

இது கம்பன் காண விழைந்த புதிய உலகம். டாக்டர் மு. வ. அவர்கள் காண விழைந்த உலகம் பொருட் போராட்டம் இல்லாத உலகம். பணவேட்டை இல்லாத ஓர் அமைப்பையே விரும்பினார்.

"பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்னும் நிலைமை போகவேண்டும். பொருள் பற்றிய பூசல் உலக அமைப்பில் இருக்கக் கூடாது. 'பொருளில் லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று மாறிய நிலை வந்துவிட வேண்டும்."

—அன்னைக்கு, பக். 26

"இதுவரை இருந்த உலக அமைப்பு வேறு. இனிவரப் போகும் புத்துலக அமைப்பு வேறு. பழைய உலகத்தில் பொதுமக்கள் பொருளாதாரப் போராட்டத்தில்

சிக்குண்டவர்கள்... இனி அவர்களை அந்தக் கடலில் தத்தளிக்கவிடும் கொடுமை இருக்காது. பொருட் போராட்டம் ஒழிந்து அறப்போராட்டம் ஒன்றே நிற்க வேண்டிய அமைப்பே புத்துலக அமைப்பாகும்.''

—அரசியல் அலைகள், பக். 116 - 117

இப்படித் தாம் காண விழையும் புதிய உலகத்தின் அமைப்பை வெளிப்படுத்துவதோடு மட்டும் அமைந்து விடாமல் அந்தப் புத்துலக உருவாக்கத்திற்குரிய வழியினையும் கூறிச் செல்கின்றார்.

'' ஆகவே இன்று அறிஞர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமை தனிமனிதரைத் திருத்துவது அல்ல; சமுதாயத்தைத் திருத்துவதே ஆகும். பொருட்பற்றைப் போக்குவது அல்ல; பணவேட்டையைப் போக்குவதே ஆகும்.''

—அறமும் அரசியலும், பக். 49.

இந்த உருவாக்கமும் உடனே செயலாக்கம் பெறும் என்று எதிர்பார்க்க வேண்டியதில்லை. அது படிப்படியாகத்தான் நடைபெறும் என்பதை,

'உலகத்தை உடனே மாற்றிவிட முடியாது. படிப்படியாகத்தான் மாற்ற முடியும்.'

என்ற பகுதியின்வழி புலப்படுத்துகின்றார். இந்த நம்பிக்கை அவர்க்கு இருப்பதால்தான் உலகினைத் திருத்த நம்மால் இயன்ற கடமையைச் செய்வோம் என்கின்றார்.

'' உலகைத் திருத்த நம் பங்கு முயற்சி செய்வோம். பணவேட்டையும் புகழ்வேட்டையும் அவற்றால் ஆகிய பலவகை ஏக்கங்களும் கவலைகளும் இல்லாமல் சமுதாயம் சீராக அமைவதற்குரிய வகையில் அறிவை வளர்ப்போம். அறநெறியைப் பரப்புவோம். உடனே பயன்காண முடியாமல் போகலாம். கவலை வேண்டா; எதிர்கால தன்மையைக் கருதிக் கடமையைச் செய்

வோம். அங்கங்கே நல்ல விதைகளைத் தூவிச் செல்வோம். அதுவும் இயலாத நிலையானால் இயன்ற வரையில் நிலத்தைப் பண்படுத்திவிட்டுச் செல்வோம். அது நம் கடமை. நல்ல கடமையை உணர்ந்து செய்வதே நல்வாழ்க்கை.''

—மண்குடிசை, பக். 504

**சமுதாயம்**

டாக்டர் மு. வ. அவர்கள் சிறந்த சமுதாயச் சிந்தனையாளர். அவர் சிந்தனை சமுதாயச் சிக்கல்களைத் தீர்ப்பதிலேயே ஆழ்ந்து கிடக்கிறது. எனவேதான் அவர்தம் இலக்கியங்கள் சமுதாயச் சிக்கல்களையே பாடுபொருளாகக் கொண்டுள்ளன. சமுதாயச் சிக்கல்களைச் சிந்தையில் கொண்டு அவற்றைத் தீர்க்கும் நெறிகளை வெளிப்படுத்துபவர்களாகவே அவர்தம் இலக்கிய மாந்தர்கள் காட்சி தருகின்றனர். மு. வ. அவர்களின் நாவல்களுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள உறவினையும் உரிமையினையும் பற்றி டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்கள்,

'' டாக்டர் மு. வ. வின் நாவல்களையும் சமுதாயத்தையும் தனித்தனியே பிரித்துப் பார்க்கவே இயலாது. மிக மேலான அறிவு நிலையில் நிற்கும் சான்றோராயினும் சமுதாயத்தை எவ்வளவு கூர்த்த விழிகளோடு இவர் நோக்குகிறார் என்பதை இவருடைய நாவல்களே தெளிவாகக் காட்டும்''

—தற்காலத் தமிழ் இலக்கியம், பக். 39

என்கின்றார்.

டாக்டர் மு. வ. அவர்கள் சிறந்த சமுதாய மருத்துவர். ஒரு மருத்துவர் நோயாளியின் உடலை நன்கு சோதனை செய்து அவன் உடல் நோயை அறிந்து கொள்வது போல மு.வ. அவர்களும் சமுதாய அமைப்பை — அதன் நோய்களை நன்கு தெளிந்துள்ளார்.

"இன்றைய சமுதாயம் ஒரு நாகரிகக் காடு. இங்கே புலிகளும் ஓநாய்களும் ஏமாற்றி வாழ்கின்றன. மான்களும் முயல்களும் ஏமாந்து வாடுகின்றன. இந்தப் பொல்லாத காட்டுக்குத் தேவையானவை கத்தியும் துப்பாக்கியுமே — செல்வமும் செல்வாக்குமே. அறமும் உண்மையுமல்ல. நல்ல வழியில் உறுதியாக நிற்க வேண்டும் என நினைப்போர் இந்தப் பொல்லாத சமுதாயத்தில் மகிழ்ச்சியாகவே வாழவே முடியாது. ஏமாந்து ஏமாந்து வாடிவாடிச் சாகவே முடியும்"

— வாடா மலர், பக். 158

என்ற தானப்பனின் கூற்றில் சமுதாய அமைப்பை விளக்குகின்றார். மண்குடிசை நாவலில் சமுதாயத்தை மண்குடிசை என்று குறிப்பிடுகின்றார்.

"இன்று உள்ள சமுதாயம் மண்குடிசை போன்றது. அதில் எலிகள் வளைதோண்ட முடிகிறது. பெருச்சாளிகள் கடைக்காலையே தோண்டுகின்றன. பல்வகைப் பூச்சிகளும் குடிபுகுகின்றன. எல்லாம் சேர்ந்து குடிசையைப் பாழாக்க முடிகிறது. மண்குடிசையாக உள்ள வரையில் இவைகளைத் தடுக்க முடியாது. ஒன்று, குடிசையை விட்டு இயற்கையோடு இயற்கையாய்க் குகையில் தங்கி வெட்ட வெளியில் திரிய வேண்டும், அல்லது ஒழுங்கான கல்வீடு கட்டி வாழ வேண்டும். அப்போது எலிகள் முதலியன தோன்றி வளர முடியாது."

— மண்குடிசை, பக். 503

சமுதாய அமைப்பை ஆய்ந்தவர் அதில் உள்ள குற்றங்களுக்கு அதன் அமைப்பே காரணம் என்று கூறுகின்றார்.

"வாழ்க்கையில் நல்ல அமைப்பு இல்லையானால் கெட்ட சூழலுக்கு அடிமையாவது யார் குற்றம்? அரசியல் அமைப்பின் குற்றமே ஒழிய ஒரு சிலரின் குற்றம் அல்ல.

உலகத்தின் குற்றமே தவிர துன்பத்திற்கு உள்ளான வரின் குற்றம் அல்ல.''

— செந்தாமரை, பக். 81—82

என்ற பகுதியில் இதனைச் சுட்டுகின்றார். சமுதாயம் திருந்தாமல் இருப்பதற்குக் காரணங்களை ஆய்கின்றவர், வறுமை, சொல்வேறு செயல்வேறு என்ற இரட்டை வாழ்க்கை, உழைப்புக்கும் உண்மைக்கும் மதிப்புத் தராமல் வேறு எதுஎதற்கோ மதிப்புத் தருதல், போட்டிக்கும் ஏக்கத்துக்கும் இடம் தரல் முதலியவைகளே காரணங்கள் என்று கூறுகின்றார். இவை எல்லாம் இல்லாத ஒரு சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்பதே அவர் உள்ள விழைவு.

‘‘உலகம் ஒரு பக்கம் போலியான இரக்கம் காட்டுகிறது. மற்றொரு பக்கம் எதிர்பாராமல் கெட்டவர்களை மேன்மேலும் கெடுத்துக் கொண்டே இருக்கிறது. வறுமைதான் காரணமாக இருக்க வேண்டும்.''

— மலர்விழி, பக். 55

‘‘நம்புவது வேறு நடப்பது வேறு. பெரியபெரிய உத்தமர்கள் பிறந்தும் திருந்த முடியாமல் நாடு இருப்பதற்குக் காரணம் மக்களிடையே இந்த இரட்டை வாழ்க்கை வளர்ந்ததுதான்.''

— மண்குடிசை, பக். 61

‘‘உழைப்புக்கும் உண்மைக்கும் தவிர வேறு எதற்கும் மதிப்பு இல்லாமல் போனால் உலகில் குற்றங்கள் குறையும்.''

— மண்குடிசை, பக். 436

‘‘போட்டிக்கும் ஏக்கத்துக்கும் இடம் இல்லாதபடி சமுதாயம் அமைப்பதுதான் கெட்டவர்களைத் திருத்த வழி.''

—மண்குடிசை, பக். 440

"ஊருக்கு ஒரு காந்தியும் திருவள்ளுவரும், புத்தரும் பிறந்தாலும், இந்த உலகத்தைத் திருத்த முடியாது. சீர்ப்படுத்த முடியாது. ஆனால் வறுமையை ஒழித்து விட்டால்தான் காந்தீயமும் திருக்குறளும் அன்புநெறி யும் வாழ முடியும்."

— கரித்துண்டு, பக். 57

சமுதாயத்தின் குறைகளைக் கண்டு நெஞ்சம் குமுறி அவற்றை நிறைவாக்க வழிவகுத்துக் கொடுக்கும் இப் பகுதிகள் அனைத்தும் அவரைச் சிறந்த அறவோராக அன்றோ உணர்த்தி நிற்கின்றன. சமுதாயச் சிக்கல் களையும் தீர்வுகளையும் காண்பதோடு அமைந்து விடாமல் நல்லதொரு சமுதாயம் காணவும் விழைகின்றார். எனவே இன்று உள்ள சமுதாயம் அழிந்து புதியதொரு சமுதாயம் ஏற்பட வேண்டும் என்பது இவர் கருத்து.

"ஓ, ஓ! நீ கொடுக்கும் காசு அவர்களைக் காப்பாற்ற முடியுமோ! ஊரே தீப்பற்றி எரியும்போது உன்னைப் போல் நாலைந்து பேர் சிறுசிறு குவளைகளில் தண்ணீர் கொண்டுபோய் வேகிற மூங்கில்களை நனைப்பதால் பயன் என்ன? அதைவிட ஊர் நன்றாக எரிந்து சாம்பலாகட்டும். குடிசையும் அரண்மனையும் ஒன்றாகச் சேர்ந்து பொசுங்கட்டும். அந்தச் சாம்பலின் அடிப்படையின் மேல் புதிய வீடுகளை ஒரே ஒழுங்காகக் கட்டுவோம் என்றிருப்பவனே அறிவாளி."

— பெற்றமனம், பக். 141—142

இப்படிப் புதியதாக அமைக்கும் சமுதாயத்தினை,

"வயிறு வளர்ப்பது பற்றியும் குடும்பம் வாழ்வது பற்றியும் கவலை இருக்கக்கூடாது. உழைக்கக் கையும் காலும் இருந்தாலும் உயிர் வாழ உரிமையும் உண்டு என்ற நிலை நாட்டில் ஏற்பட வேண்டும். பிறந்தவர்கள் எல்லோரும் ஏதாவது தொழில் செய்து பிழைக்க முடியும் என்ற கட்டாயப் பொருளாதார நிலைமை ஏற்பட வேண்டும். இப்போது கட்டாய வயிறு, கட்டாயக்குடும்பம்,

கட்டாயக் கல்வி, கட்டாய இராணுவம் என்று என்னென்னவோ இருக்கின்றன. ஆனால் கட்டாய உணவு, கட்டாயக் குடும்பம், கட்டாய உடை, கட்டாய வீடு, கட்டாயப் பொழுது போக்கு, கட்டாய உழைப்பு என்ற அமைப்புகள் வரவில்லை. அதனால்தான் எப்படியாவது வாழ வேண்டும் என்ற கவலை ஒவ்வொருவரையும் வாட்டுகிறது. எப்படியும் வாழ முடியும் என்ற நம்பிக்கை உள்ள சமுதாயமாக அமைக்க வேண்டும்'' (கயமை, பக். 105—106) என்று கூறுகின்றார். இன்னனம் சமுதாயத்தில் புதிய மாறுதலை ஏற்படுத்த விரும்பும் அவர் அச்சமுதாயத்திற்கு வேண்டிய கால்கோள் என்ன என்பதையும் கூறிச் செல்கின்றார். சமுதாய வளர்ச்சிக்குத் தூய அன்பு, அறிவின் தெளிவு, தூய உடல் ஆகிய மூன்றும் இருந்தால் போதும் என்று மொழிகின்றார்.

''சமுதாயம் நன்கு வளர்வதற்கு உண்மையான அன்பு வேண்டும். தூய உடல் வேண்டும்; அறிவின் தெளிவு வேண்டும். இந்த மூன்றும் ஒவ்வொருவரும் பெறும் வகையில் ஈடுபட்டால் எதிர்காலத்தில் போட்டியும் குழப்பமும் ஆரவாரமும் இல்லாமல் மக்கள் அமைதியாகவும் இன்பமாகவும் வாழ முடியும்.''

—வாடா மலர், பக். 231

சமுதாய வளர்ச்சிக்குத் தேவைப்படும் இம்மூன்றன் தன்மைகளையும் கூட டாக்டர் மு. வ. விளக்கிச் செல்கின்றார். அன்பின் தேவையை,

''இந்த உலகத்தில் பொருள் இல்லாமல் வாழ்ந்தாலும் வாழலாம். அன்பு செலுத்தும் உயிர் இல்லாமல் வாழக்கூடாது''

என்பதனால் உணர்த்துகின்றார்.

''அன்பு வாழ்வை இயக்கும் பெருஞ்சக்தி. எவ்வளவு தடைகளையும் கடந்து வெல்லும் ஆற்றல் அன்புக்கு உண்டு''

என்பதை உணர்ந்தவர் — உணர்த்தியவர். வாழ்க்கையில் விழிப்பினை ஏற்படுத்தும் ஆற்றல் அறிவிற்கு உண்டு என்பதை,

"அறிவு வளர வளர வாழ்க்கையில் விழிப்பும் தயக்கமும் மிகுதியாகின்றன"

என்பதன் மூலம் உணர்த்துகின்றார்.

அடுத்ததாக அவர் கருதுவது உடல். இந்த உடல் தூய்மையானதாக நோயற்றதாக இருத்தல் வேண்டும். நோயற்ற உடலையே அவர் தூய உடலாகக் கருதுகின்றார். மனித உடல் நோய்களுக்கு ஆட்படும் நிலைக்குக் காரணம் நெடுநேரம் உட்கார்ந்திருப்பதே என்பது அவர் கொள்கை.

"நெடுநேரம் அமைதியாக உட்கார்ந்திருக்கும் உயிர் வேறு எதுவும் இல்லை. பறவையும் இல்லை. விலங்கும் இல்லை. மனிதர் மட்டுமே நெடுநேரம் உட்கார்ந்திருக்கிறார்கள். அதனால்தான் மனிதர்க்கு மட்டும் நோய்கள் பல ஏற்படுகின்றன. பறவை விலங்குகளுக்கு அவ்வளவு நோய்கள் இல்லை."

— மண்குடிசை, பக். 93

"உட்கார்ந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தால் உடம்புக்குக் கெடுதி".

— மண்குடிசை, பக். 93

உட்கார்ந்திருந்தால் உடல்நலம் பாதிக்கப்படும் என்பதை உணர்த்தியவர், உணர்ச்சி வசப்படுவதாலும் அது பாதிக்கப்படும் என்பதை, "விருப்பு வெறுப்பு உணர்ச்சிகள் பொல்லாதவை. உணர்ச்சி உடல் உரத்தைக் குறைத்து விடும். ஆகையால் என்ன காரணத்தாலும் உணர்ச்சி வயப்படக்கூடாது" (மண்குடிசை, பக். 234) என்பதனால் தெளிவுறுத்துகின்றார். எனவே மனிதன் நோய் குறைந்த உடம்பும் கவலை குறைந்த மனமும் பெறுவதற்கு வழி தேட வேண்டும் என்று மொழிகின்றார்.

## சாதி ஒழிப்பு

சமுதாய முன்னேற்றத்திற்குச் சாதி ஒரு தடை என்பது மு. வ. அவர்களின் கருத்து. சாதி வேற்றுமைகள் பொய்யானவை. அவற்றை ஒழிக்க வேண்டும் என்பது அவர் கண்ட உண்மை.

> "சாதி முதலான வேறுபாடுகள் உண்மையானவை அல்ல; பொய்யானவை; அவற்றை ஒழிப்பது கடமை தான்."

எனவேதான் சாதி சமய வேறுபாடுகளை மறக்கவும் புறக்கணிக்கவும் கற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்துகின்றார்.

> "சாதி சமய வேறுபாடுகளை மறக்கக் கற்றுக் கொள்ள முடியாவிட்டால் புறக்கணிக்கக் கற்றுக்கொள்"
>
> — தம்பிக்கு, பக். 15

இன்று நாட்டு ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் தடையாக இருப்பது சாதிக் கொள்கையே ஆதலின் தாமாக வராத மாற்றத்தைச் சட்டத்தால் மாற்ற வேண்டும் என்று வலியுறுத்துகின்றார்.

> "சாதி ஒரு பொய்; சாதி வேறுபாடு பொய்யின் அடிப்படையில் நிற்பது. அதனால்தான் அறிவு வளர வளர நாகரிகம் வளர வளரச் சாதி இருக்குமிடம் தெரியாமல் மறைகிறது. அப்படிப்பட்ட பொய்யான வேறுபாட்டைச் சட்டத்தால் அரைநாளில் மாற்றி விடலாம்."
>
> — தம்பிக்கு, பக். 21

சமுதாயத்தில் அவர் காணும் சாதி இரண்டு. அவையும் பண்பின் அடிப்படையில் வாழ்க்கையின் அடிப்படையில் கண்டன.

> "உன் சாதிப் பெண்ணாகப் பார்த்து மணந்துகொள். முதலில் நீ என்ன சாதி என்று எண்ணிப்பார். இப்படித் தான் வாழ வேண்டும் என்ற சாதியா? எப்படியாவது

வாழ வேண்டும் என்ற சாதியா? என்று தெரிந்துகொள். பிறகு அதே சாதிப்பெண்ணைத் தேடு''

— அல்லி, பக். 287

என்ற பகுதி இப்படித்தான் வாழ வேண்டும் என்ற ஒரு சாதி. எப்படியாவது வாழலாம் என்ற ஒரு சாதி என்ற இரண்டு சாதி மட்டுமே என்பதை அறிவுறுத்துகின்றது.

### அமைதிக்கு வழி காணல்

உலகத்தில் குழப்பம் ஒழியவும், அமைதி தோன்றவும், சமுதாயம் திருந்தவும் போட்டி, பூசல், பகை இவற்றை ஒழிக்க வேண்டும் என்று நவில்கின்றார்.

"......ஆகவே போட்டி பூசல் பகை இவற்றிற்குக் கல்வியிலும் இடம் இல்லாமல், விளையாட்டிலும் இடம் இல்லாமல் கைத்தொழிலிலும் இடம் இல்லாமல் செய்தால்தான் அரசியல் திருந்தும். சமுதாயம் திருந்தும். இவ்வாறு போட்டி பூசல் பகையை ஒழித்தால் தான் வன்பு தேயும்; அன்பு வளரும்; உலகத்தில் குழப்பம் ஒழியும்; அமைதி பெருகும்''

— வாடாமலர், பக். 226

நாட்டின் அமைதிக்குக் கேடு விளைவிக்கும் போரை இவர் மிகவும் வெறுக்கிறார். மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட கருவிகளால் அவனே அழிதல், அதன் செயல்களுக்குப் போர் முறை என்று பெயரிடுதல் ஆகிய அவலநிலைகளைக் கண்டு நெஞ்சம் குமுறுகின்றார் டாக்டர் மு. வ. அந்தக் குமுறலின் வெடிப்பை,

"புலி சிங்கங்களால் அழிந்தாலும் கவலை இல்லை. நாய், நரிகளால் அழிந்தாலும் கவலை இல்லை. கண்ணுக்குத் தெரியாத காலரா மலேரியாக் கிருமிகளால் அழிந்தாலும் கவலை இல்லை. மனிதனே பெருமை கொண்டு அறிவால் கண்டு படைத்த கருவி

அழிவதா? இது என்ன நாகரிகம். என்ன அரசியல்! என்ன விஞ்ஞானம்! வெறிபிடித்த கூட்டம். அதன் செயல்களுக்குப் போர்முறை என்று பெயரா?''

— அந்த நாள், பக். 121

என்ற பகுதி பிரதிபலிக்கின்றது. போர் என்ற பெயரால் உலகத்தைப் பாழாக்குகின்றவர்களை விலங்குகள் என்று கருதுகின்றார்.

''எதிரிகள் யாராக இருந்தாலும் போர் என்ற பெயரால் உலகத்தைப் பாழாக்குகின்றவர்கள் பொல்லாத விலங்குகள். அவர்களை மனிதர்கள் என்று சொல்ல முடியுமா?''

— அந்த நாள், பக். 136

போர் இல்லாத அமைதியான ஓர் அமைப்பைக் காண வேண்டும் என்றால் கலைஞர்கள் மாற வேண்டும். கலைதான் பொதுமக்கள் மனத்தை மாற்றக்கூடிய ஆற்றல் வாய்ந்தது என்கின்றார்.

''கலைஞர்கள் முதலில் மாற வேண்டும். கல்வி நிலையங்களில் நாட்டு வரலாறு, நாடகம், இசை, ஓவியம் முதலான எல்லாத் துறைகளிலும் போர் என்றால் அநாகரிகம் என்ற பாடம் அடிப்படையாக அமைய வேண்டும்.''

— அந்த நாள், பக். 89

''பொதுமக்கள் மனத்தைக் கலைதான் மாற்ற முடியும். கலையில் பாதிப்பேர் போர்ப் பேயை வழிபடுவதால் மனம் மாறுவதும் அருமைதான். ஆனால் நான் சொல்வது அதே அடிப்படையை வைத்துக் கொண்டு தான். கலைஞர்கள் மனம் மாறினால் கலையும் மாறும்; பொது மக்களின் மனமும் மாறும். கலைஞர்கள் போரைப் புகழக் கூச வேண்டும்; படிக்கக் கூச வேண்டும். நாடக மேடைகளில் நாடகமாக்கிப்

போர்த்தலைவனைப் புகழக் கூச வேண்டும். ஓவியமாக்க, சிற்பமாக்க, மற்றக் கலைகள் ஆக்கக் கூச வேண்டும்.''

— அந்த நாள், பக். 88

போர்க் குழப்பங்களிலிருந்து மக்களின் உயிர்களைக் காப்பாற்ற ஒரு புத்தகம் தேவை. ஒரு கல்லூரி தேவை. இவை இரண்டும் இல்லாத நிலையைக் கண்டு மனம் வெதும்பும் டாக்டர் மு. வ. அவர்களை — அறவோர் மு. வ. அவர்களை,

''பணத்தைக் காப்பாற்றுவதற்குதானே பெரிய பெரிய சட்டப் புத்தகங்கள் எழுதி அச்சிட்டு, அவற்றைப் படிக்கப் பெரிய பெரிய கல்லூரிகள் ஏற்படுத்தியிருக்கின்றார்கள். உயிரைக் காப்பாற்றுவதற்கு — போர்த் தொல்லையிலிருந்து — போர்க் குழப்பங்களிலிருந்து மக்களின் உயிரைக் காப்பாற்றுவதற்கு ஒரு புத்தகமும் காணோம். ஒரு கல்லூரியும் காணோம்''

— அந்த நாள், பக். 124

என்ற 'அந்த நாள்' பகுதி படம் பிடிக்கின்றது.

### வாழ்க்கை

டாக்டர் மு. வ. அவர்கள் குடும்ப வாழ்க்கையை மிகவும் மதித்துப் போற்றும் பண்புடையவர். இதனை,

''எனக்கு ஆணும் பெண்ணுமாகக் குடும்பங்கள் அன்பாக வாழ வேண்டும் என்பதில் ஆசை உண்டு. ஏன் என்றால் கணவனும் மனைவியுமாக அன்பாக வாழும் வாழ்க்கை இல்லை என்றால் காட்டில் உள்ளதைவிட நாட்டில் கொடுமையான விலங்குத்தன்மை இருக்கும். அதாவது உலகத்தில் பாதிப்பேர் பைத்தியக்காரர்களாக இருப்பார்கள். ஆகையால் எப்போதுமே நான் காதல் வாழ்க்கையை ஆதரித்து வருகின்றேன். தோட்டத்தில் ஒரு முல்லைக்கொடி செழித்து

வளர்ந்து பூத்தால் எப்படி மகிழ்ச்சி அடைவேனோ அப்படி எந்தக் குடும்பத்திலாவது அன்பாக வாழ்க்கை நடத்துவதைப் பார்த்தால் மகிழ்ச்சி அடைவேன்.''

— நெஞ்சில் ஒரு முள், பக். 389

என நெஞ்சில் ஒரு முள்ளில் அறவாழி என்ற மாந்தர் வழிப் புலப்படுத்துகின்றார். இப்படித் தாம் மிகவும் விரும்பிப் போற்றும் குடும்ப வாழ்க்கையில் குறைகள் மலிந்திருப்பதைக் கண்டு நெஞ்சம் நோகின்றார். எனவே தான் குடும்ப வாழ்க்கையைத் திருத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் பல நாவல்களில் குடும்ப வாழ்க்கையைக் கதைப் பொருளாக்குகின்றார்.

வாழ்க்கை என்பது என்ன என்பதை நெஞ்சில் ஒரு முள் என்ற நாவலில் மிக அழகாக விளக்குகின்றார்.

''மோட்சம், நரகம், சுவர்க்கம் இவைகளைப் பற்றிக் கவலைப்படாமல் வாழ வேண்டிய, முறைப்படி வாழ்ந்து அமைதியான இன்பம் பெற்று நரைதிரை மூப்பு வந்து உடலை விட்டு மறைவதே வாழ்க்கை.''

— நெஞ்சில் ஒரு முள், பக். 332 - 33

இப்படிப்பட்ட வாழ்க்கை உயர்வதற்கும் தாழ்வதற்கும் காரணம் மனமே.

''தன்னைக் கடந்து பெரிய வட்டம் போல் மனம் விரிவு அடையும் அளவிற்கு வாழ்க்கை உயரும்... தன்னையே சுற்றிக் குறுகும் அளவிற்கு வாழ்க்கை தாழும்... ''

— நெஞ்சில் ஒரு முள், பக். 333

இந்த வாழ்க்கை ஒரு கோயில். அங்கே அன்பு ஆர்வம் இவையே இலங்குதல் வேண்டும். நியாயம், நேர்மை இவை மதிப்பற்றவையாக இருக்க வேண்டும்.

''உள்ளன்பு இடம்பெற்ற இல்வாழ்க்கையில் நியாயம் நேர்மை இவற்றை மதிக்கலாமா? அது என்ன? நீதி

மன்றமா? வம்பர்கள் வழக்காடும் இடமா? அது ஒரு கோயில். அங்கே அன்பு ஆர்வம் இவைகளே இடம்பெற வேண்டும்.''

— கள்ளோ காவியமோ, பக். 88

வாழ்க்கை ஒரு கலை. அதில் வெற்றி பெற வேண்டும் என்று மொழிகின்றார்.

'' அவன் வாழ்க்கையை ஒரு கலையாகத் தேர்ந்தவன். திட்டமிட்டு வாழ்க்கையை நடத்துவதில் வல்லவன். பழைய பகை முதலியவற்றை மறந்து வாழ வேண்டும் என்று எனக்குச் சொன்னது அவனுக்கு வாழ்க்கையில் அனுபவமானது ''

— மண்குடிசை, பக். 24

என்று மண்குடிசையில் கூறுவது வாழ்க்கையை எவ்வாறு கலையாகப் போற்ற வேண்டும் என்பதைத் தெளிவுறுத்துகின்றது.

இப்படிக் கோயிலாகவும், கலையாகவும் விளங்கும் வாழ்க்கை, துளசிபோல் தூய எளிய வாழ்க்கையாகத் துலங்க வேண்டும் என்பது மு. வ. அவர்களின் விழைவு. வாழும் வாழ்வு எளிய வாழ்வாக இருந்தபோதிலும் அந்த வாழ்வு உயர்ந்த வாழ்வாகத் துலங்க வேண்டும். அந்த உயர்ந்த வாழ்வு வாழ்வதற்குரிய வகையையும் உணர்த்துகின்றார் அவர்.

'' உயர்ந்த வாழ்க்கை வாழ வேண்டுமானால், ஒன்று மனம் குறுகிக் குறுகித் தன்னையும் மறந்து போகும் நிலைக்கு வரவேண்டும். அல்லது மனம் விரிந்து எல்லையற்ற உலகத்தில் திரிய வேண்டும்.''

— பெற்ற மனம், பக். 282

இந்த வாழ்க்கையில் அறிவுக்கு இடம் இல்லை. அந்த அறிவு முழுக்க முழுக்க அறைபோக வேண்டும். அன்பும் நயமும்தான் அங்கே கோலோச்ச வேண்டும். அவற்றோடு உண்மையும் நேர்மையும் இருக்க வேண்டும்.

"கூர்த்த அறிவெல்லாம் கொள்ளை போக வேண்டும் என்று தாயுமானவர் சொன்னது கடவுளன்பரின் வாழ்க்கைக்கு மட்டும் அல்ல, காதலர் வாழ்க்கைக்கும் முழுவதும் பொருந்தும்."

— கள்ளோ காவியமோ, பக், 88

"உண்மையும் நேர்மையும் மட்டும் இருந்தால் குடும்பத் துக்குப் போதுமா? அவற்றால் மனங்களைப் பிணிக்க முடியாது. அன்பும் நயமும்தான் மனங்களைச் சேர்க்கும் ஆற்றல் உள்ளவை."

—அகல் விளக்கு, பக். 361

திட்டமிட்டு வாழும் வாழ்க்கையில் பொருள் வறுமைக்கு இடம் ஏற்படலாம். ஆனால் அன்பும் எளிமையும் நிறைந்த வாழ்வில் இன்பத்திற்குக் குறைவிருக்காது என்பது மு.வ. அவர்கள் தெளிந்த உண்மை. இதனை,

"என் சின்ன உலகத்தில் வீண்பேச்சு இல்லை. போலி உறவு இல்லை. உதடுகள் அசைந்தால் உள்ளமும் அசைகின்ற உலகம் எங்கள் உலகம். கண்ணீர் கலங்கினால் கருத்தும் கலங்குகின்ற உலகம் எங்கள் உலகம். போதும் எனக்கு இந்தச் சின்ன உலகம். இங்கே என் வாழ்க்கைக்கு வேண்டிய ஆறுதல் உள்ளது. இன்பம் உள்ளது. என் கூடு அவள் வாழும் குடிசை. விட்டுப் பறந்தால் இருவரும் ஒன்றாகவே பறப்போம். புகுந்தால் ஒன்றாகவே புகுவோம். சின்னக் கூடுதான். ஆனால் சமுதாயத்தின் மதிப்பு மானம் என்னும் தட்பவெப்பக் கொடுமைகள் தாக்காத வலிய அரண் இது. போதும் எனக்கு இது."

—கரித்துண்டு, பக். 207

என்னும் மோகன் பொன்னியோடு வாழ்ந்த வாழ்க்கையைக் கொண்டு புலப்படுத்துகின்றார்.

உயிராலும் உணர்வாலும் வாழும் வாழ்க்கையே உயர்ந்த வாழ்க்கை என்பதைப் பொன்முடி—ஆறுமுகம் இவர்களின் வாழ்க்கையைக் கொண்டு அறிவுறுத்துகிறார்.

"பொன்முடி! எப்படியோ வாழ்ந்தோம்! உலகத்தை வாசற்படிக்கு வெளியே விட்டுவிட்டு வாழ்ந்தோம். உலகப் பற்றை விட்ட இடம்தானே வீடு! நாம் வாழ்ந்த வாழ்வு வீட்டு வாழ்வுதான். பிறருடைய புகழையும் மதிப்பையும் பொருட்படுத்தாமல் வாழ்ந்தோம். உலகத்தை உள்ளே விட்டிருந்தால் வாழ்க்கை ஒரு பெருஞ்சுமையாகி விட்டிருக்கும். நமக்கோ வாழ்க்கை ஒரு நல்ல விளையாட்டாகவே முடிந்தது. இன்பம் துன்பம் இரண்டிலும் விளையாடினோம். வாடகை வீட்டில் குறைந்த வருவாயில் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தோம். பணம் நிறைந்த வாழ்க்கை இல்லையானாலும் மனம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தோம், போதும்!"

—அந்த நாள், பக். 101

இப்படி எளிமையாக—அன்பாக உயிரோடு உணர்வோடு கலந்து வாழும் வாழ்வில் விட்டுக் கொடுக்கும் தன்மை இருத்தல் வேண்டும். அப்போதுதான் வாழ்க்கை எளிதாக நடக்கும் என்று தங்கைக்கு உணர்த்துகின்றார்.

"ஒருவர் பொறை இருவர் நட்பு என்னும் நாலடியாரின் பொன்மொழி, வாழ்க்கையின் மந்திரமாக விளங்க வேண்டும். ஒருவேளை கணவனும் ஒருவேளை மனைவியும் விட்டுக் கொடுத்தால்தான் வாழ்க்கை எளிமையாக நடக்கும்."

—தங்கைக்கு, பக். 23

"அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கி நட. உரிமைக்காகப் போராடிக் காலங்கழிக்காதே."

—தங்கைக்கு, பக். 39

கணவன்—மனைவி இருவரும் இணைந்து பிணைந்து நடாத்தும் அன்பு வாழ்க்கையில் படிக்கவேண்டிய முதல் பாடமும் முடிவுப் பாடமும் விட்டுக் கொடுப்பதே என்பதனை,

"எவ்வளவு அறிவு இருந்தாலும் போரும் பிணக்கும் வளருமே தவிர, அன்பும் அமைதியும் வளர முடியாது. அதனால் கணவனும் மனைவியும் கற்கவேண்டிய முதல் பாடம் விட்டுக் கொடுப்பதுதான். அதுவே கடைசிப் பாடமும் ஆகும்."

—கள்ளோ காவியமோ, பக். 101

எனக் கள்ளோ காவியமோ நாவலில் முருகய்யா என்ற அறவோர் வாய்மொழி வழி தெளிவிக்கின்றார். விட்டுக் கொடுத்தலோடு பொறுமையும் அவசியம் என்பதை 'அகல் விளக்கில்' சுட்டுகின்றார்.

"பொறுமையும் விட்டுக் கொடுத்தலும் இல்லாவிட்டால் ஒரு பயனும் இல்லை. காதல் காதல் என்று ஒரே நிலையில் நின்று திருமணம் செய்து கொள்கிறார்களே அவர்களுக்கும் இந்தப் பொறுமையும் வேண்டும், விட்டுக் கொடுத்தலும் வேண்டும்."

—அகல் விளக்கு, பக். 291

வாழ்க்கையில் விட்டுக் கொடுத்தவரே வென்றவர் என்பதைத் தங்கைக்கு அறிவிக்கின்றார்.

"வலியப்பேசி விட்டுக் கொடுத்தவர் தோற்றுவிட்டவர் அல்ல. அவர்தான் அன்பு வாழ்க்கையில் வெற்றி பெற்றவர் என்கின்றார் திருவள்ளுவர். ஊடலில் தோற்றவர் வென்றவர் என்னும் அவருடைய கருத்து எவ்வளவு உயர்ந்த பண்பாட்டின் அடிப்படையாகப் பிறந்திருக்கிறது!"

—தங்கைக்கு, பக். 36

விட்டுக் கொடுத்து வாழ்வதைப் போலவே குற்றம் காணாமல் வாழ்வதும் அமைதிக்கு வழி வகுக்கும் என்பதை,

"காதல் வாழ்க்கையில் ஒருவகைக் கண்மூடி வாழ்வு வாழவேண்டும். குழந்தைபோல் வாழவேண்டும். தொடக்கத்தில்தான் ஆராய்ச்சி செய்யவேண்டும். பிறகு ஆய்வு வரைக்கும் ஆராய்ச்சியும் கூடாது. அறிவும் மிகுதியாகக் கூடாது. ஒருவர் குற்றம் ஒருவருக்குத் தெரியாத அன்பு வாழ்வு. கண்மூடி வாழ்வு வாழ வேண்டும்"

—கள்ளோ காவியமோ, பக். 104

எனக் கள்ளோ காவியமோ நாவலில் மங்கையின் வழி மொழிகின்றார். பொறுமையோடும், விட்டுக்கொடுத்தும், அன்போடும் பண்போடும், நடத்தும் எளிய வாழ்க்கையில் கணவன் மனைவி இருவரும் எண்ணும் எண்ணத்தாலும் ஒத்துப் போகவேண்டும். ஒத்து நடந்தால்தான் குடும்பத்தில் இன்பம் பெருகும். இல்லையேல் அங்குத் துன்பமே மிகும் என்பதை,

"ஆண் எண்ணுவதுபோல் பெண்ணும் எண்ண வேண்டும். இருவரும் ஒருங்கே உண்பதும் உறங்குவதும் பெருமை இல்லை. ஒருங்கே எண்ணவேண்டும் எண்ணத்தில் ஒத்திருந்தால் அதுதான் குடும்ப இன்பம். எண்ணத்தில் மாறுபட்டிருந்தால் அதுதான் குடும்பத் துன்பம்"

—கள்ளோ காவியமோ, பக். 104

என்று மங்கையின் மூலம் உணர்த்துகின்றார். எண்ணும் எண்ணத்தால், அன்பால், பண்பால் ஒன்றிய காலை உயவுக் குரல் கொடுக்கும் அன்றில் போன்று ஒன்றிய வாழ்வு நடாத்தும் வாழ்க்கையில்,

"கணவன் மனைவி என்றால் எதுவும் பிரிக்க முடியாது. எமன் தவிர யாரும் பிரிக்க முடியாது"

—மண் குடிசை, பக். 218

என்று கூறுகின்றார். அப்படி எனில் சில குடும்பங்கள் பிரிந்து வாழ்வதற்குக் காரணம் என்ன என்று வினாக்கணை தொடுப்போருக்கு,

" குடும்பத்தைப் பிரிப்பது இடம் அல்ல மனமே."

— மண் குடிசை, பக். 127

" அறுபது ஆண்டு ஒற்றுமையாக வாழ்ந்த வாழ்க்கையை ஒரு சிறு மனம் பொல்லாத மனம் பிரித்துப் பாழாக்கி விடும்"

— கள்ளோ காவியமோ, பக். 93

என மனமே காரணம் என்று பதில் குரல் கொடுக்கின்றார் எனவேதான் வாழ்க்கைக்குத் தேவையானது மனப் பொருத்தமே என்கின்றார். தொல்காப்பியனார் காதல் வாழ்க்கையில் ஈடுபடுவோருக்குப் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு முதலிய பத்துப் பொருத்தங்கள் தேவை என்று கூறியுள்ளார். ஆனால் டாக்டர் மு. வ. அவர்களோ — வாழ்க்கையை நன்கு தெளிந்த டாக்டர் மு. வ. அவர்களோ இந்தப் பொருத்தங்களைவிட மனப்பொருத்தமே முதன்மையானது என்று கருதுகின்றார்.

" ஆஸ்திரேலியாவைப் பற்றியும் அமெரிக்காவைப் பற்றியும் இமயமலையைப் பற்றியும், மிசிசிபியைப் பற்றியும், எக்ஸ்ரேயைப் பற்றியும் அணுக்குண்டைப் பற்றியும் அறியும் அறிவால் இல்வாழ்க்கையைச் செம்மையாக நடத்த முடியாது என்றும், மனத்தைப் பற்றி அறிந்து ஒழுகினால்தான் சீராக நடத்த முடியும் என்றும் விளக்கினேன். மற்றப் பொருத்தங்களைவிட மனப் பொருத்தமே முதன்மையானது என்றேன்."

— தங்கைக்கு, பக். 62

இத்தகைய ஆற்றல் வாய்ந்த மனம் பண்படுவதற்கு "ஆடம்பரம் ஆணவம், ஆரவாரம் இவைகள்தான் தனி

வாழ்க்கையில் மனம் பண்படுவதற்குத் தடைகள்'' என்று கருதுகின்றார்.

வாழ்க்கை இன்பமாக இல்லாவிட்டாலும் அதை வெறுத்து ஒதுக்கக் கூடாது. வெறுப்பு வம்பு எல்லாம் சேர்ந்து சேர்ந்து பலதுளிப் பெருவெள்ளமாய் வாழ்க்கைக்கே இடையூறாக ஆகி விடுவதை மெய்யப்பன் வாழ்க்கைவழி மண்குடிசையில் சித்திரிக்கின்றார்.

மேடும் பள்ளமும் நிறைந்த இந்த வாழ்க்கை எப்படி யாவது வாழலாம் என்று இருக்கக் கூடாது. திட்டமிட்ட வாழ்க்கை நடாத்த வேண்டும் என்பதை அகல் விளக்கில் அறிவிக்கின்றார்.

> ''கோடு போட்டு வாழ்க்கை நடத்துவது நல்லதுதானே அம்மா! போட்ட கோட்டில் நடப்பது எளிது அல்லவா? ஒரே கோட்டில் நடக்க வேண்டுமானால், வழி இல்லாமல் நடந்து போவதுதான் துன்பம். ஒற்றையடிப் பாதை ஒன்று இருந்தால் அதில் நடந்து போவதில் கவலையே இல்லை. ஒரு பாதையும் இல்லாத இடத்தில் இப்படி நடப்பதா? அப்படி நடப்பதா? வலக்கைப் பக்கம் திரும்பலாமா? இடக்கைப் பக்கம் திரும்பலாமா? இந்தத் திசையா? அந்தத் திசையா? என்று நூறு முறை தயங்கித் தயங்கிப் போக வேண்டும். அப்போதும் மனக்குறை தீராது. அல்லலாக முடியும். ஒற்றையடிப் பாதை இருந்துவிட்டால் போதுமே! கவலையில்லாமல் போகலாமே!''
>
> — அகல் விளக்கு, பக். 187

**கணவனுக்கு!**

இல்லாளர்கள் தத்தம் இல்லாளிடம் அளவிற்கு மீறி எதிர்பார்க்கக் கூடாது. போதும் என்ற மனத்துடன் வாழ்பவர்களாக இருக்கலாம். அதிகமாக எதிர்பார்த்தால் அதிகமாக ஏமாற்றத்திற்குள்ளாக வேண்டி வரும் என்று எச்சரிக்கின்றார்.

"உள்ளதைக் கொண்டு மகிழ வேண்டும். வியாபாரம் செல்வம் இவற்றில் மட்டும் அல்ல; மனைவியோடு வாழும் வாழ்க்கையிலும் இது வேண்டும். சில இளைஞர்கள் காலைமாலை இரண்டுவேளையும் பூசை கோயில் வழிபாடு எல்லாம் ஓயாமல் செய்து கடவுளிடம் நிறையப் பயன் எதிர்பார்த்து எதிர்பார்த்துத் திடீரென்று ஒருநாள் நாத்திகர் ஆகிவிடுகின்றார்களே தெரியுமா? அப்புறம் சாமியாவது பூதமாவது என்பார்கள். அதுபோல் மனைவியிடம் அளவுக்கு மீறிய அன்பு பணிவு அடக்கம் ஒழுக்கம் அழகு ஆர்வம் எல்லாவற்றையும் எதிர்பார்த்தாலும் இப்படித்தான் கடைசியில் ஏமாந்து வருந்த வேண்டி ஏற்படும்"

— அகல் விளக்கு, பக். 347

என்ற பகுதியில் எதிர்பார்ப்பு என்பது ஏமாற்றத்திற்கு அறிகுறி என்பதை உணர்த்துகின்றார். கணவன் மனைவியிடம் உள்ள குறைகளையே போற்றாமல் குணங்களையும் கண்டு அவற்றுள் மிகை நாடி மிக்க கொளள வேண்டும் என்பதை,

"உங்கள் (எதிர்கால) மனைவியிடம் குற்றம் காணும் போது குணத்தையும் காணுங்கள். மிகைநாடி மிக்க கொள்ளுங்கள்"

எனக் கரித்துண்டு நாவலில் நுவல்கின்றார்.

## மனைவிக்கு

கணவனுக்குக் கூறும் அறவுரைகளைவிட மனைவிக்குக் கூறும் அறவுரைகளே மிகுதி! இல்லத்தை ஆள்பவள் இல்லாளே ஆதலின் அவள் கடமைகளையே பெரிதும் வற்புறுத்துகின்றார். கணவனின் மனம் அறிந்து நடப்பவளே நல்ல மனைவி என்பதை,

"கணவன் கணவன் என்று வாயால் சொல்லிக் கொண்டிருப்பவள், கணவன் படத்தையே எந்நேரமும்

பார்த்துக் கொண்டிருப்பவள் சிறந்த மனைவி அல்ல. கணவனுடைய மனம் அறிந்து நடப்பவள் கணவனுடைய படத்தைப் பார்ப்பதோடு நிற்காமல் அவனையே பார்த்து மதித்து நடப்பவள் நல்ல மனைவி''

— மண்குடிசை, பக். 216

என்று மண்குடிசையில் மொழிகின்றார். மனைவி என்பவள் மந்திரியாகவும், வைத்தியராகவும், மனநோய் மருத்துவராகவும், செயலாளராகவும் குருவாகவும் திகழ வேண்டும் என்பதைக் குமரவேல்வழித் தெளிவுறுத்துகின்றார். ஒரு கணவன் மனைவியிடம் எதிர்பார்ப்பது அவளுடைய உண்மையான — ஆழ்ந்த அன்பையே என்பதை மெய்யப்பன் மூலம் படைத்துக் காட்டுகின்றார். மனைவி என்பவள் கணவனிடம் குற்றம் கண்டபோது அவனைத் திருத்தப் பாடுபட வேண்டும். அவனிடம் குறை இருந்தால் அந்தக் குறையை வெறுக்க வேண்டுமே ஒழிய அவனை வெறுக்கக் கூடாது. இப்படி அவனிடம் குறை கண்டு திருத்தும் முயற்சியில் ஈடுபடும்போது அந்த முயற்சி அளவானதாக இருக்க வேண்டும் என்று கூறுகின்றார்.

"கொஞ்சம் போராட வேண்டும். பிறகுவிட்டுக் கொடுக்க வேண்டும். அப்படி நடந்தால்தான் ஆண்களைத் திருத்த முடியும். அளவுக்குமேல் போராடவும் கூடாது. அளவுக்குமேல் விட்டுக்கொடுக்கவும் கூடாது. எதிலும் அளவு வேண்டும்; அளவு தெரிந்துகொண்டு நடந்தால் வாழ்க்கை துன்பம் இல்லாமல் போய்விடும்."

— நெஞ்சில் ஒரு முள், பக். 231-232

அப்படிப் போராடி அவனைத் திருத்த முடியவில்லை எனின் அவனை வெறுக்காமல், அவனுடைய இன்பத்தில் இன்பம் கண்டு துன்பத்தில் துன்பம் கொண்டு அவனுடைய அழிவில் அழிவதில் இன்பம் காண வேண்டும் என்பதை,

"கணவனைத் திருத்த முடியவில்லையா? அதற்காக அவனிடம் செலுத்த வேண்டிய அன்பைக் குறைத்துக் கொள்ளாதே; அவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைக் கைவிடாதே. ஒருவனை மணந்து கொண்ட பிறகு அவனுடைய இன்பதுன்பமே உன் இன்பதுன்பம். இன்பதுன்பம் மட்டுமல்ல. ஆக்கமும் அழிவும் கூட. அப்படியே இருவருக்கும் பொதுவாகக் கருத வேண்டும். கணவனுடைய அழிவில் நீயும் கலந்து அழிவதில் ஒரு மகிழ்ச்சி வேண்டும்"

—அகல் விளக்கு, பக். 350

என்ற பகுதியில் சுட்டுகின்றார். 'அன்புடைக் கணவர் அழிதகச் செயினும் பெண்பிறந் தார்க்குப் பொறையே பெருமை' என்ற கொள்கையினையுடைய தமிழ்ப் பெண்கள் மரபில் வந்த — வருகின்ற — ஒவ்வொரு தமிழ்ப்பெண்ணும் போற்றிக் காக்க வேண்டிய கொள்கைகளை இந்தப் பகுதிகளில் உணர்த்துகின்றார் அறவோர் மு. வ. இல்வாழ்க்கையில் ஈடுபட்ட ஒரு பெண்ணுக்குக் கணவனே முதன்மையானவன். மற்றவர்கள் யாவரும் அவனுக்கு அடுத்தபடியே. யார்யாரை எந்தெந்த நிலையில் வைத்துப் போற்ற வேண்டும் என்பதை,

"கணவனோடு வாழும் ஒருத்திக்குக் கணவனுடைய அன்பே முதன்மையானது; மக்கள் இரண்டாம் நிலையினர்; கணவன் பெற்றோரும் தன் பெற்றோரும் மூன்றாம் நிலையினர்; நண்பரும் உறவினரும் நான்காம் நிலையினர்; புகழும் மதிப்பும் ஐந்தாம் நிலையின; கலையும் பொழுதுபோக்கும் ஆறாம் நிலையின; தெருவாரும் ஊராரும் ஏழாம் நிலையினர்; இப்படியே மற்றவற்றையும் மற்றவர்களையும் முறைப்படுத்தி வைத்துக் கொள்"

— தங்கைக்கு, பக். 74

என்று தங்கைக்குக் கூறுகின்றார். கணவனையே முதன்மையாகக் கொண்டு அவன் உள்ளம் அறிந்தொழுகும்போது

அவனுக்கு இணங்கி நடப்பது தீமை என்றால் அப்போது அந்தத் தீமையை ஒழித்து அதை நன்மையாக்க வேண்டும் என்று உரிமை கொடுக்கின்றார்.

"அதாவது உள்ளம் அறிந்தொழுகும்போது ஒரு துறையில் கணவன் விருப்பத்திற்கு முற்றிலும் இணங்கி நடப்பது குடும்பத்திற்குத் தீமையாக இருந்தால் அப்போது இந்த அறிவுரையைக் கடந்து வாழ வேண்டும். கணவனுக்குக் கத்தரிக்காய் விருப்பம் என்றால் அதையே கறியாக்கலாம். ஆனால் அதுவே அவருடைய உடல் நலத்திற்கு ஆகாததாக இருந்தால் என்ன செய்வது? கிண்டி விளையாட்டால் உள்ளதை எல்லாம் இழந்து ஓட்டாண்டியாகிக் குடும்பம் அழிவதை விட அவருடைய மனத்தை மகிழ்விக்காமல் நின்று வெறுப்பைத் தேடிக் கொள்வதே நல்லது அல்லவா? அப்போதும் அவரைக் கிண்டிக்கும் அனுப்பாதபடி அன்பால் அவர் மனத்தை மாற்றுதல் நல்லது. முடியாதபோது அவருடைய வெறுப்பை வரவேற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றுவது கடமை அல்லவா? இல்வாழ்க்கைக்காகப் பொறுமை. ஆனால் அந்தப் பொறுமையால் இல்வாழ்க்கை கெடுவதானால்? உடம்புக்காக உணவு. அந்த உணவால் உடம்பு அழிவதனால் பட்டினியைப் போற்ற வேண்டாமா?"

—தங்கைக்கு, பக். 65—66

என்று தங்கையிடம் கேட்கின்றார். திருத்தப்பட வேண்டியவராக அல்லாமல் நல்லவராகவும், வல்லவராகவும் அமைந்து விட்டால்,

"மனைவி மூளைக்கே வேலை கொடுக்காமல் கண்ணை மூடிக்கொண்டு அவரைப் பின்பற்றி நடக்கலாம்"

— அகல் விளக்கு, பக்.296

என்று அச்சமற்ற வாழ்க்கைக்கு வழிவகுக்கின்றார்.

**பெற்றோர்க்கு**

கணவன் — மனைவியுமாக இல்வாழ்க்கை நடத்துபவர்கள் தம் குழந்தைகளை ஒழுக்கம் கெடாமல் வளர்க்க வேண்டும் என்பதைச் சீராளர் என்ற கதைமாந்தர் வழி அறிவிக்கின்றார்.

> "முயற்சி குறைவாகச் செய்தாலும் கவலை இல்லை. அளவுக்கு மேல் தவறான வழியில் முயற்சி செய்து பையனைக் கெடுத்துவிடாமல் இருந்தால் போதும். அப்படிச் செய்வதால்தானே ஒழுக்கம் மிகுந்தவர்களின் பிள்ளைகள் ஒழுக்கக் கேடர்களாய்ப் போகிறார்கள்"
>
> — பெற்ற மனம், பக். 233

குழந்தைகளை அளவுகடந்த அன்பு காட்டி ஆடம்பரமாக வளர்க்க வேண்டியதில்லை. அப்படி வளர்த்தலே பெரிய குற்றம். அந்தக் குற்றத்தைப் புரியப் பெற்றோர்க்கு உரிமை இல்லை என்பது அவர் கருத்து.

> "யார் என்ன சொன்னாலும் சொல்லிப் போகட்டும். பட்டிலும் பொன்னிலும் பழகும்படியாகக் குழந்தையை வளர்க்காதே. நம் நாட்டில் பட்டும் பொன்னும் பழக்கமாய்ப் போன ஆடம்பரங்கள் என்பது எனக்குத் தெரியும். நாம் பழகிவிட்ட ஆடம்பரத்தையும் விட்டுத் தொலைப்போம். நாட்டுப்புறங்களில் வெள்ளி மோதிரம் இல்லாமல் ஏங்கும் இளம் பெண்கள் எத்தனை பேர் என்று எண்ணிப்பார். ஆகவே நம் குழந்தையை ஆடம்பரமாக வளர்க்க நமக்கு உரிமை இல்லை என்று உணர வேண்டும்"
>
> —பெற்ற மனம், பக். 152

பெண்ணாகப் பிறந்தவர்கள் அனைவரையும் திருமணச் சிறைக்குள் அடைக்கத் துடிக்கும் பெற்றோர்க்கு,

> "பெண்ணாகப் பிறந்தவர்கள் எல்லோரும் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று பெற்றோர்கள் வற்புறுத்தக்கூடாது. தக்க கணவர் கிடைக்காத

பெண்கள் திருமணம் ஆகாமலே இருக்கட்டும் என்று விட்டுவிட வேண்டும். மணிமேகலை இல்லையா? ஆண்டாள் இல்லையா?''

— அகல் விளக்கு, பக். 348

என்பதை எடுத்துக் காட்டுகின்றார்.

**புதல்வர்க்கு**

பெற்றவர்கள் இருக்கும்போது புதல்வர்கள் அவர்களை விட்டுப் பிரிந்து வருதல் கூடாது. வந்தால் அழிய வேண்டியதுதான் என்பதைச் சந்திரன் வாழ்க்கை மூலம் சித்திரிக்கின்றார். புதல்வர்கள் பெற்றவர்களை அவமதித்துப் பிரிந்துவந்தால் தாய்க்குருவியை விட்டு நீங்கின குருவிக் குஞ்சுகளைப் போல் மற்ற விலங்குகளுக்கு இரையாக வேண்டி நேரிடும் என்பதை,

''குருவி அருமையாகக் கூடுகட்டிக் குஞ்சுகளைக் காப்பது போல் நம்முடைய பெற்றோரும் நமக்கு அருமையாக ஏற்பாடுகள் செய்து இருக்கிறார்கள். குஞ்சு நன்றாக இறக்கை முளைப்பதற்கு முன் கூட்டை விட்டு வெளியே வரத் தொடங்கினால் என்ன ஆகிறது பார்த்தாயா? விழுந்து விழுந்து இடர்ப்படுகிறது. தாய்க்குருவியாலும் காப்பாற்ற முடியவில்லை. கடைசியில் காக்கைக்கோ பூனைக்கோ இரையாகிறது''

— அகல் விளக்கு, பக். 253

என அகல் விளக்கில் அறிவுறுத்துகின்றார்.

**ஆண்களுக்கு**

ஓர் ஆண் ஒரு பெண்ணுடன் பழகும்போது எந்தவிதத் தடுமாற்றமும் இன்றி உள்ளத்தால் பழக வேண்டும் என்று கூறுகின்றார். தடுமாற்றமும் ஏமாற்றமும் தேவை இல்லை என்பதை,

''பெண்கள் இருவர் பழகினால் உடம்பைக் கடந்து உள்ளத்தின் உறவு கொண்டு பழகவில்லையா? (நீங்கள்)

ஆண்கள் இருவர் பழகும்போது மட்டும் உள்ளம் இல்லையா? ஏன் இந்தத் தடுமாற்றம் ஏமாற்றம் எல்லாம்?''

— அகல் விளக்கு, பக். 389

என்று அகல் விளக்கில் அறைகின்றார். இந்தப் பெண்களுடன் பழகும்போது அவர்தம் அன்பு கிடைக்கும் காலம் வரையில் அவர்தம் அழகு கண்ணுக்குத் தெரியாமலே இருக்க வேண்டும் என மொழிகின்றார்.

''பெண்ணன்பு பெறும் வரையில் பெண்ணழகு கண்ணுக்குத் தோன்றாமலே இருந்தால் நல்லது!''

— அகல் விளக்கு, பக். 391

குடும்ப வாழ்க்கைக்குப் பெண்ணைத் தேடும்போது ஓர் ஆடவன் முதலில் அவளிடம் தேட வேண்டியது குணம். அடுத்தது அறிவு. அடுத்தது அழகு என்று அறிவுறுத்துகின்றார்.

'' உனக்கு ஏற்ற பெண்ணைத் தேடும்போது அழகு முதல் தேவையாக இருக்கக்கூடாது. அறிவும் முதல் தேவையாக இருக்கக் கூடாது, இருக்க வேண்டியதில்லை. குணமே உன்னுடைய முதல் நாட்டமாக இருக்க வேண்டும். குணம் உண்டா? அறிவு உண்டா! என்று பார்த்து விட்டு அழகும் உண்டா? என்று பார் ''

— மலர்விழி, பக். 42

அழகை மட்டுமே கண்டு ஓர் ஆண்மகன் ஒரு பெண்ணைத் தன் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்பதை இதே நாவலில் மற்றோர் இடத்திலும் வற்புறுத்துகின்றார்.

'' நல்ல ஓவியக் கலைஞனைத் தேடும்போது அவனுக்கு நல்ல கண் பார்வை இருக்கிறதா? என்றே ஆராய வேண்டும். செவி நுட்பம் பெற்ற ஒரு குருடன் ஓவியக் கலைக்குத் தேர்ந்தெடுக்க முடியுமா? இசைக்

கலைக்குக் கண்பார்வை கட்டாயம் அல்ல. ஆனால் செவி நுட்பம் கட்டாயம் வேண்டும். அதுபோல் தன் வாழ்க்கையிலும் ஒரு நாள் இரண்டு நாள் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து குலாவுகிற உறவுக்கு — விபசார நட்புக்கு — அழகு கட்டாயம் வேண்டும். ஆனால் வாழ்நாள் முழுதும் பழகும் வாழ்க்கைத் துணைக்கு அன்புதான் முதலில் வேண்டியது. அழகும் இருந்தால் இருக்கட்டும். ஓவியக் கலைஞனுக்கு நுட்ப மான செவியும் இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் அதையே நாடித் தேர்ந்தெடுக்கக் கூடாது''

— மலர்விழி, பக். 42

வாழ்க்கைத் துணையைத் தேடுபவருக்கு மற்றொன்றும் கூறுகின்றார். அவன் தன் சாதிப் பெண்ணையே தனக்குத் துணையாக்கிக் கொள்ளுதல் வேண்டுமாம்!

"உன் சாதிப் பெண்ணாகப் பார்த்து மணந்து கொள். நீ என்ன சாதி என்று எண்ணிப் பார். இப்படித்தான் வாழ வேண்டும் என்ற சாதியா? எப்படியாவது வாழ வேண்டும் என்ற சாதியா? என்று தெரிந்து கொள். பிறகு அதே சாதியான பெண்ணைத் தேடு''

— அல்லி, பக். 287

என்று அவனுக்கு ஏற்ற அவளைத் தேர்ந்தெடுத்தற்குரிய வழிகளை மொழிகின்றார்.

**பெண்களுக்கு**

ஆண்களும் பெண்களும் பழகாமல் வாழ முடியாத காலம் இது ஆதலின் அவர்தம் பழக்கம் அளவோடு இருக்க வேண்டும் என்பதைப் பல இடங்களில் பெண் களுக்குப் புலப்படுத்துகின்றார்.

"ஆண்களோடு எப்படிப் பழகினாலும் ஆபத்துக்கு இடம் இருக்கும்.''

— அகல் விளக்கு, பக். 180

எனவே,

" ஒத்த வயதுள்ள ஆண்பிள்ளைகளோடு பழகுவதில் மிகமிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். உன் வாழ்வோ தாழ்வோ அதை ஒட்டித்தான் இருக்கிறது. பருவ உணர்ச்சி பொல்லாதது. அதைக் கடந்து பொது வான அன்போடு அண்ணன் தங்கைபோல் பழக முடியு மானால் பழகு. "

— அகல் விளக்கு, பக். 180

" ஆண் பெண் உறவு என்பது ஒரு நாளில் (உங்கள்) உணர்ச்சியால் முடிவு செய்யக் கூடியது அல்ல. அது வாழ்க்கை முழுவதையுமே மாற்றக் கூடியது. கவனித்துப் பொறுப்போடு நட. தங்கைபோல் பழக முடிந்தால் பழகு. இல்லையானால் பழகாதே "

— அகல் விளக்கு, பக். 181

என ஆண் — பெண் பழக்கம் அண்ணன் தங்கைபோல் இருக்க வேண்டும் என்று எச்சரிக்கை செய்கின்றார்.

திருமணம் ஆன பிறகு பெண்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை,

" ஆண்டாளைப் போல் மனிதர் யாரையும் மணந்து கொள்ள மாட்டேன் என்று சொன்னாலும் சொல்ல லாம், ஆனால் மீராவைப் போல் திருமணம் ஆன பிறகு கணவனைக் கைவிட்டுப் போகக் கூடாது "

— அகல் விளக்கு, பக். 348

என்றும் கூறுகின்றார்.

" ஆண்கள் எவ்வளவுதான் முற்போக்காக இருந்தாலும் சந்தேகப்படுவார்கள். ஆகையால் அவர்களின் எதிரில் அண்ணன் தம்பியுடனும் எந்த ஆடவனுடனும் நெருங்கிப் பழகக் கூடாது. பழைய பழக்கங்களையும் சொல்லக்கூடாது "

— அகல் விளக்கு, பக். 210

என்று தங்கைகளுக்கும், தமக்கைகளுக்கும் அறிவுரை கூறுகின்றார்.

பெண்கள் மதிப்பை ஒரு பொருளாகக் கருதக்கூடாது என்றும், தாழ்வு மனப்பான்மையும் சிறுமை மனப்பான்மையும் பெண்களுக்கு ஆகா என்றும்,

> "மற்றப் பெண்கள் மதிப்பைப் பற்றிக் கவலைப்படாமல் நீ அவர்களை விட மகிழ்ச்சியாக வாழ முடியும் என்று வாழ்ந்து காட்டு. அதுவே பெரிய செல்வம்."
>
> — அகல் விளக்கு, பக். 293

> "நான் ஏழை என்ற தாழ்வு மனப்பான்மையோடு சிறுமை மனப்பான்மையோடு போகாதே. நான் எளிய வாழ்க்கை வாழவல்ல உயர்ந்த பெண் என்று பெருமிதமாக எண்ணிக்கொண்டு போ. கண்ணகி, மணிமேகலை, க்யூரி அம்மையார், கஸ்தூரிபா முதலான உத்தமப் பெண்களின் நெறியை உணர்ந்து விட்டவள் என்ற உணர்வு மனப்பான்மையோடு போ. அப்படிப் போய்ப் பழகினால் ஒரு நாளும் நம் மனம் ஏக்கம் அடையாதே"
>
> — அகல் விளக்கு, பக். 294

என்ற பகுதிகளில் நவில்கின்றார். மேலும் பெண்கள் பணிவாகவும், அன்பாகவும் இருக்கவேண்டும் என்பதையும், தம்மிடம் உள்ள பிடிவாத குணத்தை மாற்றும் வல்லமை உடையவர்களாகவும் திகழ வேண்டும் என்றும் கூறுகின்றார். இதனை,

> "இளமையிலிருந்தே நீ அறிவும், திறமையும், அன்பும் பணிவும் உள்ள பெண்ணாக விளங்குவதைக் கண்டிருக்கிறேன் அல்லவா?"
>
> — தங்கைக்கு, பக். 5

> "பிறரிடம் கொள்ளும் விருப்பு வெறுப்புகளில் பிடிவாதம் காட்டாதே, இதில் பிடிவாதம் பெருந்தீங்கு உண்டாக்கும். 'பெண்கள் பிடிவாதமானவர்கள் நினைத்ததை முடிக்காமல் விடமாட்டார்கள்' என்று

பழிச்சொல் இருக்கிறது. அதை மாற்றிவிடு. அன்புக்காக விட்டுக் கொடுப்பவர்கள்தான் பெண்கள் என்பதை உன் வாழ்வில் புலப்படுத்து''

— தங்கைக்கு, பக். 26

என்று தங்கைக்குக் கூறும் அறவுரைகளிலிருந்து தெளியலாம். இனிச் சமுதாயத்தில் காணப்படும் குருட்டு வாழ்க்கை நிலையற்றதாக் இருக்க வேண்டுமானால் பெண்கள் நல்லறிவு உடையவர்களாக விளங்கவேண்டும் என்று கருதுகின்றார்.

'' பெண்களுக்கு நல்லறிவு வந்தால்தான் மூடநம்பிக்கை நாட்டை விட்டு ஒழியும். இல்லையானால் வீட்டுக்கொரு விவேகானந்தர் பிறந்தாலும் இப்படியேதான் குருட்டு வாழ்க்கை நிலையாக இருக்கும்''

— கள்ளோ காவியமோ, பக். 57

என மூடநம்பிக்கை ஒழிவதற்கும், குருட்டு வாழ்க்கை நிலையாமை உடையதாக ஆவதற்கும் பெண்களின் நல்லறிவே காரணம் என்பதைப் புலப்படுத்துகின்றார். பெண்கள் நல்லறிவு உடையவர்களாகத் துலங்குவதோடு ஒழுக்கம் உடையவர்களாகவும் இலங்குதல் வேண்டும். ஒழுக்கம் இரு கட்சியினராலும் போற்ற வேண்டிய பொது நெறி என்றாலும் பெண்கள் அதனை ஆண்களைவிட மிகுதியாகப் போற்ற வேண்டும் என்று கூறி அதற்குரிய காரணத்தையும் விளக்குகின்றார்.

'' ஆணின் வாழ்க்கை வெளியே பலரோடு பழகித் திரியும் வாழ்க்கை. பலரோடு பழகுவதால் மனம் கெடுவதற்கு வாய்ப்பு உண்டு. ஒழுக்கம் கெடுவதற்கும் வழி உண்டு. சேற்றில் நடந்து வழுக்குவது போன்றது இது. பெண்ணின் வாழ்க்கை குடும்பத்தளவில் பெரும்பாலும் இருந்து கணவனோடு மக்களோடு பழகி அமையும் வாழ்க்கை. மனம் கெடுவதற்கு வாய்ப்பு இல்லை.

ஒழுக்கம் தவறுவதற்கும் வழி இல்லை. மணலில் நடப்பது போன்றது இது. ஆகையால் தவறி விழவே கூடாது. விழுந்தால் நொண்டியாக இருக்கவேண்டும்; அல்லது கோமாளியாக இருக்கவேண்டும்!''

— அகல் விளக்கு, பக். 308-309

## தமிழர்க்கு

தமிழர்க்கு இனப்பற்றும் மொழிப்பற்றும் இல்லை. எனவேதான் அவர்கள் இருக்க இருக்கக் கீழே போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெள்ளத் தெளிய உணர்ந்த டாக்டர் மு. வ.,

'' இன்றைய தமிழர்க்கு வேண்டியது அன்றாடக் கடமையைப் பற்றிய ஆராய்ச்சியே! மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் செயலில் காட்டும் முறையே''

— தம்பிக்கு, பக். 15-16

என்று இன்றைய தமிழர்க்கு வேண்டியவற்றை எடுத்துக் காட்டுகின்றார்.

'' தமிழர்கள் என்றால் திறம் படைத்தவர்கள் என்ற பெயர் எல்லாத் துறைகளிலும் வளர வேண்டும்''

— அந்த நாள், பக். 113

என்று விரும்பும் அவர் அதற்குத் தமிழன் காலத்தை உணர்ந்து அதை நீந்திச் செல்ல வேண்டும் என்று கனவு காண்கின்றார்.

'' தமிழன் எப்படியாவது காலத்தை உணர்ந்து மாறுதல்களை உணர்ந்து வாழ்ந்தால் போதும். கால வெள்ளத்தில் நீந்திச் சென்றால் போதும்.''

— அன்னைக்கு, பக். 15

இந்தக் கனவு நனவாக தமிழன் வல்லவனாகத் திகழ்தல் வேண்டும் என்று கூறுகின்றார். இதனை,

'' தமிழர்கள் நல்லவர்களாக மட்டும் இருந்து தனித் தனியாகவும் குடும்பம் குடும்பமாகவும், நாடு நாடாக

வும் இருந்து அழிந்தது போதும். இனிமேல் வல்லவர் களாகவும் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும்''

— தம்பிக்கு, பக். 6

என்று தம்பிக்கு எழுதும் கடிதத்திலிருந்து தெளியலாம். தமிழன் தமிழ் மொழியை வல்ல மொழியாகவும், பல்லோர் போற்றும் மொழியாகவும் ஆக்கக் கடமைப்பட்டவன் என்பதை, ''தமிழ் மொழி நல்ல மொழிதான். ஆனால் அதை வல்ல மொழியாக ஆக்கினோமா? பெரும்பாலோர் போற்றும் மொழியாக ஆக்கினோமா?" (தம்பிக்கு, பக். 17) என்ற வினாவின்வழி உணர்த்துகின்றார். இது ஒவ்வொரு தமிழ் மகனின் உள்ளத்திலும், செவியிலும் ஒலிக்கப்பட வேண்டிய வினாவாகும். தமிழ் நாட்டின் மீது தமிழனுக்குக் காதல் இருக்க வேண்டும். தமிழ் நாட்டுக்காகத் தமிழன் எதையும் விட்டுக் கொடுக்க வேண்டும் என்பதை,

> ''உன் மானத்தைவிட நாட்டின் மானம் பெரிது என்று உணர். உன் உயர்வைவிட நாட்டின் உயர்வு இன்றியமையாதது உன்று உணர். உன் நலத்தை விட நாட்டின் நலம் சிறந்தது என்று உணர். நெருக்கடி நேரும்போது உன் நலம் உயர்வு மானம் ஆகியவற்றை நாட்டுக்காக விட்டுக் கொடு''
>
> —தம்பிக்கு, பக். 55

எனத் தம்பிக்கு எழுதும் மடலில் குறிக்கின்றார்.

**தனிமனிதனுக்கு**

உலகத்திற்கு — சமுதாயத்திற்கு — இல்வாழ்க்கை மாந்தர்க்கு — ஆண்களுக்கு — பெண்களுக்கு — தமிழர்க்கு என்று பல்வேறு பிரிவினரும் ஏற்றிப்போற்றும் கருத்துகளை — எண்ணங்களைத் தம் இலக்கிய வடிவங்களில் உணர்த்திய டாக்டர் மு. வ. அவர்கள் தனிமனிதர் ஒவ்வொருவரும் போற்ற வேண்டியவற்றையும் குறித்துச் சென்றுள்ளார். இவை ஓர் இனத்தவர்க்கோ, ஒரு நாட்ட

வர்க்கோ மட்டும் உரித்தானவை அல்ல. உலகக் குடிமகனாகப் பிறந்த ஒவ்வொருவரும் போற்ற வேண்டியவைகளாகும்.

ஒவ்வொருவரும் தம் மனத்தை ஒழுங்காகப் பண்பட்டதாக அமைத்துக் கொள்ள வேண்டும். அப்படி அமைத்துக் கொண்டால் "அவர்கள் வீட்டில் இருந்தபடியே தவம் செய்யலாம். அரிய பெரிய தொண்டுகள் செய்யலாம். மற்றவர்களுக்கு அது முடியாது" என்று கூறுகின்றார். மனத்தை ஒரு நெறியில் நிறுத்த வேண்டும் என்று கூற வருகின்றவர்,

> " மனம் ஒரே இடத்தில் வேரூன்றி வளர்ந்து செழித்திடும் மரம்போல் ஒரு நெறியைப் பற்றி உறுதியாக நின்றால் நல்லதுதான், அல்லது எங்கெங்குச் சென்றாலும் மாலையில் குறித்த இடத்திற்கு வந்து சேர்ந்திடும் மாடு போல் எத்தொழிலைச் செய்தாலும் குறிக்கோளை மறக்காத மனமாக இருந்தாலும் நல்லதுதான். ஆனால் இன்ன திசை இன்ன போக்கு இன்ன கூடு என்று வரையறை இல்லாமல் இயன்றவரையில் பறந்து அலையும் பறவையாக இருந்தால் பயன் என்ன?"
>
> —நெஞ்சில் ஒரு முள், பக். 5

என்று கேட்கின்றார்.

ஒரு செயலில் இறங்கும்போது உறுதியாக இருக்க வேண்டும். செய்யும் செயலைத் திருந்தச் செய்ய வேண்டும். அதைச் செய்யும்போது வேகம் கூடாது என்பவற்றையெல்லாம் அகல்விளக்கு நாவலில் தெரிவிக்கின்றார்.

> "ஒரு தொழிலில் இறங்கினோமா, ஒரே உறுதியாக இறங்கிட வேண்டும். அப்புறம் வேறு எதைப் பற்றியும் கவலைப்படக்கூடாது. வேறு எதிலும் ஈடுபடக் கூடாது."
>
> —அகல் விளக்கு, பக். 340

"செய்வன திருந்தச் செய்ய வேண்டும். படிப்பில் செம்மையாக இருந்தால்தான் பிறகு கொள்ளைக் காரன் ஆனாலும் அதையும் செம்மையாகச் செய்ய முடியும். இதிலேயே அரைகுறை என்றால் எதிலும் அரைகுறையாகத்தான் முடியும்."

—அகல் விளக்கு, பக். 253

"எப்போதும் வேகம் வேண்டா. அது உன்னையும் கெடுக்கும். உன்னைச் சார்ந்தவர்களையும் கெடுக்கும்."

—அகல் விளக்கு, பக். 406

தவறு செய்து பின் திருந்தியவர்கள் என்றால் அவர்கள் அடக்கமும் விட்டுக்கொடுக்கும் இயல்பும் உடையவர்களாக இருத்தல் வேண்டும் — இருப்பார்கள் என்பதை,

"ஒரு தவறும் செய்யாமலே நெறியாக வாழ்கிறவர் களுக்குச் செருக்கும் பிடிவாதமும் மிகுதியாக இருக்கும். தவறு செய்து திருந்தியவர்களுக்கு அடக்கமும் விட்டுக் கொடுக்கும் பண்பும் பொருந்தியிருக்கும்"

—நெஞ்சில் ஒரு முள், பக். 291

என்று நெஞ்சில் ஒரு முள்ளில் சுட்டுகின்றார்.

மனித வாழ்க்கை மிகச் சிறியது — குறுகியது என்பதை உணர்ந்த மு. வ. அவர்கள்,

"நம் வாழ்க்கை இந்த உலகத்தை நோக்கக் கடலில் ஒரு துளி போன்றது. இந்தச் சிறு வாழ்க்கையில் எல்லா வற்றையும் அறிய முடியாது. எண்ணியவற்றை யெல்லாம் செய்யவும் முடியாது. வாய்ப்பும் குறைவு. வாழ்நாளும் குறைவு. ஆகையால் நம் பங்கு மிகமிகச் சிறியது. வாழ்க்கையில் எல்லாம் பெற முடியாது. எல்லாம் அறிய முடியாது. எவ்வளவோ பெறாமல் அமைதி அடைய வேண்டும். எவ்வளவோ அறியாமல் அமைதி அடைய வேண்டும்"

—அல்லி; பக். 113

என்று நவில்கின்றார். இப்படிப்பட்ட வாழ்க்கையில் மனிதர்களின் தொடர்பு கசக்கும் நாள் வரும்போது கருத்துகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், "உயர்ந்த புத்தகங்களின் கருத்துகள் என்றுமே கசப்பதில்லை" (வாடாமலர், பக். 278) என்று வாடாமலர் நாவலில் காரணம் கூறுகின்றார். மனித வாழ்க்கையில் அவன் தான் ஆற்ற வேண்டிய கடமையை நம்பிக்கையோடு செய்து வரவேண்டும் என்று மொழிகின்றார்.

> "பெரும்பாலோர் திருந்தும் காலம் வரும் 'என்ற நம்பிக்கையோடு கடமையைச் செய்ய வேண்டும். இன்று பயன் குறைவாகவே இருப்பதைப் பற்றிக் கவலைப்படாமல், கடமையைச் செய்து வருவோம். செய்ய முடியாவிட்டால் சொல்லி வருவோம். காலம் வரும்போது பயன்படும்."
>
> — வாடா மலர், பக். 171- 72

சீர்ப்படாத உலகத்தில் சீர்ப்பட்டவர்கள் பிறந்தால் என்ன செய்ய வேண்டும் என்பதைக் கயமை என்ற நாவலில்

> "ஒரு வழி, நஞ்சு குடித்துச் சிலுவையில் நின்று, அல்லது துப்பாக்கிக்கு இரையாகி மறைய வேண்டும். மற்றொரு வழி, உலகம் பொல்லாதது என்று இதைவிட்டுத் துறந்து காட்டுக்கு ஓடிப் போய்க் கண்மூடி மவுனியாகிக் காலம் கழிக்க வேண்டும். மூன்றாவது வழி உலகம் திருந்த வேண்டும் என்று உண்மையான ஆர்வத்தோடு அதற்கு வேண்டிய வித்துகளைத் தூவிக் கொண்டு கடமையை அமைதியாகச் செய்து கொண்டிருக்க வேண்டும்"
>
> — கயமை, பக். 103

என்று மூன்று வழிகளைக் கூறியுள்ளார். இவற்றில் மூன்றாவது வழியே மு. வ. அவர்கள் கடைப்பிடிக்கும் — கடைப்பிடிக்க வற்புறுத்தும் நெறி.

மனிதனாகப் பிறந்தவன் ஊர்ப்பழிக்கு அஞ்சுதல் கூடாது. அந்த அச்சம் அவனை ஒன்றும் செய்யவிடாமல்

தடுப்பதோடு அவனைக் கோழையாகவும் மாற்றிவிடும் என்பதை,

"நான் வேடிக்கைக்காகச் சொல்லவில்லை. உண்மையாகவே சொல்கிறேன். ஊராரின் பழிக்கு அஞ்சுகிறவன், தனக்கு ஒன்றும் செய்து கொள்ள முடியாது. மற்றவர்களுக்கும் உதவி செய்ய முடியாது. எவ்வளவு ஒழுங்காக நடந்தாலும் ஊராரின் வாய் ஏதாவது உளறிக் கொண்டேதான் இருக்கும். அதற்குப் பயந்தால் கோழையாகத்தான் வாழ முடியும்"

— கயமை, பக். 66

என்ற பகுதியில் விளக்குகின்றார்.

பணத்திற்கு மதிப்புத் தரும் தனிமனிதனை — குடும்பத்தை — சமூகத்தை — உலகத்தை நோக்கி,

"பணம் என்றால் அதற்கு ஒரு தனி மதிப்பு உலகத்தில் உள்ள வரையில் அதைச் சும்மா விடக்கூடாது. விட்டால் புத்தர், ஏசு, திருநாவுக்கரசர், காந்தி போல் அடியோடு விட்டுத் தொலைக்க வேண்டும். இல்லையானால் பணத்திற்கு நாம் அடிமையாகாமல் நமக்கு அதை அடிமையாக்கிக் கொண்டு ஆட்டிப் படைக்க வேண்டும். பொன்னாசை தனியாட்களைக் கெடுக்கும். தவிர அது இயற்கையாகவே கடவுளால் மனிதனுடைய நாடி நரம்புகளில் சேர்த்துப் படைக்கப் பட்டது. பொன்னாசை தனியாட்களைக் கெடுப்பதோடு நிற்கிறதா? குடும்பம் குடும்பமாக, சமூகம் சமூகமாக உலகத்தையே கெடுத்து வருவது பண ஆசை தானே!"

— மலர்விழி, பக். 74

என்று பண ஆசையின் விளைவினை — கொடுமையினை எடுத்துக்காட்டுகின்றார்.

"முதலாளிகளைப் பற்றி உன் வாயால் எங்கும் எப்போதும் எவனிடத்திலும் குறை சொல்லாதே"

—மண் குடிசை, பக். 112

என்று தொழிலாளிக்குக் கூறுபவர் வாழ்வதற்குரிய வகையினையும் வகுத்துக் காட்டுகின்றார்.

"குறை இல்லாதவர்கள் உலகத்தில் இல்லை. குறைகளுக்கு இடையே குணத்தைக் கண்டு வாழ வேண்டும். முள்ளுக்கு இடையே, முரட்டு இலைகளுக்கு இடையே மெல்லிய மலரைக் கண்டு தேனைத் தேடுகிறது தேனீ! அதுதான் வாழ வழி.

— மண்குடிசை, பக். 95

வாழ்க்கையில் நல்லவர்களாகப் பிறந்தவர்கள் கெட்டவர்களாக ஆக முயற்சி செய்தால் வெற்றி கிடைக்காது என்றும், தமக்குத் துன்பம் செய்தவர்க்கும் நன்மையே செய்ய வேண்டும் என்றும் எண்ணம் கொண்ட மு. வ. அவர்கள்,

"பொய்யர்களாய்த் துன்பப்படாதீர்கள். வஞ்சகர்களாய்த் துன்பப்படாதீர்கள். லஞ்சத்தை ஒழித்து நேர்மையைப் போற்றுங்கள். செருக்கு உடையவர்களுக்கு அஞ்சாதீர்கள். பொல்லாதவனை நல்லவன் என்று புகழாதீர்கள். பொய்யன் மெய்யன் என்று போற்றாதீர்கள். இந்தப் பொய்வாழ்வு உங்களைத் துன்புறுத்தும். ஒழுக்கம் இல்லாதவனுக்கும் பயப்படாதீர்கள். அவனுக்கு உயர்வு தந்து பாராட்டாதீர்கள். உண்மைக்கு மாறாக வாய் திறக்காதீர்கள்"

—மண்குடிசை, பக். 368

என்றெல்லாம் பல்வேறு கருத்துரைகளைக் கூறுகின்றார். இன்னும் தனிவாழ்க்கையில் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகளை — கருத்துகளைப் பல்வேறு வகையாக உரைக்கின்றார் அவர்.

### கடவுள் கொள்கை

டாக்டர் மு. வ. அவர்கள் கடவுள் கொள்கை உடையவர். வழிபாட்டால் பயன் உண்டு என்று கருதுகின்றவர். அந்தப் பயன் என்ன என்பதை,

"வழிபாட்டால் பயன் உண்டு. மனம் அமைதி பெறுகிறது, வலிமை பெறுகிறது"

—மண்குடிசை பக். 453

என்று மண்குடிசையில் சுட்டுகின்றார். அவர் காணும் சமுதாயத்தில், சமய உலகில் ஆத்திகம் நாத்திகம் என்று இரு பிரிவுகள் காணப்படுகின்றன. உண்மையான ஆத்திகம் இது. நாத்திகம் இது என்பதை,

"கடவுளின் நோக்கத்தை உணர்ந்து அதற்கு ஏற்ப நடப்பதுதான் உண்மையான ஆத்திகம். உண்மையான வழிபாடு. அதற்கு மாறாக நடப்பதுதான் நாத்திகம்"

— மண்குடிசை, பக். 499

என்று மண்குடிசையில் வேறுபடுத்துகின்றார்.

"அறநூல்களின் துணைகொண்டு ஆராய்ந்து, பிறகு உலகத்து உயிர்களின் வாழ்க்கையை எண்ணிப் பார்த்தால் கடவுளின் ஆட்சிமுறை புலப்படும்"

— மண்குடிசை, பக். 429

என்று கூறுவது கடவுள் இல்லை என்று கூறுவார்க்குக் கடவுள் உண்மையைக் காட்டுவதாகும். கடவுள் பற்றிக் குறிக்கும் போது கூட அவர் சிந்தை அறத்தை மறக்கவில்லை என்பது,

"தன்னை எந்நேரமும் புகழ்ந்து பாடுவதைக் கடவுள் விரும்புவதில்லை. தான் வகுத்த அறநெறியில் வாழ்ந்து மற்ற உயிர்களிடம் அன்பு செலுத்தித் தொண்டு செய்வதையே அவன் ஏற்றுக் கொள்வான்"

என்ற மொழியால் புலனாகின்றது.

**மரணம்**

மரணம் பற்றி இவர் கூறும் கருத்து ஒவ்வொருவரும் உணர வேண்டிய ஒன்றாகும். மரணத்தைக் கண்டு அஞ்சுபவர்க்கும், ஆற்றாமையால் புலம்புபவர்க்கும், மரணத்தின்

இயல்பினைப் பலவாறாக உரைத்துச் செல்கின்றார். வாழ்வும் சாவும் வாழ்க்கைக்கு இன்றியமையாதன என்பது மு. வ. அவர்கள் கருத்து.

"சாவு என்பது வாழ்வுக்குத் தேவையானது. சாவும் வாழ்வும் சேர்ந்தால் வட்டம். இது இல்லையானால் அது இல்லை. பழுத்து வாடி உதிர்ந்தால்தான் தளிர் பசுமையாகத் தோன்றுகிறது. பழுப்பதும் தழைப்பதும் போல்தான் வாழ்வும் சாவும்."

—மண்குடிசை, பக். 109

என்பதனால் இது தெளிவாகின்றது. யாராவது ஒருவர் இறந்தால் அதற்காக அழுதால்,

"கடவுளின் ஆட்சிமுறையைப் பழிப்பதுபோல் ஆகுமாம். விரும்பாதது போல் ஆகுமாம்."

—மண்குடிசை, பக். 430

'மரணம் இயற்கையானது. அது வரும்போது வரட்டும். அதுவரையில் வாழ்ந்தே தீர வேண்டும். வாழும் நாட்களில் கவலையைக் குறைத்து வாழவேண்டும்' (பக். 392, 413) என்று நெஞ்சில் ஒரு முள்ளில் கூறுகின்றார்.

எல்லா உயிரும் ஒன்று என்பதை வலியுறுத்தும் சட்டம் மரணமே என்பதை,

"படைத்தவன் நோக்கம் எல்லாம் ஒன்று என்று உணரச் செய்வதுதானே! மரணம் ஒன்று தானே அதைத் தெளிவாக்கி வருகிறது! ஆகையால் கடவுளின் ஆட்சி வன்மையான சட்டம் மரணம்தான். மரணம் இல்லையானால் கடவுளின் ஆட்சி இல்லை என்று ஆகும். எல்லா உயிரும் ஒன்று என்பதை வலியுறுத்தி உணர்த்தும் சட்டம் அதுதான்"

—குறட்டை ஒலி, பக். 103

என்று குறட்டை ஒலியில் குறிக்கின்றார்.

## அறவழி நின்றவர்

அறவழி அமைத்துக் கொடுத்த சான்றோர் மட்டும் அல்லர்; பிறர் காட்டிய வழியில் தாமும் நடந்து காட்டிய அறவோர் அவர். வள்ளுவர், தாயுமானவர் முதலிய அறவோர்களின் நூல்களை என்றுமே இவர் மறந்ததில்லை.

> "உடைகளும் படுக்கையும் கண்ணாடி முதலானவைகளும் தவிர வேறு சாமான்கள் எங்களிடம் இல்லாததால் எடை மிகுதியாவதற்குக் காரணமே இல்லை. திருக்குறளும் தாயுமானவரும் தவிர வேறு நூல்களும் நாங்கள் எடுத்துக் கொள்ளவில்லை அல்லவா?"
>
> —யான் கண்ட இலங்கை, பக். 8

## கொண்ட கொள்கையை விடாது போற்றும் அறநெறியாளர்

> "அந்த விமான மங்கை காப்பி நிறைந்த குவளைகள் கொண்டு வந்தாள். நன்றி தெரிவித்துப் பழக்கமில்லை என்றேன். வேறு பழச்சாறு, தேநீர் ஏதேனும் வேண்டுமா என்றாள். பால் கேட்டுப் பெற்றுக் கொண்டேன்."
>
> —யான் கண்ட இலங்கை, பக். 23

> "நான் காந்தி வழியில் நடப்பவன். அவர் அம்மை குத்திக் கொள்ளக் கூடாது என்று பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார். நான் அவருடைய கொள்கையை நம்புகிறவன். என்னைப் போன்றவர்களுக்கு விதி விலக்கு இல்லையா? என்றேன்."
>
> —யான் கண்ட இலங்கை, பக். 39

இப்பகுதிகள் கொள்கையை விடாத அறநெறியாளர் மு. வ. வை நமக்குக் காட்டுகின்றன. இங்குக் குறிப்பிட்ட பகுதிகள் சிலவே. தனிவாழ்க்கையில் அவர் கடைப்பிடித்த அறநெறிகளை அவருடன் பழகிய அனைவரும் நன்கு தெளிவர்.

இப்படி அனைவர்க்கும் முன்னோடியாக — பலரை வழி நடத்திச் செல்லும் நெறிகாட்டியாக விளங்கிய மு. வ. அவர்கள் புகழை எதிர்பார்த்து எதையும் செய்தாரில்லை. என்றாலும் அவர் விட்டுச் சென்ற இந்த உலகம் அவரைப் புகழ்ந்து கொண்டேதான் இருக்கும்.

> "உலகம் யாரைப் புகழ்கிறது? புத்தர், காந்தியடிகள் முதலான அறவோரைப் புகழ்கிறது. அசோகன் கரிகாலன் முதலான ஆட்சித் தலைவரைப் புகழ்கிறது. திருவள்ளுவர் ஷேக்ஸ்பியர் முதலான அறிஞர்களைப் புகழ்கிறது. அவர்களின் உடல் மறைந்து பற்பல நூற்றாண்டுகள் ஆன பிறகும் அவர்களின் பெருவாழ்வு நினைவில் நீங்காதவாறு உலகம் புகழ்ந்து கொண்டே வருகிறது. அந்தப் பெருமக்கள் நிலையான புகழ் வேண்டும் என்று விரும்பியதும் இல்லை. புகழுக்காக முயன்றதும் இல்லை. ஆனாலும் உலகமோ அவர்களை விடாமல் புகழ்ந்து கொண்டே வருகிறது.
>
> —உலகப் பேரேடு

இந்த வரிசையில் வைத்து உலகம் மு. வ. அவர்களையும் புகழ்ந்து கொண்டே இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# II

# கலைஞர்

## கலையும் கலைஞரும்

கலை என்பது ஓர் அனுபவத்தை, ஓர் உணர்வை, ஒரு கருத்தைப் பிறர் சிந்தையைத் தொடும்வண்ணம் படைத்துக் காட்டும் திறனே ஆகும். கருத்தை வெளிப்படுத்துவதில் கலைவண்ணமும், கலையிலே கருத்தின் வெளிப்பாடும் சிறக்க வெளியிடும் ஆற்றலாளனே சிறந்த கலைஞனாகிறான். கலையும் கருத்தும் படைப்பின் சிறகுகள் போன்றவை. கருத்தின் கலை நடையாகும். கலையின் கருத்து உணர்வாகும். எனவே கலைஞன் என்பவன் கருத்தாளனாகவும், கருத்தாளன் என்பவன் கலைஞனாகவும் இருக்க வேண்டியது இன்றியமையாததாகிறது. கலையும் கருத்தும் இணைந்தும் இழைந்தும் இருக்கும் போதே ஒரு படைப்பு சமூகத்தின் வரவேற்பிக்கும் பயன்பாட்டிற்கும் உரியதாகிறது. சமுதாயக் கலைஞரான டாக்டர் மு. வ. அவர்களின் நாவல்களில் காணும் கலைத் திறனைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## வாழ்வும் இலக்கியப் பணியும்

டாக்டர் மு. வ. தமிழ்ப்பேராசிரியராகத் தொடங்கி, இலக்கியத் திறனாய்வாளராகத் திகழ்ந்து, படைப்பாளராக மலர்ந்து கலைத்தன்மை வாய்ந்த அறச்சிந்தைய

ராய்த் திகழ்ந்தவர். எனவேதான் அவர்தம் படைப்புகள் கருத்துகளைத் தாங்கிய கலைக்கூடங்களாய்த் திகழ்ந்தன. பல்துறைக் களஞ்சியமாக விளங்கிய மு. வ. வின் பதின் மூன்று நாவல்களும், சிறுகதைத் தொகுதிகள் இரண்டும், நாடகங்கள் ஆறும், ஆங்கில நூல்கள் இரண்டும், இலக்கிய நூல்கள் இருபத்துநான்கும், சிறுவர் இலக்கியங்கள் நான்கும், கட்டுரைக் களஞ்சியங்கள் பதினொன்றும், பயண இலக்கியம் ஒன்றும், வாழ்க்கை வரலாற்று நூல் நான்கும், மொழியியல் நூல்கள் ஆறும், சிறுவர் இலக்கண நூல்கள் மூன்றும், மொழிபெயர்ப்பு நூல்கள் இரண்டும், இலக்கிய வரலாற்று நூல் ஒன்றும் அவர்தம் கலைத்திறனோடு வெளி யிடும் வெளிப்பாட்டுத் திறனுக்குச் சான்றாகத்தக்கன.

## மு. வ வின் நாவல் நெஞ்சம்

டாக்டர் மு. வ. நாவல், சிறுகதை, நாடகம் போன்ற இலக்கிய வடிவங்களில் தம் கலைத்திறனை வெளிப்படுத்தி யிருந்தபோதிலும் நாவலாசிரியர் என்ற சிறப்பு முத்திரை யாலே குறிக்கப் பெற்றவர். அதற்கு எண்ணிக்கை காரணமன்று; அவற்றுள் எடுத்துரைக்கப் பெற்றுள்ள எண்ணங்களே காரணமாகும். மற்ற இலக்கிய வடிவங் களைக் காட்டிலும் நாவல் வடிவத்தை விரும்பியதற்குக் காரணங்கள் அவருடைய சமுதாய உணர்வும் நாவல் ஒரு பரந்துபட்ட விரிந்த வடிவம் என்பதும் ஆகும். மதுரைப் பல்கலைக்கழகத்தில் 9-9-74 அன்று நடைபெற்ற "அகிலன் கருத்தரங்கத் தொடக்க விழாவில் டாக்டர் மு. வ. ஆற்றிய உரை, அவர்தம் எழுத்துணர்வையும், நாவல் நெஞ்சத் தையும் புலப்படுத்துவதாக அமைந்திருந்தது. "தமிழ்ப் பேராசிரியர் பதவியிலிருந்து நான் நான்கு ஆண்டுகளுக்கு முன்பே ஓய்வு பெற்று விட்டேன். துணைவேந்தர் பதவி யிலிருந்து இன்னும் சில திங்களிலோ, ஓர் ஆண்டிலோ விடைபெற்று விடுவேன். நான் கடைசி வரையில் ஓய்வு பெற விரும்பாத பதவி ஒன்று உண்டு என்றால் அது

எழுத்தாளர் பதவிதான். எழுத்து என் உயிருடன் கலந்து விட்ட ஒன்றாகும். என் கடைசி மூச்சு உள்ளவரையில் ஏதாவது எழுதிக் கொண்டே இருப்பேன்'' எனக் குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கது. மதுரைப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தர் பதவி கிடைத்தபோது, அவர் அப்பதவியைப் பெற விரும்பவில்லை. அதற்கு ஓய்வு, உடல் நலக்குறைவு, நாவல் எழுதும் விழைவு இம்மூன்றுமே காரணம் என்றார்.

### நாவல் பணி

உலகம் இன்று ஒரு குடும்பமாகியுள்ளது. உலகத்தின் பல்வேறு வளர்ச்சி பல்வேறு பாகங்களில் வாழ்கின்ற மக்களின் வாழ்க்கையில் தாக்குரவு பெற்றுள்ளது. காலத்தின் வேகத்தோடு ஒட்டிப்போக வேண்டிய இன்றியமையாமை இன்று மனித சமுதாயத்திற்கு ஏற்பட்டுள்ளது. எனவே, இன்று மனித சமுதாயத்தின் சிக்கல்களையும் விடிவுகளையும் விவாதிக்கின்ற, விளக்குகின்ற, கலையாக்குகின்ற மேடையாக நாவல் இலக்கியம் அமைந்துள்ளது. மனித சமுதாயத்தோடு ஒட்டி உருவாகி வளர்ந்த நாவல் இலக்கியம் இன்றையச் சமுதாயத்தின் மக்கள் இலக்கிய வடிவமாகியுள்ளது.

மேனாட்டாரின் வரவால், உரைநடை வளர்ச்சியால் தமிழ் இலக்கிய வரலாற்றில் சீரிய இடத்தைப் பெறுகின்ற அளவுக்கு இன்று நாவல் இலக்கியம் வளர்ந்துள்ளது. வேதநாயகம் பிள்ளை தொடங்கிய நாவற்கலை ஒவ்வொரு காலகட்டத்தில் ஒவ்வொரு வகையான தன்மைகளைப் பெற்றிருந்தது. சுதந்திரக் கால கட்டத்திலேதான் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சி நிலையைப் பெற்றது. 'இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் தமிழர் வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்டு நாவல் எழுதும் புலமை பலர்க்கு ஏற்படவில்லை. ஒரு சிலர் அப்புலமை பெற்றிருந்தும் நூல் பல எழுதவில்லை. வேறுசிலர்

மக்களுக்குக் கவர்ச்சி மிகுதியாவதற்காகத் துப்பறியும் கதைகளை எழுத முன்வந்தனர். ஆகவே இலக்கியத்தரம் உள்ள கதைகளை நாடியவர்கள், வங்காளம் முதலான பிற இந்திய மொழி நாவல்களையும், ஆங்கிலம், பிரெஞ்சு முதலான ஐரோப்பிய மொழிகளின் நாவல்களையும் நாட வேண்டியதாயிற்று. அதனால் மொழிபெயர்ப்பு நாவல்கள் தமிழ் நாட்டில் மிகுதியாக வரவேற்கப்பட்டன''[1] என்று டாக்டர் மு. வ. குறிப்பிடும் கருத்து நாவல் இலக்கிய வரலாற்றின் மைல் கற்களை அறிய உதவுவதாகும். சுதந்திர காலகட்டத்தில் ஒரு வளர்ச்சி மையத்தைப் பெற்ற 'நாவற்கலை' கல்கியின் வரவால் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சி நிலையை எய்தியது. இயக்கப் பார்வையுடன் இணைந்த அறிஞர் அண்ணாவின் நாவல்களும், இலக்கிய வளாகத்திலிருந்து தோன்றிய டாக்டர் மு. வ. வின் நாவல்களும் இளைஞர்களின் பார்வையை ஈர்த்து நின்றன. இம்மூவருள் டாக்டர் மு.வ.விற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு.

உலகத்தில் நாவல் இலக்கியம் என்பது வார, மாத ஏடுகளின் துணையைக் கொண்டே வளர்ந்து வந்துள்ளது. மக்களின் எண்ணங்களைப் புத்திலக்கியத்தின் திசையில் திருப்பிய 'கல்கி' அவர்கள், தம் கலைப்படைப்புகளை எல்லாம் விமோசனம், நவசக்தி, ஆனந்தவிகடன், கல்கி ஆகிய ஏடுகள் வழிதான் வெளியிட்டார். அறிஞர் அண்ணா அவர்கள் விடுதலை, திராவிடநாடு, காஞ்சி முதலிய ஏடுகள் வழியே இளைஞர்களின் சிந்தையைக் கவர்ந்தார். இன்றும் ஏடுகளின் துணையின்றி எந்த எழுத்தாளரும் மக்களின் எண்ணங்களில் இடம்பெறவில்லை. ஆனால் டாக்டர் மு.வ. எந்த ஏட்டின் துணையுமின்றி, பதிப்பாளர்களின் உதவியுமின்றித் தம் எழுத்தாலே இளைஞர் சமுதாயத்தின் மகத்தான வரவேற்பைப் பெற்றார். இச்சிறப்பு அவர்தம் கலைத்தன்மைக்கு ஒரு தனி முத்திரை என்றே கூறலாம். தனி முயற்சியால் வெற்றி கண்ட

பிறகே டாக்டர் மு. வ. வின் 'பாவை' எனும் நாவல் 'லோகோபகாரி' என்ற இதழிலும், 'அந்த நாள்' எனும் நாவல் 'தமிழ் முரசு' என்ற இதழிலும் வெளியாயின. ஏனைய பன்னிரண்டு நாவல்களும் முழுநூல் வடிவம் பெற்றே இளைஞர்களின் எதிர்பார்ப்புகளுக்கு நிறைவைத் தந்தன.

இன்றைய படைப்பிலக்கியங்களைக் கலைப்படைப்புகள் என்றும் ஆய்வுப் படைப்புகள் என்றும், இருவகையாகப் பிரித்துக் காணலாம். கலைப்படைப்புகளில் உணர்ச்சிகள் தலைமையேற்கும். ஆய்வுப் படைப்புகளில் நுண்மாண் நுழைபுலத்தன்மைகள் தலைமையேற்கும். படைப் பாளர்கள் ஆய்வாளர்களாக வெற்றி பெறுவது கடினம். ஆய்வாளர்கள் படைப்பாளர்களாவது மிகக் குறைவு. ஆனால் டாக்டர் மு. வ. கலைப்படைப்பாளராகவும், ஆய்வுப் படைப்பாளராகவும் திகழ்ந்தார். ஆய்வுப் படைப் பாளராகிக் கண்ட வெற்றியே கலைப்படைப்பின் கட்டுக் கோப்புக்குத் துணை நின்றது எனலாம். இலக்கிய வரலாற்றில் டாக்டர் மு. வ. வின் தோற்றம் தனித் தன்மையோடு விளங்குவதற்கு இச்சிறப்பும் காரணமாகும்.

கலைமணம் கொண்ட சமுதாயச் சிந்தனையின் வார்ப்பாக விளங்கிய மு. வ. வின் நாவல்கள் தமிழ் நாவல் வாழ்விற்கு உணர்வூட்டியுள்ளன. அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களை ஆழ்ந்து நோக்குவதுதான் புத்திலக்கியத்தின் போக்கு என்பதை உணர்ந்து தம் நாவல்களைப் படைத் தார். மு. வ. விற்கு முன்பே சமுதாயத்தின் புறப் போராட்டங்களைப் பற்றி எண்ணற்ற எழுத்தாளர்கள் நாவல்களைப் படைத்திருந்த போதிலும், மு. வ. வின் நாவல்கள் புறப்போராட்டங்களோடு, அகவாழ்வு சிக்கல் களையும் ஆழ்ந்து நோக்கியுள்ளன. சமுதாயத்தின் சிக்கல் களைக் கருப்பொருளாக்கி அதை மட்டும் சித்திரித்துப் படிப்பாளரின் சிந்தனைக்கு முடிவை விடும் எழுத்தாளர்

போல் அன்றி, தம் படைப்புகள் வாயிலாக, சமுதாயத்தின் சிக்கலையும் குடும்பத்தின் சிக்கலையும் எடுத்துக்காட்டி, அதற்கான விடிவுகளைக் கலைப்பாங்கு குலையா வண்ணம் குறிப்பிட்டு, தம் நாவல்களைச் சமுதாயத்தின் மருந்தக மாக்கியுள்ளார். உலகக் கண்ணோட்டத்தோடு மக்கள் சமுதாயம் வாழவேண்டிய—வளர வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. எனவே இன்றைய வேடம் நிறைந்த சமுதாயச் சூழலில் மனிதன் புதிய புதிய முறையில் வாழ்க்கையை அணுக வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அப்போதுதான் வாழ்க்கையைச் சுமையற்றதாய், எளிமையானதாய் ஆக்கிக் கொள்ள முடியும். இக்கோணத்தில் செந்தாமரை (1946), 'கள்ளோ காவியமோ?' (1947), 'பாவை' (1948), 'அந்தநாள்' (1948), 'மலர்விழி' (1950), 'பெற்றமனம்' (1951), 'அல்லி' (1952), 'கரித்துண்டு' 1953), 'கயமை' (1956), 'நெஞ்சில் ஒரு முள்' (1956), அகல் விளக்கு' (1958), 'வாடா மலர்' (1960), 'மண்குடிசை' (1961) ஆகிய நாவல்களைப் படைத்தார். கதைக் கட்டுக்கோப்புக்குள் நின்று கலைப்பாங்கு சிதையா வண்ணம் வெளியீட்டு முறையாலும், விளக்கும் கருத்தாலும் உயர்ந்தே நின்றுள்ளார்.

### சமுதாய நோக்கம்

இன்றைய சமுதாயம் முரண்பாடுகளின் முழுவடிவமாக உள்ளது. முரண்பாடுகளுக்கு மூலகாரணம் தனிமனிதரா, சமுதாயமா, அரசா என்ற கேள்விகள் எழக்கூடும். ஆனால் மூன்றுமே பின்னிப் பிணைந்தவை. எல்லா நிலையிலும், எல்லா மனிதர்களும் மற்றவர்களின் இல்லாமையை, இயலாமையைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அரசியல் துறை, ஆட்சித்துறை, தொழில்துறை, நாட்டின் அரசியல் கோட்பாடுகள் போன்றவை சமுதாயத்தின் நலத்திற்கு எந்த அளவிற்குக் காரணமாக அமைகின்றனவோ அதே அளவிற்குச் சீர்கேட்டிற்கும் துணைநிற்கின்றன. எனவே

இத்தகைய சீர்கேட்டிற்குச் சமுதாய அமைப்புநிலை காரண மாகிறது. சமுதாயத்தில் காணப்படும் குறைபாடுகள் அனைத்திற்கும் அனைவருமே காரணமாக அமைகின்றனர். இத்தகைய சமுதாயச் சூழலில் உருவாகின்ற எழுத்தாளர் களுள் முரண்பாடுகளுக்கு நியாயங்கள் வழங்குவோரும் உண்டு; எதிர்ப்போரும் உண்டு. முன்னவர் சூழல் நிலைக்கு அடிமைப்பட்டவர். பின்னவர் மனிதத்துவக் கண் ணோட்டம் உள்ளவர். டாக்டர் மு. வ. வின் சமுதாய நோக்கம் மானுடம் வாய்ந்தது. எனவேதாம், அவர்தம் நாவல்கள் அனைத்தும், சமுதாயத்தை ஆழ்ந்து நோக்கிய பார்வையின் வார்ப்புகளாகவே உள்ளன. ‘‘சமுதாயம் நன்கு வளர்வதற்கு உண்மையான அன்பு வேண்டும். தூய உடல் வேண்டும். அறிவின் தெளிவு வேண்டும். இந்த மூன்றும் ஒவ்வொருவரும் பெறும் வகையில் பாடுபட்டால், எதிர்காலத்தில் போட்டியும் குழப்பமும் ஆரவாரமும் இல்லாமல் மக்கள் அமைதியாகவும் இன்பமாகவும் வாழ முடியும். இதுவே எதிர்காலச் சமுதாயத்திற்கு வேண்டிய கால்கோள்’’ (வாடாமலர், ப. 231) என்று தம் வாடா மலரிலே குறிப்பிட்டுள்ள கருத்து டாக்டர் மு. வ. வின் இலட்சியமிக்க சமுதார்யத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது. ஆனால் இன்றைய சமுதாயச் சூழல், சீர்கேடுகள் நிறைந்து சுயநலம், சூழ்ச்சி, சுரண்டல் தன்மை கொண்ட தாக அமைந்துள்ளது. ஒருவரையொருவர் ஆளுகின்ற மனப்போக்கு நிறைந்ததாகத்தான் அமைந்துள்ளதே தவிர, ஒருவரையொருவர் ஒன்றிச் செல்கின்ற மனிதத்துவக் கண்ணோட்டம் நிறைந்ததாக இல்லை. சமுதாயத்தில் காணப்படும் மரபுவழிச் சிந்தனைகளும், பண்பாட்டு வழக்கங்களும் மனிதவாழ்வை அடிமை கொள்ளுகின்றன. ஆண், பெண்ணை ஏய்த்துப் பிழைப்பதும், உடைமை யாளர்கள் உழைப்பாளர்களைச் சுரண்டுவதும் அரசியல் வாதிகள் மக்களின் மறதியைப் பயன்படுத்துவதும், ஆட்சி யாளர்கள் அறியாத மக்களை ஏமாற்றுவதும் இத்தகைய

மனப்போக்கால் உருவாகுவனதாம் என்று கருதினார் டாக்டர் மு. வ. எனவேதான் அவர் தம் நாவல்களின் கருப்பொருளிலும், கருத்துப் பொருளிலும் சமுதாயச் சிக்கல்களை எடுத்துரைத்துள்ளார்.

**கருப்பொருளும் கருத்துப்பொருளும்**

பிறருடைய பண்பாட்டையே பலவீனமாகக் கருதுவது இன்றைய சமுதாயம். இத்தகைய எண்ணப்போக்குடைய சமுதாயத்தில் மனச்சான்றுபடி வாழும் மனிதர்கள் சந்திக்கக்கூடிய போராட்டங்களையும், இயற்கையின் தத்துவத்தாலே பலம் குன்றிப் போயுள்ள பெண்ணினமும் நேர்படத்தக்க வாழ்க்கைச் சிக்கலையும் கருப்பொருளாக்கி இவற்றின் இழையோட்டத்திலே அனைத்து நாவல்களையும் படைத்துள்ளார் மு. வ.

சமுதாய நிலையில் கொடிய தன்மைகள், இல்லாமை யால் ஏழையர் வாழ்வில் காணும் அவலம், கல்வி முறையில் உள்ள சீர்கேடுகள், சமய, சமுதாய நெறிகளால் — மூட நம்பிக்கையில் வாழும் அறியாமை, திருமண முறை, வரதட்சணைக்கொடுமை, மரபுவழிப்பட்ட சிந்தனைகளால் வரும் கேடு, பொதுவுடைமைச் சிந்தனை ஆகியவற்றைத் தம் பாத்திரங்கள் வாயிலாகக் கருத்துப் பொருளாக்கி யுள்ளார்.

**தனிமனிதனும் சமுதாயமும்**

சமுதாயத்தில் காணப்படுகின்ற சீர்கேடுகளுக்கும், சிக்கல்களுக்கும் அடிப்படைக் காரணம் சமுதாயப்போக்கே தவிர, தனிமனிதர்களின் செயல்கள் அல்ல என்று கருதினார். கோட்பாட்டிற்கும், சமுதாயத்திற்கும் இடையே காணப்படும் இடைவெளியைப் பயன்படுத்திக் கொள்பவர் களாகத் தனிமனிதர்கள் விளங்கினாலும், சமுதாயத்தின் நெருங்கிணைந்த குறைபாடுகளுக்குச் சமுதாய அமைப்பே மூலநோய் என்று கருதினார் டாக்டர் மு. வ. அடிப்படையில்

சமுதாய அமைப்பை மாற்றினாலொழிய, ஒருமித்த சிந்தனையுள்ள சமுதாயத்தைப் படைக்க இயலாது என்று நம்பினார். மரபுவழிச் சிந்தனைகளாலும், பண்பாட்டு வழக்காலும் பாதிக்கப் பெற்றுள்ள தமிழ்ச் சமுதாயம் தம்முடைய வாழ்க்கைச் சிக்கலிலிருந்து விடுதலை காண வேண்டுமென்றால், எண்ணப் புரட்சி ஏற்பட வேண்டு மென்று விரும்பினார்.

'பொல்லாதவர் கொடியவர் என்று சிலரைச் சுட்டிக் காட்டி எல்லாத் தீமைக்கும் அவர்களே காரணம் என்று பழியை எல்லாம் அவர்கள் மேல் சுமத்துவது பொதுவான வழக்கம். அது பெரும்பான்மையான நாடகங்களும், காவியங்களும் காட்டிய மரபு. அவர்கள் ஏன் பொல்லாத வர்கள் ஆனார்கள்? ஏன் கொடியவர்கள் ஆனார்கள் என்று உணர்வதே அறிவுநெறி; கருதியதை வலியுறுத்துவதற்கு அறிவு வேண்டியதில்லை. காரணம் கண்டு தெளிவதற்கே அறிவு வேண்டும்'[2] என்னும் 'மலர்விழி' நாவலின் முன்னுரையிலிருந்து டாக்டர் மு. வ. வின் சமுதாய நோக்கினை நன்கறிய முடிகிறது. சமுதாயத்தில் பீடித் திருக்கும் நோயைச் சுட்டிக்காட்டி, மருத்துவம் காண்பவராக மட்டுமின்றி, நோயின் மூலத்தையே ஆழ்ந்து நோக்கி அறிவிக்கும் நுண்ணாய்வு மருத்துவராக விளங்கு கின்றார் மு. வ. 'அல்லி' என்ற நாவலில் தாம் படைத்த 'அறவாழி' என்னும் பாத்திரம் வாயிலாகவே தம் சமுதாய நோக்கத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

"இதுவரையில் தவறு செய்தவர்களைப் பிடித்துப் பிடித்து விடாமல் தண்டித்து வந்து என்ன பயன் கண்டோம்? குற்றங்கள் வளர்ந்து வருகின்றனவே தவிரக் குறையவில்லை. உடம்பில் உட்கார்ந்து கடித்த கொசுக்களாகப் பார்த்து அவைகளை வேட்டையாடி நசுக்கிப் பொசுக்கி விடுவதில் வல்லவர்களாக இருக்கிறோம். அதற்காகவே நீதிமன்றங்கள், சிறைக்

கூடங்கள் எல்லாம் ஏற்படுத்தி ஏராளமாகச் செலவழித்து வருகிறோம். ஆனால் கொசுக்கள் வளர்வதற்கு இடந்தருகின்ற சாய்க்கடைகளையும், தேக்கங்களையும் ஒழித்துச் சீர்படுவதற்கு அதில் கால்பங்கு முயற்சியும் செய்வதில்லை...''[3]

(அல்லி, பக். 145-46)

இச்சிந்தனை டாக்டர் மு. வ. வின் மனப்பார்வையையும், சமுதாய நலவுணர்ச்சியையும் எடுத்துக் காட்டுவதோடு, சமுதாய மேம்பாட்டு வேட்கையினையும் வெளிப்படுத்துகிறது.

டாக்டர் மு. வ. வின் படைப்புகளை ஆழ்ந்து நோக்கும்போது, சமுதாய நிலையைச் சித்திரித்துக் காட்டுவதில் சமுதாயக் கலைஞராகவும், நெறிமிக்க சமுதாயத்தை உருவாக்கும் கருத்துக்கலன்களை வழங்கும்போது, சமுதாய மருத்துவராகவும் விளங்குகின்றார்.

'தற்கால உலகில் நம்மிடையே எழும் பல்வேறு சிக்கல்களும் இனிமேல் நாவல் மூலம்தான் விவாதிக்கப் போகிறோம். எதிர்காலத்தில் சமூகத்தொடர்பான சிக்கல்களை விவாதிக்கின்ற மேடையாக நாவலே திகழப் போகிறது' என்னும் எச். ஜி. வெல்சு கூற்றிற்கிணங்க, டாக்டர் மு. வ. வின் படைப்புகள் அனைத்தும் சமுதாயச் சித்திரிப்பின் கலைக்கூடமாகவும், சமுதாயச் சிக்கல்களின் ஆய்வுக்கூடமாகவும் திகழ்கின்றன.

கலைக்கோட்பாடு

'கலை கலைக்காகவே', 'கலை வாழ்வுக்காகவே' என்னும் கோணங்களில் கலையின் நோக்கத்தை அணுகுவோர் உண்டு. டாக்டர் மு. வ. கலை வேறு, வாழ்க்கை வேறு என்று கருதியவர் அல்லர். அவர் வாழ்க்கையையே கலையாகக் கருதியவர். மற்ற எல்லாக்

கலைகளை விட வாழ்க்கைக் கலையை அறிவதே சமுதாய மேம்பாட்டிற்கு அடிகோல வல்லது என்று தம் படைப்புக்களைச் சித்திரித்தவர்.

கலை என்பது உள்ளம் உணர்ந்தவாறு வெளியிடும் திறன்[4] என்பர் (மண் குடிசை, பக். 111). அது வாழ்க்கையின் உயர்விற்கு உறுதுணை புரிய வல்லதாய் நெறி காட்டும் போக்கினதாய்,[5] (கொங்குதேர் வாழ்க்கை, பக். 45) அமைய வேண்டும்; இன்பப் பொழுது போக்கிற்குரியதாய் மட்டுமின்றி, வாழ்க்கையின் பயன்பாட்டினை நல்க வல்லதாய்[6] அமைந்து சமுதாயத்தைத் திருத்தி உயர்த்த வல்லதாய்[7] அமைய வேண்டும் என்ற கருத்துடையவர் டாக்டர் மு. வ. என்பதை அவர்தம் நூல்களின் குறிப்புகள் வாயிலாக அறிய முடிகிறது.

## எழுத்தாளரின் நோக்கம்

டாக்டர் மு. வ., கலை வடிவத்தால் மட்டும் சிறப்பதில்லை; அதன் பயன்பாட்டாலும் நோக்காலும் சிறக்கிறது. வாழ்க்கையில் உயர்ந்த உணர்ச்சி அனுபவங்கள் ஏற்படும் போது அவற்றைக் கலைச்செல்வங்களாக்குதல் வேண்டும். கலைவடிவம் தந்து அழகாகப் படைத்தல் வேண்டும் என்று எழுத்தாளர்களுக்கு வேண்டுகோள் விடுக்கும் வகையில்[8] எழுத்தாளர் கொள்ளத்தக்க குறிக்கோளைப் புலப்படுத்தியுள்ளார். டாக்டர் மு. வ. தம் நாவல்கள் வாயிலாகச் சமுதாயத்தின் சிக்கல்களை — அகப்புறப் போராட்டங்களைப் பல்வேறு கோணங்களில் அணுகி சமுதாய விடிவிற்கான புதிய நோக்கங்களை வெளியிட்டுள்ளார்.

## கருவும் கலையும்

கரு என்பது கருத்தன்று; அது நேரடியாகவோ, மறைமுகமாகவோ வெளியிடுகின்ற கருத்தினுள் பொதிந்துள்ள மையப்பகுதியே ஆகும்.[9] கரு என்பது நாவல் என்னும் கட்டடத்தின் அடித்தளம் போன்றது. 'கதைக்கு எதுவும்

கருவாக (Plot) அமைய முடியும். ஆயின் அக்கருவிற்கு உணர்ச்சியூட்டிச் சிறப்பித்தல் கதையாசிரியரின் திறனே ஆகும். 'கரு'வைச் சிதைக்காவண்ணம் பின்னப்படுகின்ற திறனே கலைத்தன்மை வாய்ந்த படைப்பினை உருவாக்க வல்லது.

டாக்டர் மு. வ., தாம் காண விழைகின்ற சமுதாயத்திற்கான புரட்சிக் கோட்பாடுகளையும், வாழும் நிகழ்காலச் சமுதாயத்திற்குத் தேவையான சீர்திருத்தச் சிந்தனைகளையும், குடும்ப உறவில் அணுகிச் செல்ல வேண்டிய நெறிகளையும் எடுத்துரைத்து மனித வாழ்விற்கான புதிய பாதைகளைக் காட்டியுள்ளார். இன்றைய நடைமுறை வாழ்வில் சந்திக்கின்ற சிக்கல்களைக் கூர்ந்துநோக்கிச் சமுதாய நலவுணர்வுடன் அவற்றையே கருக்களாக்கி நாவல் புனைந்துள்ளார்.

காதலின் பல்வேறு கோணங்களைச் சித்திரித்துக் காட்டுவது 'செந்தாமரை'. தாய்மையின் ஆற்றலைப் புலப்படுத்துவது 'பெற்ற மனம்'. 'கள்ளோ காவியமோ?' பெண்களுக்கு இழைக்கப்படுகின்ற இன்னல்களை வடிப்பது. 'கரித்துண்டு' கலைமனத்தின் உணர்வைப் புலப்படுத்துவது. உணர்ச்சிக்கும் அறிவிற்கும் இடையே நடைபெறும் போராட்டத்தை — இளைஞர்களின் போக்கைப் புலப்படுத்துவது 'அகல் விளக்கு'. நாடு கடத்தப்பட்ட மக்களின் துன்பத்தை — வரலாற்று நிகழ்ச்சியை வடித்துக் காட்டுவது 'அந்த நாள்'. 'கயமை' அரசு அலுவலகங்களில் நடைபெறும் முறைகேடுகளை நடுவண் சிந்தனையாக்கிப் புனையப்பெற்றது. மலர்விழி, அல்லி, நெஞ்சில் ஒரு முள், வாடாமலர் குடும்ப உறவில் ஏற்படுகின்ற உறவுச் சிக்கலையும், உணர்வுச் சிக்கலையும் விவரிப்பன.

கருத்தும் கலையும்

நாவல் என்பது இன்றைய அறிவியல் இணைந்த வேகமான காலகட்டத்தில் அமைந்துள்ள வாழ்க்கையைச்

சித்திரித்துக் காட்டும் இலக்கிய வடிவமாகும். இத்தகைய படைப்பிலக்கியம் எந்த அளவுக்கு வாழ்வோடு தொடர் புடையதாக அமைகிறதோ அந்த அளவுக்கு அப்படைப் புக்கு வாழ்வு அமைகிறது. பேராசிரியர் கல்கி அவர்கள் 'கதையில் கதையும் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அது கதையாகவும் இருக்கக் கூடாது' என்பார். எனவே, நாவல் என்பது பொய்மையற்றதாகவும், புனைவதுடையதாகவும் அமையவேண்டும் என்பது புலனாகிறது. கலைநயம் கெழுமிய, கற்பனை இணைவுடன் வாழ்க்கையின் வார்ப்பாக அமையவேண்டும் நாவல்; அப்போதுதான் படைப்பின் பயன் சமுதாயத்திற்குரியதாகும்.

"கலையை விரும்புவோர் இருவகை. பொழுது போக்குக்காகச் சிலர் விரும்புவார்கள்; சிலர் கலை தங்களை உயர்த்துவதற்கும் வாழ்க்கையில் புதுவழியைக் காண் பதற்கும் உதவும் கருவியாகப் பயன்படுத்த எண்ணுவார்கள். கலையை, வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்ளப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்ற கட்சியைச் சார்ந்தவன் நான். ஆகையினாலேயே தான் என் கதையில் கருத்தையும் சேர்த்து வருகின்றேன்"[10] என்ற கருத்தினர் டாக்டர் மு. வ. தனிமனித வாழ்வு என்பது சமுதாயத்தின் போக்கிற் கேற்ப வடிவம் பெறுவது. சமுதாயமும் மனிதனுக்குச் சிக்கல்களைக் கொடுத்துக் கொண்டேயிருக்கும். அதனால் மனிதன் சிக்கல்களிலிருந்து ஒதுங்கியும் தப்பித்தும் வாழ முற்படுகின்றான். அதுதான் வாழ்க்கை[11] என்றும் கருது கிறான் (மலர்விழி). மனிதன் சிக்கலின்றி வாழ வேண்டும்; அல்லது சிக்கலைத் தீர்க்கின்ற மனப்பக்குவத்தையாவது பெற வேண்டும். சமுதாயத்தின் பிற்போக்குத்தனமான ஏற்பாடுகளை, எதிர்பார்ப்புகளை உடைத்தெறிய வேண்டும் என்னும் நோக்கில் சிந்தித்தார் டாக்டர் மு. வ. எனவே தான், தனிமனிதனுக்கும், சமுதாயத்திற்கும், தனி மனிதனுக்கும் அகவாழ்வுக்கும் ஏற்படுகின்ற சிக்கல்களைச்

சமுதாய வித்தகராய் நின்று அணுகினார். அம்முயற்சியின் விளைவுதாம் அவருடைய கலையும் கருத்தும்.

டாக்டர் மு. வ. தம் நாவல்கள் அனைத்திலும் கருத்துகளை எதிரொலிக்கும் பாத்திரங்களாகவே படைத்துள்ளார் என்றும், சில இடங்களில் கட்டுரையாளராகவே நாவல்களில் விளங்குகிறார் என்றும், மு. வ. வின் கலைப்படைப்புகளைக் குறை காண்பது உண்டு. டாக்டர் மு. வ. வின் பாத்திரங்களான அறவாழி, செல்வநாயகம், முருகையா, கமலக்கண்ணன் ஆகியோர் பண்பு நலனுக்கேற்பச் சமுதாயச் சிக்கல்களுக்கும், வாழ்வின் அகப்போராட்டங்களுக்கும் தீர்வு காண்கிறார்களேயொழிய, நேரத்திற்கு வந்து மேடையேறி கருத்துரை வழங்கிச் செல்லும் பேராசிரியர்களாகப் படைக்கப் பெறவில்லை என்பது கருதத் தக்கது.

டாக்டர் மு. வ. அவர்களே நேரில் வந்து பேசுவதாகக் கருதி மு. வ. வின் நாவல்களை வெறும் கருத்துரை நாவல்கள் என்று தரம் மெலிந்த தன்மையாக மதிப்பிடுவோர் உளர். ஆழ்ந்து நோக்கும்போது எந்தக் கருத்தை எடுத்துரைக்கும்போதும் பாத்திரத்தின் பண்புநலனுக்கும், போக்கிற்கும் நாவலின் பாங்கிற்கும், நிலைக்கும் ஏற்ற வண்ணமே பேசவைக்கப்பட்டுள்ளனரே தவிர, பண்புக்கும் கருத்துக்கும் முரணான பாத்திரங்கள் மீது கருத்துகளைத் திணிக்கவில்லை என்பது நினைவுகூரத் தக்கதாகும். உரையாய் உத்தியைக் கொண்டே பாத்திரங்கள் கருத்துகள் வழங்கப் பெற்றுள்ளன என்பதும் டாக்டர் மு. வ. கருத்தறிவுப்புத் திறனில் நோக்கத் தக்கதாகும்.

''படித்த இளைஞர்களும் பண்புள்ள அழகிகளும் பணத்திற்காக விலைபோகும் கொடுமை வேறு எந்த நாட்டிலும் இவ்வளவு மலிந்துள்ளதாகக் கூற முடியாது. திருமணக் காலங்களில் குடும்பங்களில் நடக்கும் பேச்சைக் கேட்டால்,

இந்த நாட்டிற்கு ஆத்மீகத் தொடர்பு மிகுதி என்று சொல்வதற்கு வாய் கூசும்''[12] (அகல் விளக்கு).

முரண்பாடுகளின் முழுவடிவமாகிப் போய்விட்ட அவலத்தையும், பணமே வாழ்க்கையின் குறிக்கோளாக்கி — முறையற்ற தன்மையில், மனிதத்தன்மையற்ற வகையில் செல்லும் சமுதாயத்தின் போக்கையும் கண்டிக்கின்றார் மு. வ. மேலும் கலைப்பாங்கைச் சிதைக்காவண்ணம் பாத்திரத்தின் பண்புநலனையொட்டிக் கருத்தை வழங்கியுள்ளமையும் அறியத்தக்கதாகும்.

'திருமணமாகி இல்வாழ்க்கையில் ஓரளவு பெற்ற அனுபவம் போதும். அந்த அனுபவத்தைப் பயன்படுத்தி எஞ்சிய வாழ்க்கையை மற்றவர்களுக்கு வழிகாட்டும் வகையில் வாழ்ந்தால் போதும்'[13] என்று 'அல்லி'யில் உரைத்த மு. வ., அக்கருத்தின் வடிவமாக அகல்விளக்கில் பாக்கியம் அம்மையாரைப் படைத்துக் காட்டியுள்ளார். அந்த அம்மையார் அருட்பா, கைவல்லியம், இராமதீர்த்தரின் அறிவுரைகள், மணிமேகலை வாசகம், சத்திய சோதனை, தாயுமானவர் பாடல்கள் ஆகியவற்றைப் படித்ததால் அன்பும், பண்பும் தனிமையில் இனிமையும் பெற்றதாகப் படைத்துக் காட்டுகிறார்.

வடிவத்தால் மட்டுமின்றி, சமுதாயத்தை அணுகி, விளக்கம் கூறுகின்ற முறையாலும் புதுமையைக் காணும் போதே உரைநடைக் காப்பியமான 'நாவல்' புதினமாகும். பழந்தமிழ் இலக்கியத்திலும், பண்பாட்டிலும் தோய்ந்து வளர்ந்த டாக்டர் மு. வ. புதிய இலக்கிய வடிவத்தைப் பயன்படுத்தி, வெற்றி கண்டார். நாவலாசிரியர் என்பவர் உள்ளதை உள்ளவாறு, உணர்ந்தவாறு சித்திரிப்பவர் மட்டும் அல்லர்; உணர்த்த விரும்பியவாறு சித்திரிக்க வல்லவரே; வேண்டியவரே ஆவார். கற்புக்கு மு. வ. தரும் விளக்கம் புதுமையானது மட்டுமன்று; புரட்சியானதுமாகும். 'கரித்துண்டு' என்ற நாவலில் படைப்பாளராக

நின்று பாத்திரங்களின் போக்கையொட்டி, கருத்துரை வழங்கியிருந்தால், டாக்டர் மு. வ. சிந்தனையாளர் என்ற வகையில் போற்றப் பெற்றிருப்பார்; ஆனால் தாம் படைத்த 'பேராசிரியர் கமலக்கண்ணர்' வாயிலாக வெளிப் படுத்தி அவர் ஒரு கலைஞராக வெற்றி பெற்றுள்ளார்.

'கற்பு என்றால் வாழ்நாள் முழுவதும் ஒருவன் ஒருத்தி யாக உண்மையாக வாழ்வது என்று சொல்வார்கள். அது பழங்காலத்திற்கு மிகப் பொருந்தும். பழங்காலத்தில் கைத் தொழில் வளர்ச்சி மட்டும் இருந்தது. இந்தக் காலத்தில் யந்திரத் தொழில் வேகமாக வளர்ந்து வருகிறது. ஆராய் தலும் அனுபவித்தலும் மிகுதியாக உள்ள காலம் இது. ஆகவே ஒருவனை விட்டு இன்னொருவனுடனும் வாழும்படி நேரலாம். ஒருவனை விடாமல் இன்னொருவனுடன் வாழ்வதுதான் தவறு. எப்போது எவனுடன் வாழ்கிறாளோ அவனுக்குத் துரோகம் செய்யாமல் இருந்தால் போதும்; அதுதான் கற்பு''.[14] (கரித்துண்டு)

### பாத்திரப் படைப்பு

படிப்பாளரின் சிந்தையை என்றும் தொட்டு நிற்கும் கலைக்கூறு பாத்திரப் படைப்பாகும். கருவாலும், கதைப் பின்னலாலும் வெற்றிபெற முடியாத நாவலைப் பாத்திரப் படைப்பால் வெற்றிபெறச் செய்ய இயலும். காலத்தைக் கடந்து படைப்பாளனையும் படிப்பாளனையும் இணைத்து நிற்கும் பாலம் போன்றது பாத்திரப்படைப்பு. சார்லஸ் டிக்கன்ஸ், தாக்கரே, மாப்பசான், அலெச்சி டால்ஸ்டாய் போன்றோர் பாத்திரப் படைப்பு என்பதைத் தங்கள் உணர்வின் படைப்பாகவே கருதியுள்ளனர். தமிழ் நாவலாசிரியர் அகிலன் பாத்திரப்படைப்பு குறித்துக் குறிப்பிடும் கருத்து — படைப்பாளரின் மனவோட்டத்தி லிருந்து புறப்படும் உயிர்த் துடிப்பே பாத்திரப் படைப்பு என்பது நன்கு விளக்கமுறுகிறது.

''என் இரத்தத்திலிருந்தும் உயிர்மூச்சிலிருந்து இதயத் துடிப்பிலிருந்தும் பிறந்தவர்கள் அவர்கள். இன்னும் சொல்லப்போனால் அவர்கள் என்னைவிட உயர்ந்தவர்கள், மண்ணின் தெருப்புழுதியில் அலைந்து திரியும் என் உணர்ச்சிகள் என்னிலும் உயர்ந்த விண்ணை நோக்கிப் பிறந்த வேளைகளில் என்னிடமிருந்து பிறந்தவர்கள் அவர்கள்''. (கதைக்கலை, ப. 111)

உணர்ச்சியின் துடிப்பிலிருந்து பிறந்து வாழ்க்கையைப் பிரதிநிதித்துவப் படுத்தும் பாத்திரங்களே ஒரு படைப்பிற்கு அமரத்தன்மையைத் தருகின்றன.

கருப்பொருளையோ, பாத்திரப் படைப்பையோ தலைமை நோக்கம் ஆக்கி நாவல் புனைவது இயல்பு. கருப் பொருளுக்கேற்பப் பாத்திரங்களைப் படைத்து நிகழ்ச்சிப் பின்னலை உருவாக்கிக் கலைத்திறன் காட்டுவோர் சிலர்; கருப்பொருளின் மையத்தில் பாத்திரங்களைத் தோற்றப் பொலிவோடு சித்திரிப்போர் சிலர்; இத்தகைய நெறியினருள் நாவல்களில் பாத்திரங்களையெல்லாம் தம் கருத்துகளில் எதிரொலிகளாகப் படைப்போரும் உளர். 'கலைஞன் என்பவன், வாழ்க்கையின் போராட்டத்தை எடுத்துரைப் பவன் மட்டுமல்லன்; போராட்டத்திற்குத் தீர்வு காணு பவனும் அவனே' என்ற கோட்பாட்டினரான டாக்டர் மு. வ., தம் பாத்திரங்களைச் சமுதாயச் சிக்கல்களின் உயிர்த் துடிப்புகளாக, உணர்ச்சிகளின் வார்ப்புகளாக ஆக்கியுள்ளார். மு. வ. தம் நாவல்களில் பாத்திரங்களைப் படைத்துள்ளார் என்று கூறுவதை விட, சமுதாய மாந்தர் களையே படிப்பாளரின் சிந்தனை மேட்டில் நிழலாடச் செய்துள்ளார் எனலாம்.

''அறச்சிந்தனையின் அல்லது சமுதாயச் சிந்தனையின் வார்ப்பாக நடப்பியல் நாவல்களில் பாத்திரங்கள் படைக்கப் பெற்றிருக்குமானால் அது பொருள் பொதிந்ததாகும்'' என்பார் இராபர்ட் ஸ்கோவஸ். டாக்டர் மு. வ. தம்

நாவல்களில் அறவாழி, கமலக்கண்ணர், முருகையா, மெய்கண்டார் போன்ற பாத்திரங்களைச் சிந்தனை முகவர்களாகப் படைத்துள்ளார் என்பது உண்மை. ஆனால் டாக்டர் மு. வ. வின் பாத்திரங்கள் எல்லாம் கருத்துகளின் முகவர்கள்தாம் என்று கூறிவிட முடியாது. மு. வ. வின் நாவல்களில் நடமாட விட்டிருக்கும் பாத்திரங்கள் எல்லாம், எலும்பும், தசையும் கொண்டவை மட்டுமல்ல; உணர்ச்சியும் இணைந்த உயிரோவியங்கள் என்பதை ஆழ்ந்து நோக்குவோர் அரிதின் உணர்வர். இன்றைய சமுதாயம் பொருளியல் நிலையிலோ, பாலியல் நிலையிலோ ஏற்படுகின்ற குறையை அளந்து வைத்து ஒருவரையொருவர் வஞ்சித்து வாழும் போக்கில் அமைந்துள்ளது என்பதை நன்குணர்ந்த மு. வ. வஞ்சப் பாத்திரங்களையும் படைத்துச் சமுதாயச் சூழலைப் புலப்படுத்தியுள்ளார். டாக்டர் மு. வ. கருத்தியல்வாதியாக மட்டுமிருந்து பாத்திரங்களைப் படைக்காமல் நடப்பியல்வாதியாகவும் இருந்து பாத்திரங்களைப் படைத்துள்ளார்.

### பண்புநல வெளிப்பாடு

படைப்பாளர்கள் பாத்திரங்களின் பண்புகளை மூன்று வகையில் வெளிப்படுத்துவர். (1) படைப்பாளர்களே பாத்திரங்களின் போக்கை நேரடியாக எடுத்துரைத்தல், (2) படைப்பில் உள்ள பாத்திரங்களின் பண்பை மற்ற பாத்திரங்கள் வாயிலாக வெளிப்படுத்துதல், (3) பாத்திரங்களே தங்களின் போக்கை எண்ணி உரைத்தல் ஆகிய மும்முறையில் பாத்திரப் படைப்பு வெளிப்படல் இயல்பு. இவற்றை இருவகையில் அடக்கிக் காண்பதுமுண்டு. ஆசிரியர் நேரடியாகத் தாமே பாத்திரத்தின் போக்கை எடுத்துரைத்தல் நேரடி முறை என்றும், பாத்திரங்களே மற்றப் பாத்திரங்கள் குறித்துக் குறிப்பிடுவதை நாடகப்பாங்கின என்றும் கூறுவர்.

## பாத்திரப்படைப்பு

| நேரடிப்பாங்கின | நாடகப்பாங்கின |
| --- | --- |
| மோகன் (கரித்துண்டு) | மங்கை (கள்ளோ? காவியமோ?) |

செல்வநாயகம் (மலர்விழி), வடிவு (நெஞ்சில் ஓர் முள்) சந்திரன் (அகல் விளக்கு), மெய்யப்பன் (மண்குடிசை) நாவல்களில் இடம்பெறும் பாத்திரங்களின் போக்கை — அவர்களுக்கு இடும் பெயர்கள் வாயிலாகவே சுட்டுவர் படைப்பாளர். சமுதாயத்தின் பார்வையில் தனிமுத்திரை பெற வேண்டுமென்ற நோக்கில் படைப்பாளர்கள் இத்தகைய பெயர் உத்திகளைப் பயன்படுத்துவதுண்டு. இதனைக் குறுக்கு உத்தி (Fringe technique) என்று வழங்குவர் திறனாய்வாளர்.

'கதைமாந்தர்கள் என் உள்ளத்தில் பிறந்து வளர் கிறார்கள். அவரவர்களுக்குப் பெயர்வைக்கும் பொறுப்பு ஏற்படும்போது அவரவர்களின் பண்புகள் உள்ளத்தில் நின்று தூண்டுதல் புரிகின்றன. அதனால் அப்படிப் பெயர்கள் உண்டு', என்னும் கூற்றிற்கு ஏற்ப டாக்டர் மு. வ. தம் நாவல்களில் படைக்கப் பெற்றுள்ள பாத்திரங் களுக்குப் பெயர்களை வழங்கியுள்ளார். பாத்திரங்களின் பண்பு நலன்களையும் வாழ்க்கை முறையையும்யொட்டி வழங்கியிருக்கும் பெயர்கள் படைப்பின் கலைத்தன்மைக்கு உரமூட்டியுள்ளன.

### 1. நெறிநிலைப் பாத்திரங்கள்

அறவாழி, மெய்கண்டார், கமலக்கண்ணர், அருளப்பன், சீராளர், திலகம், பாவை, செந்தாமரை, மங்கை மான்விழி, மென்மொழி, தேமொழி.

### 2. நெறியிலாப் பாத்திரங்கள்

ஆணவர், சுப்புரத்தினம், கேசவராயன், வசீகரம், சகசாம்பாள்.

### 3. எளிய வாழ்வு உடைய பாத்திரங்கள்

திருவேங்கடம், வேலய்யன், குழந்தைவேல், மணி, சந்திரா, வள்ளி, ரேவதி, கனகா.

### 4. முரணிலைப் பாத்திரங்கள்

பாத்திரப் படைப்பின் ஆற்றலை வெளிப்படுத்துவது முரணிலைப் பாத்திரங்களாகும். சமுதாயச் சித்திரிப்பாக மட்டுமின்றி, கலைத்திறன் வெளிப்பாடாக விளங்குவது முரண்நிலை படைப்பாகும்.

மோகன் — நிர்மலா (கலையும்/ஆடம்பரமும்) (கரித் துண்டு)

காஞ்சனை — செல்வநாயகம் (எளிடையும்/ஆடம்பர மும்) (மலர்விழி)

தானப்பன் — குழந்தைவேல் (உணர்ச்சி/அமைதி) (வாடாமலர்)

### 5. கோட்பாட்டுப் பிரதிநிதித்துவப் பாத்திரங்கள்

டாக்டர் மு.வ.வின் பாத்திரங்கள் உணர்வின் சித்திரிப்பு என்பதைவிட கருத்தின் சித்திரிப்பு என்பதே மிகப் பொருந்தும். ஒவ்வொரு பாத்திரப் படைப்பின் தன்மையிலும், ஒவ்வொரு எழுத்தின் அசைவிலும் சமுதாய நோக்கமே நெம்புகோலாகயிருந்து டாக்டர் மு.வ.வை உந்தியுள்ளது. குடும்ப வாழ்வில் ஏற்படும் சிக்கல்களையும் சமுதாய வாழ்வில் ஏற்படும் சிக்கலையும் எடுத்துரைக்கும் டாக்டர் மு. வ. அரசியல் கோட்பாடுகளையும் எடுத்துரைக்கிறார்.

'பேராசிரியர் கமலக்கண்ணன்' என்னும் பாத்திரத்தை முதலாளித்துவச் சிந்தனையின் பிரதிநிதியாயும், குமரேசன் என்னும் பாத்திரத்தை—சமத்துவச் சிந்தனையின் பிரதிநிதியாகவும் படைத்துள்ளார்.

நாவலாசிரியர் மு.வ.வின் படைப்புகளில் சிந்தனையாளர் மு.வ.வையும் சில பாத்திரங்களில் காண முடிகிறது.

நாவலாசிரியர்களின் படைப்பாற்றல் படிப்பாளரின் நெஞ்சில் நிழலாடச் செய்கின்ற பாத்திரப் படைப்பின் திறனைப் பொறுத்தும் அமைவதுண்டு. ஜெயகாந்தனின் கங்காவும்; அகிலனின் தணிகாசலமும், பார்த்தசாரதியின் பரணியும், தகழியின் கருத்தம்மாவும், படிப்பாளரின் நினைவிலே நிலைபேற்றைப் பெற்றதைப் போல் நாவலாசிரியர் டாக்டர் மு.வ.வின் அல்லி (அல்லி), சந்திரன் (அகல் விளக்கு), ஆணவர் (கயமை), செல்வநாயகம் (மலர்விழி) ஆகியோர் சிறப்பிடம் பெறத்தக்கவராவர். கருத்துக் கலைஞரான டாக்டர் மு.வ.வின் 'அறவாழி' (அல்லி) பாத்திரப்படைப்பில் குறிப்பிடத்தகுந்த பாத்திரமாகும்.

## படைப்பின் சங்கிலித்தன்மை

நாவலாசிரியர்கள் சிலர் தம் சிறுகதையில் வரும் கருவையே நாவல் ஆக்குவதுண்டு. (ஜெயகாந்தனின் அக்கினிப் பிரவேசத்தின் வளர்ச்சியே 'சில நேரங்களில் சில மனிதர்கள்' ஆக வளர்ச்சியுற்றது). ஒரு நாவலின் கருவையோ பாத்திரங்களை எழுதும் மற்றொரு நாவலில் வளர்ச்சி நிலையாகவோ—தொடர்ச்சியாகவோ காட்டுவதுண்டு. நிகழ்ச்சிப் பின்னலில் இணைந்துவரும் நாவல்களும் உண்டு. (கள்ளோ? காவியமோ?, கரித்துண்டு). கள்ளோ? காவியமோ? என்ற நாவலில் வரும் அருளப்பர் அகல்விளக்கில் சொற்பொழிவு ஆற்றும் பேராசிரியராய்ப் படைக்கப் பெற்றுள்ளார். அல்லியில் படைக்கப்பெற்ற

அறவாழி சிந்தனை வளம் கெழுமிய முழுமை நிறைந்த பாத்திரமாகப் படைக்கப் பெற்றுள்ளார்.

இலக்கியத் திறனாய்வாளர்கள் பாத்திரப் படைப்பை முழுநிலை மாந்தர் (Round Character) என்றும், ஒருநிலை மாந்தர் (Flat Character) என்றும் பகுத்துக் காண்பது முண்டு.[16] இப்பகுப்பாய்வுக்கு ஏற்பப் பாத்திரங்கள் படைக்கப் பெற்றுள்ளமையை ஆய்வோர் உணர்வர்.

**வடிவம்**

எந்த ஒரு தனிமனிதனின் வாழ்வும் எதிர்நோக்குகின்ற வரைபடங்களுக்குள் அடங்குவதில்லையோ அதைப் போலவே நாவலின் அமைப்பிற்கும் ஒரு குறிப்பிட்ட வரன் முறையில்லை. படைப்பாளன் எடுத்துக் கொள்ளுகின்ற கருப்பொருளையும், அதனடிப்படையில் உருவாக்கும் கதைப்பின்னலையும் கொண்டே படைப்பின் அமைப்பு செம்மை பெறுகிறது. எனவே, நாவல்களில் சில பொதுத் தன்மைகள் அமைந்திருந்த போதிலும், ஒவ்வொரு நாவலுக்கும் ஒவ்வொரு வடிவம் உண்டு.

"நாவல் எந்தச் சமுதாயத்தைப் பற்றி எடுத்துரைக் கிறதோ அந்தச் சமுதாயமே பற்பல மாறுதல்களைப் பெற்றுவரும்போது, நாவல் என்னும் இலக்கிய வகை இப்படித்தான் அமையவேண்டும் என்ற இலக்கணம் கூறி வரையறுப்பது பொருந்தா முயற்சியாகும்"[17] என்று கருது கிறார் ரிச்சர்ட் சர்சு. எனவே நாவலின் வடிவம் பொது வான நியதிகளுக்கு உட்பட வேண்டியதன்று என்பது புலனாகிறது. கதைப்பின்னலையும், கருப்பொருளையும் சார்ந்து தொடக்கமும், முடிவும் அமையும்போது அவை கலைக்கூறுகளாகப் போற்றப் பெறுகின்றன.

**தொடக்கம்**

டாக்டர் மு.வ. நாவல்களின் தொடக்கங்கள் சிந்தனை யைச் சிலிர்க்கச் செய்வன மட்டுமல்ல; கதையின் கருவைக்

குறிப்பால் உணர்த்துவனவுமாகும். பாத்திரங்களின் உணர்வுப் புலப்பாடாக—வருணனைப் போக்கினதாக—கருப்பொருளின் குறியீடாக அமைந்துள்ள திறன் குறிக்கத் தக்கதாகும்.

## 1. கருவின் குறிப்புப் பொருள்

"உலகம் பொல்லாதது; அவர் நல்லவராக இருந்தாலும் உலகம் பொல்லாதது"[18] (கள்ளோ காவியமோ?)

"படிப்பு உடம்பை மட்டும் மென்மையாக்குகிறது என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அது மனத்தையும் மென்மையாக்குகிறது என்பதை இப்போது நன்றாக உணர்கிறேன்"[19] (நெஞ்சில் ஒரு முள்)

## 2. பாத்திரங்களின் உணர்வுப் புலப்பாடு

"பாலாற்றங்கரையில் நானும் சந்திரனும் கைகோத்து உலவிய நாட்கள் எங்கள் வாழ்க்கையிலேயே பொன்னான நாட்கள்".[20] (அகல் விளக்கு).

## முடிவு

டாக்டர் மு.வ. நாவல்களின் முடிவு நிலைகள் பெரும் பாலும் கதையின் போக்கையொட்டியனவாகவே அமைந் திருந்தபோதிலும் சில கதைகளின் முடிவுகள் பாத்திரத்தின் போக்கையொட்டி—சமுதாயத்திற்கு உணர்த்தக் கருதும் சிந்தனையின் உருவகத் தன்மையதாய் அமைந்துள்ளன. பாத்திரங்கள் மன உணர்வுகளை நுணுக்கமாக வெளியிடும் திறத்தில் ஆழ்ந்த பார்வையைச் செலுத்தவில்லை என்று குறை கண்டாலும், டாக்டர் மு.வ. வைப் போல் அளப்பரிய சிந்தனைகளை நாவல் வரலாற்றில் கலைப்பாங்கோடு வழங்கியவர் மிகச் சிலரே.

அகல் விளக்கில் இடம்பெறும் சந்திரன் உணர்ச்சியின் உருவகம். எந்த முடிவுகளையும் சிந்தனையில் உராய்ந்து

பார்க்கின்ற அமைதியற்றவன். அவசரப்பட்டு எடுத்த முடிவுகளால் வாழ்க்கையைச் சிதைத்துக் கொண்டவன். அவன் வாழ்க்கையின் முடிவை உரைக்கும் வகையில் சமுதாயத்திற்கு உரைக்க விரும்பிய கருத்தைக் கதையின் முடிவில் உணர்த்திச் செல்கிறார் மு.வ.

"இடுகாட்டிலிருந்து திரும்பிய போதும் கற்பகத்தின் அழுகை ஓயவில்லை. வழியில் சைக்கிளில் சென்ற இருவரில் ஒருவன் "டே! எப்போதும் இதில் வேகம் வேண்டாம்டா. வேகம் உன்னையும் கெடுக்கும்; உன்னைச் சார்ந்தவர்களையும் கெடுக்கும்" என்றான். வலப்பக்கத்தே விளையாட்டு வெளியில் ஒரு பந்தாட்டம் நடந்து கொண்டிருந்தது. ஆரவாரத்திற்கு இடையே "விளையாட்டாக இருந்தாலும் விதிகளுக்குக் கட்டுப்படவேண்டும் தெரியுமா? நீயே அரசன் என்று எண்ணிக்கொண்டு உன் விருப்பம் போல் ஆடமுடியாது, தெரிந்து கொள்" என்ற குரல் கேட்டது. சிறிது தொலைவு வந்துவிட்ட பிறகும் பந்தாட்டக்காரரின் ஆரவாரம் கேட்டுக் கொண்டிருந்தது!"[21] (அகல் விளக்கு).

ஒரு மனிதனிடம் உணர்ச்சி தலைமையேற்றால் அறிவு தூங்கும்; அறிவு தலைமையேற்றால் உணர்ச்சி ஆற்றுப் படும். இக்கருத்தினை உணர்த்த விழைந்த மு. வ. கதைப் பின்னலையொட்டி, உருவகப்போக்கில் காட்சியமைத்துச் சமுதாயத்திற்குச் சொல்ல விழைந்த கருத்தைக் கலைப் பாங்கோடு கதையின் முடிவிலே அமைத்துள்ளார்.

**உத்திகள் (நோக்குநிலை)**

படைப்பிலக்கியம் என்பது சமுதாயத்தின் பயன் பாட்டிற்கும் மேம்பாட்டிற்கும் உரியதாக வேண்டுமென்று கருதியவர் டாக்டர் மு. வ. என்பதை முன்னரே குறித்தோம். எனவே கருத்து இழைக்கப்படுவதெனில், கலைப்பாங்கை சிதைக்காவண்ணம் சில உத்திமுறைகளைக் கையாள

வேண்டும். உத்திமுறை என்பது படைக்கப் பெறுகின்ற படைப்பின் தன்மையைப் பொறுத்து அமைவதாகும். கதைக்கும் புதினத்திற்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் காட்டும் கலைஉத்தி எடுத்துரை முறை ஆகும். இதனை 'நோக்குநிலை'[22] என்பர். இது படைப்புத்திறனின் 'தலை வாயில்' ஆகும். இந்நோக்குநிலையை, அகநோக்குநிலை, புறநோக்குநிலை என்று திறனாய்வாளர்கள் பிரித்துக் காண்பர். டாக்டர் மு. வ. தம் நாவல்களில் ஆறுவகையான உத்திமுறைகளைக் கையாண்டுள்ளார்.

1. தலைமை மாந்தர் தற்கூற்றுப்போக்கில் அமைந்தவை; அல்லி, நெஞ்சில் ஒரு முள், மண்குடிசை.

2. தலைமை மாந்தர் மாறி மாறிக் கதையை எடுத்துரைப்பது: கள்ளோ? காவியமோ?

3. தலைமை மாந்தருடன் நேரடித் தொடர்பு கொண்டோர் கதையை எடுத்துரைக்கும் பாங்கின: அகல் விளக்கு, வாடாமலர்.

4. துணைமாந்தர் கதை கூறுவதுபோல் அமைந்தன: மலர்விழி, கரித்துண்டு.

5. கதைமாந்தர் பலரும் மாறிமாறிக் கதையை உரைப்பது : செந்தாமரை.

6. ஆசிரியர் கூற்றில் — படர்க்கைக் கூற்றில் அமைந்தவை : பாவை, பெற்றமனம், கயமை.

இந்நோக்கு நிலைகள் டாக்டர் மு. வ. வின் நாவல்கள் வெறும் கருத்துரைப் படைப்புகள் என்ற கருத்தையே மாற்றவல்ல கலைக்கூறாய் அமைந்துள்ளன.

### நாட்குறிப்பும் கடிதமும்

டாக்டர் மு. வ. இரு நோக்குநிலையில் தம் நாவல்களைப் படைத்திருந்த போதிலும், கலைத்திறனை வெளிப்

படுத்த வேண்டிய இடத்தில் பாத்திரங்களின் மன அசைவு களையும், உணர்வு வெளிப்பாட்டுச் சிக்கலையும் வெளிப் படுத்த நாட்குறிப்பு உத்திமுறையையும் கடித உத்திமுறை யையும் கையாண்டுள்ளார். சமகாலப் படைப்பாளர்கள் என்ற நோக்கில் அணுகும்போது அறிஞர் அண்ணா குமாஸ்தாவின் பெண் அல்லது கொலைகாரியின் குறிப்புகள் என்ற நாவலை நாட்குறிப்பு உத்திமுறையிலும், மறைமலையடிகள் 'கோகிலாம்பாள் கடிதங்கள்' என்ற நாவலை கடித உத்திமுறையிலும் எழுதியுள்ளமை குறிப் பிடத்தக்கனவாகும். மறைமலையடிகளின் கோகிலாம்பாள் கடிதத்தில் கொண்ட உத்திமுறை சில இடங்களில் கலைத் தன்மையைச் சிதைத்துள்ளது என்பாருமுளர். ஆனால் மு. வ. 'அல்லி', 'கரித்துண்டு' ஆகிய நாவல்களில் கையாண்டுள்ள நாட்குறிப்பு, கடித உத்திமுறைகள் அவர் தம் படைப்பாற்றலை உயர்த்துவனவாய் உள்ளன. 'அல்லி' எனும் நாவல் பாலியல் வாழ்க்கையைக் கருவாகக் கொண்ட தாகும். 'அல்லி' மனவோட்டத்தையும், வாழ்க்கைப் போராட்டத்தையும், பாலுணர்வுச் சிக்கலையும், புற நோக்குநிலையிலிருந்து — ஆசிரியர் எடுத்துரைப்பதாக நாவல் அமைந்திருக்குமானால், அது விமர்சனத்தன்மைய தாகப் போயிருக்கும். ஆனால் டாக்டர் மு. வ. அகநோக்கு நிலையில் அல்லியே உரைப்பதாக அமைத்துள்ளார். இந் நோக்குநிலை நாவல் கலைத்தன்மைக்கு உணர்வூட்டி யுள்ளது. அல்லியின் அண்ணன் பாலுணர்வால் பாதிக்கப் பெற்றவன். அல்லியிடம் தன் பாலுணர்வுச் சிக்கலை வெளிப்படுத்தப் பண்பாட்டு வழிவந்த உறவுமுறை தடுக்கிறது.

அல்லியின் பார்வையிலிருந்து இந்நாவல் எடுத்துரைக்கப் படுகின்ற காரணத்தால் — சோமுவின் அக உணர்வை — பாலுணர்வுச் சிக்கலைத் தீர்க்க நாட்குறிப்பு உத்தி முறையைக் கையாண்டுள்ளார். நாட்குறிப்பின் வழியே 'அல்லி' சோமுவின் அகச்சிக்கலை ஆழ்ந்து நோக்குவதற்கு

வாயிலை ஏற்படுத்தியுள்ளார். 'சோமு' உயிரோடு இல்லாத காரணத்தால், 'அல்லி' நாட்குறிப்பு வழியே அவன் உணர்ச்சியை அறிவதாகக் கதைப்பின்னலை அமைத்தமை மேலும் 'அல்லி'யில் கலைத்திறனை உயர்த்தியுள்ளது. அவ்வாறே 'அல்லி'யில் இடம்பெறும் 'இன்பவல்லி'யின் மனப்போராட்டத்தைக் கடித உத்தி மூலம் புலப்படுத்தியுள்ளமை மு. வ. வின் கலைத்திறனுக்கு ஒரு மூத்தாய்ப்பு என்றே கூறலாம். அகநோக்கில் அமைந்த 'அல்லி'யில் உள் அகநோக்குநிலை உத்திமுறைகளைப் பயன்படுத்திப் பண்பாட்டு அடிப்படையிலும், உளவியல் பாங்கிலும் கதைப்பின்னலை உருவாக்கியிருக்கும் திறன் வியக்கத்தக்கதாகும்.

மு. வ. வின் கலைமேம்பாட்டுப் படைப்பாகக் கருதப்படும் 'கரித்துண்டு' நாவலில் சிறையில் மோகன் தன் கதையைச் சொல்வதாகவும், கடிதத்தின் மூலம் நிர்மலா எழுதுவதாகவும் அமைத்திருக்கும் போக்கு நோக்குநிலையைக் கையாளும் நுண்மாண் தன்மையைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

### தலைப்பு உத்தி (குறிப்புத்திறன்)

கதை மாந்தர்களின் பண்புநலன்களையொட்டி அவர்களுக்குப் பெயரிட்டுக் குறிப்பால் உணர்த்துவதைப் போல் சமுதாயப் போக்கையொட்டித் தம் நாவல்களுக்குப் பெயர் வழங்கியுள்ளார். நாவல்களுக்குத் தலைப்பிடுதல், பாத்திரங்களுக்குப் பெயரிடுதல் ஆகியவற்றுள் குறிப்புத் திறனைப் புலப்படுத்தியுள்ளமைபோல் டாக்டர் மு. வ. கதைப்பின்னலையொட்டி, சில காட்சிகளைப் படைத்துக் காட்டி அவற்றினுள்ளும் குறிப்புப் பொருளை ஆழ்ந்து நோக்குவோர் உணரும்வண்ணம் படைத்துள்ளார்.

குறிப்புப் பொருளின் ஆழ்திறத்தை நன்கு வெளிப்படுத்தும் டாக்டர் மு. வ. வின் நாவல்கள் கரித்துண்டு,

நெஞ்சில் ஒரு முள், அகல் விளக்கு, வாடாமலர் ஆகியன. சமுதாய நிலையை உருவகப்போக்கில் குறிப்பால் உணர்த்தி உள்ளவை கள்ளோ? காவியமோ?, மண்குடிசை ஆகும். இத்தகைய குறிப்புத்திறன் நாவல்களின் கலைத்திறனுக்கு அணிசேர்த்துள்ளன.

## நெஞ்சில் ஒரு முள்

நெஞ்சம் உள்ளவர்கள் வாழ்வில் ஒருநாள் செய்து விடுகின்ற தவற்றுக்காக வாழ்நாள் முழுவதும் வருந்துவதுண்டு. அத்தவறு அவர்களின் நெஞ்சில் முள்ளாய் உறுத்திக் கொண்டிருப்பதுண்டு என்பதை — மனச்சான்றினரின் உளப்போக்கைச் சித்திரித்துக் காட்டுவதே 'நெஞ்சில் ஒரு முள்'. அந்நாவலுக்கு வழங்கியிருக்கும் பெயரே குறிப்புப் பொருளை நன்கு புலப்படுத்துகிறது. 'வடிவு' என்னும் பெண் மணமானபின் பழைய காதலனிடம் தவறி விடுகிறாள். ஒருமுறை செய்கின்ற தவறு பல தவறுகளுக்கு நியாயங்களை உருவாக்கி விடுவதுண்டு. ஆனால் 'வடிவு' செய்த தவறு அவள் நெஞ்சத்தை உயர்த்தி விடுகிறது. எச்செயலிலும் ஒன்றிச் செய்கின்ற மனப் பழக்கத்தை உருவாக்கிக் கொள்கிறாள் 'வடிவு'. அவளின் நெறியாலே அவள்தன் கணவன் அகோரமும் மனம் மாறுகிறார். இல்லம் சிறக்கிறது. வாழ்க்கையின் போக்கை மாற்றி, நெறியாளாய்ச் சிறந்தபோதும், முன்பு செய்த தவறு முள்ளாய் உறுத்துகிறது. காலப்போக்கில் அறவாழி எனும் அறவோரால் 'வடிவு' அமைதி பெறுகிறாள்.

அக்கதையில் இடம்பெறும் விஜயா, இந்திரா இருவரும் தவறி விடுகிறார்கள். விஜயா அம்மையார் தாம் இளமையில் செய்த தவறை எண்ணி வருந்துகிறார். தம் கணவர் மீது வைத்த அன்பில் களங்கமின்றி வாழ்ந்து வருகிறார். ஆனால், அவர்தம் புதல்வி இந்திரா தவறு என்பதை ஒரு குற்றமாக எண்ணாமல் நியாயங்களை உருவாக்கிக் கொள்கிறாள். ஆடம்பரத்தில் நிறைவு கண்ட

இந்திரா வாழ்வின் முடிவில் கணவனை இழந்து தன்னிலை இழந்து இறக்கிறாள்.

மனச்சான்றின்றி வாழும் மனிதர்கள் வாழ்க்கையில் போராடித்தான் முடிவெய்துகின்றனர் என்ற கருத்தினை டாக்டர் மு. வ. 'நெஞ்சில் ஒரு முள்' ளில் குறிப்புத்திறனால் வெளியிட்டுள்ளார்.

**மண்குடிசை**

'இன்று உள்ள சமுதாயம் மண்குடிசை போன்றது. அதில் எலிகள் வளை தோண்ட முடிகிறது. பெருச்சாளிகள் கடைக்காலையே தோண்டுகின்றன. பலவகைப் பூச்சிகளும் குடிபுகுகின்றன. எல்லாம் சேர்ந்து குடிசையைப் பாழாக்க முடிகிறது. மண்குடிசையாக உள்ள வரையில் இவைகளைத் தடுக்க முடியாது. ஒன்று, குடிசையை விட்டு இயற்கையோடு இயற்கையாய்க் குகையில் தங்கி வெட்ட வெளியில் திரிய வேண்டும். அல்லது ஒழுங்கான கல்வீடு கட்டி வாழ வேண்டும். அப்போது எலிகள் முதலியன தோன்றி வளர முடியாது'. (மண்குடிசை, ப. 503)

மண்குடிசையையும், கல்வீட்டையும் சுட்டிக் காட்டுவதோடு, சமுதாயத்தின் சீர்கேட்டையும் குறிப்பால் உணர்த்தியுள்ளமையை உணர முடிகிறது. டாக்டர் மு. வ. கலைஞராகக் காட்சியளிப்பதோடு சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையாளராகச் சிறக்கக் காண முடிகிறது.

**உரையாடல் உத்தி**

நாவலாசிரியர்கள் நோக்குநிலையுடன், படிமக் காட்சிகள், சிறப்புச் சொல்லாட்சிகள், தொகையுரை, நினைவுக் காட்சிகள், வருணனை ஆகியவற்றை எடுத்துக் காட்டி, கதையின் போக்கைக் குறிப்பால் உணர்த்திச் செல்வதுண்டு.

டாக்டர் மு. வ. கதைப்போக்கை — கதையில் நிகழப் போகும் மாற்றத்தைக் குறிப்புப் பொருள் வாயிலாகவும் இயற்கைக் காட்சிகளைச் சுட்டுவதன் வாயிலாகவும், பாத்திரங்களின் உரையாடல்கள் வாயிலாகவும் உணர்த்திச் செல்வதுண்டு. அகல்விளக்கில், முன்முரண் பாத்திரமாகப் படைக்கப் பெற்ற சந்திரன் நெறியிலே மாற்றம் ஏற்படப் போவதையும், சீர்கெட்டுவிடப் போவதையும் சாமண்ணாவின் கருத்துரை வாயிலாக உணர்த்திச் செல்கிறார்.

'பட்டணத்துப் பக்கம் போனால் பிள்ளைகள் கெட்டுப் போகாமல் திரும்புவதில்லை. அங்கே போய்ச் சில நாள் தங்கி வந்தால் போதும். சினிமா, ஓட்டல், கச்சேரி, ஆட்டக்காரிகள், குதிரைப் பந்தயம், இப்படிப் படிப் படியாகக் கெட்டுப் போய்க் கடைசியில் ஓட்டாண்டி யாவதற்கு வழிதேடிக் கொள்கிறார்கள். அந்தப் பட்டணத்து வாழ்வும் வேண்டா; அதனால் வரும் படிப்பும் வேண்டா'[23] (அகல் விளக்கு) என்னும் உரை யாடல் வாயிலாக 'ஒழுக்கத்தின் வடிவமாக இருந்த சந்திரன்' பின்னால் காதலால் சீரழிந்து திசைமாறித் தொழுநோயாளனாக மாறிடும் அவலத்திற்கு ஆளாகிறான். (அகல் விளக்கு).

## நிகழ்ச்சி உத்தி

நாவலாசிரியர்கள் கதைத் தொடர்பான உணர்வையோ, கதை முடிவையோ, பாத்திரங்களின் போக்கையோ, கதையில் நிகழப்போகின்ற மாற்றத்தையோ உணர்த்தக் கதைப் பின்னலையொட்டிச் சில நிகழ்ச்சி களைக் காட்டிச் செல்வர். இத்தகைய நிகழ்ச்சி உத்திகள் கதைப் பின்னலுக்கும் பாத்திரப் படைப்புக்கும் விலகி நின்று எடுத்துரைக்கப்படுமானால், கலைப்பாங்கின் கட்டுக் கோப்பையே குலைப்பதாகிவிடும். டாக்டர் மு. வ. பாத்திரத்தின் போக்கையும் பண்பையும் மற்றப் பாத்திரம்

உரைப்பதாக அமைத்துக் காட்டாமல், நிகழ்ச்சிகள் வாயிலாகக் குறிப்புப் பொருள் தோன்றக் காட்டியுள்ளார்.

அகல் விளக்கில் வரும் சந்திரன் உணர்ச்சியின் வார்ப்பாகவே விளங்குபவன். அவன் எந்தப் பிரச்சனையையும் அமைதியான அணுகுமுறையாலே தீர்த்துக்கொள்ள முடியாத போக்கினனாக அமைந்த நிலையை உணர்த்த விரும்பிய மு. வ. காட்சி ஒன்றின் மூலம் குறித்துச் செல்கிறார்.

'வீட்டுத் திண்ணைமேல் ஏறி நின்றுகொண்டு காற்றாடியைச் சிறிதுவிட்டுப் பார்த்தேன். காற்றாடி உயர எழுந்து பறந்தது... அது ஒரு வேப்பமரத்தின் கிளையில் சிக்கிக் கொண்டது. என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தேன். அந்த வேப்பமரம் 23ஆம் எண்ணிலுள்ள வீட்டின் முன்புறத்தில் உள்ளது... திகைத்துக் கொண்டிருந்தபோது, முன்கண்ட அந்தப் பையன் வெளியே வந்து, ''காற்றாடியா? கிளையில் அகப்பட்டுக் கொண்டதா?'' என்று சொல்லி 'வெடுக்'கென்று இழுத்தான். நூல் அறுந்ததே தவிரக் காற்றாடி வரவில்லை. எனக்குக் கோபம் வந்தது. ''யாரடா நீ? உன்னைக் கூப்பிட்டேனா? எனக்கு இழுக்கத் தெரியாதா?" என்று உரக்கச் சொல்லி ''மடையன், கழுதை'' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். அதற்குள் அவனுடன் வந்த அம்மையார் வெளியே வந்து ''என்ன அப்பா இது?'' என்றார்கள். ''ஒன்றும் இல்லை அத்தை! காற்றாடி சிக்கிக் கொண்டது; இழுத்தேன். நூல் அறுந்து விட்டது''[28] என்றான்.

இத்தகைய நிகழ்ச்சி உத்திகளால் மட்டுமின்றி, வருணனைகள் மூலமும் கலைநுணுக்கங்களைக் கொண்டு தம் படைப்புகளுக்குக் கலைத்திறனை உருவாக்கியுள்ளார்.

வருணனை

நாவலாசிரியரின் கலைத்தன்மையையும் காவியத் தன்மையையும் வெளிப்படுத்தும் அழகுணர்ச்சியும் கூரிய நோக்கும் வாய்ந்த ஒரு கூறாகும் வருணனை. இயற்கை வழிப்பட்ட நெஞ்சினரான டாக்டர் மு. வ. தம் நாவல்களில் உணர்ச்சிகளை வெளிப்படுத்த இயற்கை வருணனைகளை உத்திகளாகப் பயன்படுத்தியுள்ளார்.

இயற்கை வருணனை

டாக்டர் மு. வ. வின் வருணனை இயற்கைக் காட்சியைக் காட்டும் எழில் வருணனையாக மட்டுமன்றி, நாவலில் இடம் பெற்றுள்ள பாத்திரத்தின் எண்ண வருணனையாகவும் அமைந்துள்ளது.

''அந்தப் பனைமரத்தில் அணில்கள் இரண்டு ஆடி விளையாடிக் கொண்டிருந்தன.''

''மைனா இரண்டு அந்தப் பனைமரத்தில் வந்து உட்கார்ந்து ஏழிசையும் பாடின.''

''அந்தக் குருவிகள் இரண்டு இரண்டாய் — இணை இணையாய் நிலத்தில் உள்ள புழு பூச்சிகளைக் கொத்திக் கொண்டிருந்தன.''

''மறுபடியும் வண்ணாத்திக் குருவிகள் வந்து குதித்துக் குதித்து நிலத்தைக் கொத்திக் கொத்தி ஆடின.''[24] (பாவை)

பாத்திர வருணனை

''வழுக்கைத் தலையும் குழிவிழுந்த கண்களும் அவர் தொழிலிலிருந்து ஓய்வு பெற இன்னும் இரண்டே ஆண்டுகள் இருந்தமையால், 'எப்படியாவது போகட்டும்! என்ன செய்வது?' என்ற தத்துவப் படியை அடைந்தார்.''[25]

இது 'கயமை' எனும் நாவலில் இடம்பெற்ற 'வெங்கோபர்' என்ற பாத்திரம் குறித்த வருணனை. இவ்

வருணனை ஒரு மனிதனின் — வாழ்க்கையின் — பணியின் முடிவுரையாகவே உள்ளது.

## நிலை வருணனை

"இந்த வாசற்படியில் வீணுக்குச் செலவாகியுள்ள குங்குமம் முதல் அங்கே உலர்ந்து கொண்டிருக்கும் காஞ்சிபுரம் பட்டுப்புடவை வரையில் எல்லாம் அவளுக்குச் சுற்றுப்புறத்தார் தரும் மதிப்புக்காக இருப்பவை"[26] (செந்தாமரை).

பாத்திரத்தின் மனப்போக்கை வருணிப்பதாக யிருந்த போதிலும், சமுதாயப் போக்கிலே — நடைமுறை வழக்கங் களிலே காண வேண்டிய மாற்றம் குறித்து மறுமலர்ச்சி இழையோட்டச் சிந்தனையையும் வெளியிடுவதாக அமைந் துள்ளது.

சிந்தனைகளின் திடத்தன்மையைப் பெற்றவைகளாக டாக்டர் மு. வ. வின் நாவல்கள் விளங்கியபோதிலும் அச் சிந்தனைகள் அனைத்தும் வெறும் கருத்துப் பிரச்சாரம் என்றோ நீதிநாவல் என்றோ வகுத்துக் காண்கின்ற அளவுக் குக் கலைத்தரம் மெலிந்த தன்மையோடு வெளியிடப்பட வில்லை என்பது குறிக்கத்தக்கது. படைப்பு எல்லையில் நின்றே பல்வேறு உத்திமுறைகளைக் கையாண்டு படைப்பை யும், படைப்பின் கருத்தையும் வெளியிட்டு வெற்றி கண்டுள்ளார் டாக்டர் மு. வ.

## நடை

டாக்டர் மு. வ. வின் கலைப்படைப்புகளுக்கும், கருத்துப் படைப்புகளுக்கும் மக்கள் மன்றத்திலிருந்து அறிஞர்கள் மன்றம் வரை மகத்தான வரவேற்பினைப் பெறச் செய்தது, அவர்தம் நடை ஆகும். கலைத்திறனும், கருத்துப் பொழிவும், நடைத் தன்மையுமே அவர்தம் படைப்புகளுக்கு அணிசேர்த்த கூறுகளாகும்.

தெளிந்த சிந்தனையே தெளிந்த கருத்தோட்டத்திற்கு மூலமாகிறது. தெளிந்த கருத்தோட்டத்தின் கலைத் தன்மையே தெளிந்த நடையாய்ச் சிறக்கிறது. டாக்டர் மு. வ. அவர்கள் வாழ்க்கையைப் பற்றிய தெளிந்த கண்ணோட்டமுடையவர் என்பதை அவர்தம் படைப்பிலக்கியங்கள் அறிவுறுத்தக் காணலாம். கருத்துகளின் நேர்மையை அவர்தம் நடை புலப்படுத்தக் காணலாம்.

நாவல் என்பது இன்றைய வாழ்க்கையின் நடப்பியல் சித்திரமாகும். இத்தகைய கலையில் சமுதாயத்தை ஆழ்ந்து நோக்கவல்லவரே தலைசிறந்த நாவலாசிரியராக விளங்க முடியும். சமுதாய நோக்கு என்பது சமுதாயத்தின் நிலையைக் கூர்ந்து நோக்குவது மட்டுமன்று; சமுதாயத்திலுள்ள மக்களின் உயிர்ப்பான நடையைக் கூர்ந்து நோக்குவதாகும். அப்போதுதான் நாவல் படைப்பு என்பது உயிர் இணைந்த உடலுக்கு உணர்வைத் தருவது போன்றதாகும். நாவல்களில் இருவகை நடையைக் காணலாம். ஒன்று ஆசிரியர் நடை; மற்றொன்று பாத்திரங்களின் நடை. ஆசிரியர் நடை என்பது இயல்பாக அமைந்த தனித் தன்மையைப் புலப்படுத்துவதாகும். பாத்திரங்களின் நடை என்பது நாவலாசிரியர் கலைத்திறனையும் சமுதாய ஆழ் மன ஈடுபாட்டையும் புலப்படுத்துவதாகும். தமிழ் நாவலாசிரியர்களுள் தனிப்பாங்கோடு திகழ்பவர் டாக்டர் மு. வ. எளிய தொடர்கள், தெளிந்த சிந்தனையின் கருத் தோட்டம், குறிப்பால்—உவமை, உருவகம் முதலியவற்றால் உணர்த்துதல் ஆகியவை டாக்டர் மு. வ. வின் தனிச் சிறப்புகள் ஆகும்.

## எளிய நடை

அரிய பொருளையும் எளிதில் விளக்க வல்லவர் டாக்டர் மு. வ. என்பதை எளிய சொல்லாட்சிகளும், சிறிய சிறிய தொடர்களும் நன்கு விளக்குகின்றன.

'நாம் வாழ்வதற்கு மூன்று நன்றாக இருக்க வேண்டும். ஒன்று நம் உள்ளம். மற்றொன்று உடம்பு; மூன்றாவது சுற்றுப்புறம்... நாம் விரும்பினால் உள்ளத்தை முழுவதும் நன்றாக வைத்திருக்க முடியும்; ஆனால் எல்லாரும் சேர்ந்து விரும்பினால்தான் சுற்றுப்புறத்தை நன்றாக அமைக்க முடியும்'.[27] (வாடாமலர் 175-176)

**பாத்திர நடை (உருவக நடை)**

நாவலில் இடம்பெறுகின்ற பாத்திரங்களின் உரையாடல் வழியே வெளிப்படுகின்ற நடை என்பது அப்பாத்திரங்கள் வளர்ந்த, வாழ்கின்ற சூழலையும், பண்பு நலத்தையும் பொறுத்து அமைவதாகும். டாக்டர் மு. வ. சமுதாயத்தின் பல்வகை மாந்தரையும் காட்ட முயன்றுள்ளார்.

"நாளைக்கு வரும் பலாக்கனி இருக்கட்டும். இன்றைக்கு வேண்டிய களாக்கனி எங்கே?"[28] என்று சுமை உந்துவண்டி ஓட்டுநர் (லாரிக்காரர்) பேசுவதாக அமைந்த நடையில் உருவகம் நின்று பயில்வதோடு, சமுதாயத்தின் வழக்காற்றோடு — பாத்திரப் படைப்புக்கு ஏற்புடையதாய் அமைந்த பாங்கினைக் காண முடிகிறது.

**உவமை**

'உவமை' என்பது இலக்கியக் கூறாகக் கருதத்தக்கதாக அமைந்திருந்த போதிலும், டாக்டர் மு. வ. வின் நடையில் விரிந்து காணத்தக்கதாகும்.

டாக்டர் மு.வ.வின் நாவல்களில் பயின்று வருகின்ற உவமைகள் அலங்காரத் தன்மைக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ள இலக்கியக் கூறாக விளங்கவில்லை; புன்மை நிறைந்த சமுதாயத்தின் புழுதிநிலையைச் சமுதாயத்திற்கு வெளிப்படுத்துவதாகவும், பாத்திரங்களின் உணர்ச்சியைப் புலப்படுத்துவதாகவும், படைப்பாளரின் நோக்கத்தை—

வாழ்க்கை நெறி விளக்குவதாகவும் டாக்டர் மு.வ.வின் உவமைகள் விளங்குகின்றன. பண்பாட்டின் வெளிப்பாட்டையும், உளவியல் தன்மையையும் பழமொழியின் தாக்கத்தையும், இயற்கை மன ஒருமைப்பாட்டையும், மொழி இன இலக்கிய உணர்வின் ஆழத்தையும், காந்தியத்தின் தாக்கத்தையும் படைப்பாளரின் மன உணர்வையும், வாழ்க்கையின் பின்னணியையும், வாழ்க்கையின் ஒவ்வொரு அசைவையும் கூர்ந்து நோக்கிய பார்வையையும், கலையின் தேவையையும் அவருடைய உவமைகளிலே காண முடிகிறது.

## இயற்கையின் நியதி உவமை

டாக்டர் மு. வ. புரட்சிகரமான கருத்துகளால், சமுதாய மறுமலர்ச்சியில் நம்பிக்கை கொண்டவராக விளங்கியபோதிலும், இயற்கையின் நியதிகளுக்கு உடன்பட்டவர் என அவருடைய உவமைகள் உணர்த்துகின்றன.

'எல்லா மரமும் வாசற்காலாக, கதவாக, கூரைக் கழியாக ஆகமுடியாது. சில மரங்கள்தான் அப்படி அமைந்து வீட்டை உருவாக்கிக் காக்க முடியும். மற்ற மரங்கள் வெயிலில் உலர்ந்து தீயில் வெந்து கரியாகத்தான் வேண்டும். பிறக்கும் பெண்கள் எல்லாம் குடும்பத் தெய்வங்களாக வாழ்ந்து விளங்க முடியாது. சிலர்தான் நெறியுள்ள மனைவியாக முடியும். சிலர்தான் அன்புருவமான தாயாக முடியும். மற்றவர்கள் கண்டவர்களின் கையில் சிக்கிக் காமத்தீயில் வெந்து கருக வேண்டியதுதான்'.[29] (கயமை, ப. 192)

## சமுதாய எதிரொலி உவமை

அங்கதத் தன்மையில் இயற்கையின் நிலையைக் குறிப்பிடும் போது, சமநிலையில்லாச் சமுதாயச் சீர்கேட்டைப் புலப்படுத்துகிறார் டாக்டர் மு. வ. சமுதாயமே

கலையின் நோக்கமெனக் கொண்டிருந்த டாக்டர் மு. வ. படைப்புகளின் கருவால், கருத்தால் மட்டுமின்றி, நடையாலும் சமுதாயத்தின் அவலத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

"பிறர்க்கு ஒரு பயனும் இல்லாமல் அழகாக, உடம்பை வளர்த்துத் தூங்கும் வட்டி வாங்கிகளைப் போல் மேற்கு நாட்டுக் குரோட்டன் என்று சொல்லப்படும் சில செடிகள் பலநிற இலைகளோடு வளர்ந்து தோட்டக்காரனுடைய உழைப்பைப் பெற்றுக் கொண்டிருந்தன". (பெற்ற மனம், ப. 6)

### எளிய உவமை

பாத்திரங்களின் உணர்வைப் புலப்படுத்த, ஆழமான மன அசைவுகளை வெளிப்படுத்த, நிலைகளை உயர்ப்பித்துக் காட்ட எளிய உவமைகளைப் பயன்படுத்தியுள்ள பாங்கு போற்றத்தகுந்த கலைக் கூறாகும்.

"நேராகக் குழாயில் வரும் தண்ணீரைக் கையால் அடைக்க முயலும் நாற்புறமும் தண்ணீர் சிதறிக் குழந்தையின் சொக்காயை நனைப்பதுபோல், அவனுடைய உள்ளத்தின் ஆழத்தில் இருந்த கவலை நேரே வராமல் சுற்றிச் சுற்றி வெளிப்படுவதைத் தெரிந்து கொண்டேன்". (மலர்விழி, ப. 47)

### பாமரர் நடை

'அந்தப் பிள்ளை படிக்கப் போயிருக்குதாம் பட்டணத்துக்கு' என்று கிழவி கூறியதும், 'போனதே நல்லதுதான். இந்த ஊரில் இருந்தால், கொழுத்துப் போன பெண் கழுதைகள் அதைக் கெடுத்துவிடும். அதுவும் பெரிய வீட்டுப்பிள்ளை என்றால் சொல்லத் தேவையில்லை' என்று கிழவன் மறுமொழி கூறினான். உடனே கிழவி 'இன்னுமா அந்தப் பிள்ளையைக் கெடுக்காமல் இருக்கிறார்கள். உனக்குத் தெரிந்தது இவ்வளவுதான். எல்லோரும்

உன்னைப்போல பயந்து நடப்பார்கள் என்று கனவு காண்கிறாயோ?' என்றாள்.''[3]

இது அகல்விளக்கின் கதைத்தலைவன் 'சந்திரன்' குறித்தும், சமுதாயச் சூழல் குறித்தும் கிழவன், கிழவி இருவர் உரையாடுவதாக அமைந்த உரையாடல். இந்த உரையாடலில் பாமரமக்களின் மனப்போக்கிற்கு ஏற்ற வண்ணம் சொற்களைக் கையாண்டு சமுதாயத்தின் நிலையைப் பிரதிபலித்துள்ளார் டாக்டர் மு. வ.

பாமரர் நடையில் உள்ள உயிரோட்டத்தைக் காட்டியுள்ளதைப்போல், படித்தவர் நடையில் அமைந்த பிறமொழி விரவல் தன்மையைப் பாத்திரங்களின் நடையில் காட்டியுள்ளார். (அகல்விளக்கு—வேலய்யன்). குறிக்கோள் பாத்திரங்களாகப் படைத்துள்ள அறவாழி, அருளப்பர் போன்ற நடையில் மேற்கோள் நடையையும் காண முடிகிறது. எளிமை, தெளிவு, திட்டம், நுட்பம் சார்ந்த நடையாலே டாக்டர் மு.வ.வின் கலைப்படைப்பு செம்மை பெற்றுள்ளது. உவமை, உருவகம் போன்ற இலக்கியக் கூறுகள் சார்ந்த நடையை ஆசிரியர் நடையிலும் பாத்திரங்களின் நடையிலும் அமைத்து, தனித்தன்மையும், படைப்புக்கு உயிர்ப்புத்தன்மையும் உருவாக்கியுள்ளார். சொல்லாட்சிகளைப் பயன்படுத்துவதிலும், குறியீடுகளைப் (Punctuation) பயன்படுத்துவதிலும், சில நுட்பங்களைப் பயன்படுத்தியுள்ளமை ஆழ்ந்து நோக்கத்தக்கதாகும். இலக்கணப் பார்வையிலிருந்து குறிக்கும்போது, ஒரு, ஓர்—அல்ல அன்று, இவைகளைப் பயன்படுத்தும்போது, இலக்கண நெறிகளுக்குச் சிறப்பிடம் அளிக்காமல், மக்களின் வழக்குத் தன்மைக்கு ஏற்றவாறு படைப்பிலக்கியங்களை உருவாக்கியுள்ளார். சமுதாயம், கருத்து என்ற கோணத்தில் நடையை அமைத்துப் படைப்பிலக்கியத்தில் வெற்றி கண்டுள்ளார். தமிழ் உரைநடை வரலாற்றிலே மறைமலையடிகள், திரு.வி.க., அறிஞர் அண்ணா ஆகியோருக்குத்

தனித்தனியான முத்திரையிருப்பதைப்போல் டாக்டர் மு.வ. விற்கும் சிறப்பிடம் உண்டு. படிக்கத்தூண்டும் எளிமை, தெளிவு, திட்பம் இம்மூன்றுமே டாக்டர் மு. வ. வின் நடைச்சிறப்பாகும். படைப்பாளர் என்பவர் காலத்தின் எதிரொலியாக விளங்குபவர். டாக்டர் மு. வ. இருபதுநூற்றாண்டுத் தமிழ் இலக்கியங்களின் தாக்குரவைப் பெற்றவர். ஆனால் மரபுவழிப்பட்ட சிந்தனைகளுக்கே தாம் ஒரு முகவர் என்று கருதாமல், நவீன இலக்கிய வடிவத்தில் சமுதாயத்தைச் சிந்தித்தது குறிப்பிடத் தகுந்ததாகும். 'நாட்டில் நிலவும் அரசியல் கொந்தளிப்பிலோ. சீர்திருத்த வேகத்திலோ ஈடுபடாமல் அமைதியாக ஒரு மூலையில் இருந்து மக்களின் வாழ்க்கையைக் கண்டு உணர்ந்து அந்த அடிப்படையைக் கொண்டு கதைகள் எழுதுவோர் உண்டு. உண்மையை நோக்கினால் அரசியல் கொந்தளிப்பு, சீர்திருத்த வேகம் முதலியவை சமுதாயம் என்னும் கடலின் மேற்பரப்பில் காணும் அலைகளும் ஆரவாரங்களும் ஆகும். குமுறும் கடலின் அடிப்பகுதி பெரும்பாலும் அமைதியாக இருப்பது போலவே சமுதாயத்திலும் குடும்ப இன்ப துன்பம் முதலியவை என்றும் போல் உள்ளன. அவற்றைக் கண்டு உணர்ந்து சொல்லோவியமாக்கித் தரும் கலை உள்ளம் சிலர்க்கு இயல்பாக அமைகிறது' (தமிழ் இலக்கிய வரலாறு, ப. 291) என்னும் அவர்தம் கூற்றுக்கிணங்க டாக்டர் மு.வ. சமுதாயத்தின் மேற்பரப்பிலிருந்து அடிப்பகுதியின் சிக்கல்கள் வரை — தம் படைப்புகளில் கருப்பொருளாகவும் கருத்துப் பொருளாகவும் ஆக்கிக் கலைப்பாங்கோடு வழங்கியுள்ளார். அவர்தம் புதுமைச் சிந்தனைகள் புதியதொரு சமுதாயப் பார்வை கொண்டதாய் அமைந்துள்ளன. காலத்திற்கேற்றாற்போல் மனிதனின் வாழ்க்கை முறைகள் மாற்றம் காணவேண்டும்; அந்நிலைக்குத் தடையாக மரபு, பண்பாடு என்பவை விளங்கினால் அவற்றை உடைத்தெறிவதில் தவறில்லை என்று கருதினார். அந்நோக்கில் தம் கருத்து

களுக்குக் கலைவடிவம் வழங்கியுள்ளார். வள்ளுவரையும், திருமூலரையும், தாயுமானவரையும், விவேகானந்தரையும், இராமதீர்த்தரையும், பாத்திரங்கள் வழியே நினைவுகூர்ந்து தமிழ் நாவல் வரலாற்றில் டாக்டர் மு. வ. ஓர் அற நாவலாளராகத் (Novelist of Ethics) தோன்றிய போதிலும், சமுதாயத்தின் ஒவ்வொரு பகுதியினரின் வாழ்க்கையின் ஒவ்வோர் அசைவையும் அணுகிப் பார்ப்பதில் ஒரு சமுதாயக் கலைஞராகவே விளங்கியுள்ளார்.

டாக்டர் மு. வ. படைப்பிலக்கியப் பரப்பில் அகல உழுதவர் அல்லர்; ஆழ உழுதவர். பரப்பைச் சுருக்கிக் கொண்டபோதிலும் பார்வையை ஆழமாக்கிக் கொண்டவர். அவர்தம் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனை அறக் கண்ணோட்டத்தோடு ஆன்மிகப் பார்வை இணைந்திருந்ததோடு, உலகப் பார்வையோடு ஒட்டிச்செல்கின்ற புதுமையும் கொண்டதாகும். அவர்தம் கலைகள் நிகழ்காலத்தின் விளைச்சல்கள்; கருத்துகள் எதிர்காலத்தின் விதைநெற்கள் எனல் பொருந்தும்.

சமுதாய நோக்கும், கலைத்தரமும் கெழுமிய மு. வ. வின் நாவல்களில் வழங்கப்பெற்றுள்ள கருத்துகள் அனைத்தும் பாத்திரப் படைப்புகளுக்கேற்பவும், உரையாடல் உத்திமுறை வழியும் நாவல் கட்டுக்கோப்பின் எல்லையிலிருந்தே எடுத்துரைக்கப்பட்டுள்ளன. நோக்கு நிலையில் கதையைச் செம்மையுற அமைத்த டாக்டர் மு. வ. பண்பாட்டு அடிப்படையில் மரபுகளையொட்டி நாட்குறிப்பு, கடிதம் உத்தியைக் கொண்டு பாத்திரங்களின் மன உணர்வுகளை வெளிப்படுத்தியிருக்கும் திறன் வியக்கத் தகுந்ததாகும். நாவலில் அமைந்துள்ள ஆசிரியர் நடையில் தெளிவையும் எளிமையையும் அமைத்து, பாத்திரங்களில் நடையில் உணர்வுகளின் உயிர்த்துடிப்பை வெளிப்படுத்தித் தம் நாவல்களுக்குக் கலைநலம் சேர்த்துள்ளார் டாக்டர் மு. வ.

**சிறுகதைப் பணி**

நாவல் இலக்கிய உலகில் தமக்கென்று அழியாத ஓர் இடத்தை வகிக்கும் மு. வ. சிறுகதைத்துறையிலும் தம் கலையுணர்வினைத் திறம்பட வெளிப்படுத்தியுள்ளார். நாவல் படைக்கும் முன்பாகவே அவர் சிறுகதைகள் எழுதுவதில் ஆர்வம் காட்டியுள்ளார். 1939 ஆம் ஆண்டில் 'சிறுவர்களுக்கான கதைகள்' என்னும் வரிசையில் ஆங்கிலக் கதைகளின் தழுவலாகச் சில சிறுகதைகளை எழுதியுள்ளார். அவர் எழுதிய ஷேக்ஸ்பியர் கதைகள் மற்றும் பிற கதைகள் 3 தொகுதிகளாக வெளியாகியுள்ளன. சிறுவர்களுக்கென்று அல்லாமல் பொதுவாக எல்லோருக்கும் உரிய சிறுகதைகளையும் மு. வ. படைத்துள்ளார். நாவல், சிறுகதைத் தொகுதி இரண்டும் ஏறத்தாழ சமகாலத்திலேயே வெளி வந்துள்ளன.

**மு. வ. வின் சிறுகதைத் தொகுதிகள்**

மு. வ. வின் சிறுகதைகள் இரண்டு தொகுதிகளாக அமைந்துள்ளன. 'விடுதலையா?' 'குறட்டை ஒலி' என்பன அவ்விரு தொகுதிகளாகும். அத்தொகுதிகள் முறையே 1944, 1953 ஆம் ஆண்டுகளில் வெளிவந்தன. 'விடுதலையா?' என்னும் முதல் சிறுகதைத் தொகுதியில் 'விடுதலையா?', 'தேங்காய்த் துண்டுகள்', 'வாய் திறக்க மாட்டேன்', 'எதையோ பேசினர்', 'கட்டாயம் வேண்டும்', 'எவர் குற்றம்' ஆகிய ஆறு சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. இச்சிறுகதைத் தொகுதி தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பாராட்டினைப் பெற்றது.

மு. வ. வின் மற்றொரு சிறுகதைத் தொகுதி— 'குறட்டை ஒலி'. இதன்கண் பதினொரு சிறுகதைகள் உள்ளன. அந்த மனம் வருமா? சுடரின் நகைப்பு, இறந்த சிற்றப்பா, அமாவாசையார், எல்லோரும் சமம், யாரோ தெரியாது, உலகம் பொய், குறட்டை ஒலி, வாழும் வழி, இயற்கை பொல்லாதது, அக்கரைப் பச்சை என்பன

அக்கதைகளின் பெயர்களாகும். இத்தொகுதி 'Sound of Snore' என்னும் பெயரில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

இவ்விரு தொகுதிகளிலும் உள்ள கதைகளுள் பல அவ்வப்போது எழுதப்பட்டவை; சில அவ்வப்போது இதழ் களிலும் மலர்களிலும் வெளியிடப்பட்டவை; சில புதியன வாகச் சேர்க்கப்பட்டவை என்பன நூல் முன்னுரை களினால் தெரியவருகின்றன. ஆனால் எவை எவை எந்தெந்த இதழ்களிலும் மலர்களிலும் வெளியாயின? எவை புதியனவாகச் சேர்க்கப்பட்டன? என்பதை மு. வ. குறிப்பிடவில்லை. இவ்வாறு குறிக்கப்படாதமையால் வரலாற்றுணர்ச்சியோடு இவற்றை அணுக இயலவில்லை.

**சிறுகதை குறித்த மு. வ. வின் சிந்தனை**

சிறுகதை இப்படித்தான் இருக்கவேண்டும் என்று வரையறுக்கப்பட்ட இலக்கணச் சட்டகம் ஏதும் இல்லை. ஆயின் சிறுகதைகளில் அமைகின்ற சில கூறுகளின் அடிப் படையில் அவற்றின் தரமும் சிறப்பும் அளந்து மதிப்பிடப் படுகின்றன. உருவம், உள்ளடக்கம், உத்தி என்ற மூன்று முதன்மைக் கூறுகளின் ஒருங்கிணைவாலும், இழைவாலும் சிறுகதை சிறக்கின்றது என அறிஞர்கள் உரைப்பர். மு. வ. வின் பார்வையில் சிறுகதை என்பது படிப்போர்க்கு இன்பமளிப்பதாகவும், வாழ்க்கையை நன்னெறியில் செலுத்துவதாகும் தோன்றுகின்றது. இதனை,

> கலையின் பயன் இரண்டு. ஒன்று, கிடைக்கும் சிறுசிறு ஓய்வுக்காலத்தை இன்பமாகக் கழிக்கச் செய்வது. மற்றொன்று நம்மை அறியாமல் வாழ்க்கையைத் திருத்தி உயர்த்துவது. இந்த இரண்டும் ஒருசேர அமையும் சிறப்பு சிறுகதைகளில் மிகுதியாகக் காண லாம். அதனால்தான் சிறுகதை இலக்கியம் உலக மெல்லாம் செழித்து வளர்ந்து வருகின்றது.

என 'விடுதலையா?' நூலிற்கு மு. வ. எழுதியுள்ள முன்னுரையின்வழி அறியலாம். மேலும் சிறுகதையை அவர் ஒரு சீரிய கலையாகவே கருதினார். அவரது கதைகளில் மேற்குறிப்பிட்ட கொள்கைகளின் ஆறாமை அமைந்துள்ளமை அறியத்தக்கது. பொதுவாக, எந்த ஒரு கலை வடிவமும் மக்களை மையமிட்டதாக — மக்களுக்காகவே எழுந்ததாக இருக்கவேண்டும் என்ற கொள்கையை உடையவர் மு. வ. கலை கலைக்காக, கலை மக்களுக்காக, கலை காசுக்காக என்று சுட்டப்பெறுகின்ற மூவகைக் கொள்கைகளில் இடைப்பட்ட கொள்கையை மையமிட்டதாகவே அவரது படைப்புகள் அனைத்தும் அமைந்தன. அவர் படைத்த சிறுகதைகளும் இதனைத் தாங்கியே உள்ளன.

## மு. வ. வின் சிறுகதைகள் — இயல்புகள்

### சிறுகதைத் தலைப்புகள்:

மு. வ. வின் சிறுகதைத் தொகுதிகளில் உள்ள கதைகளின் தலைப்புகளை நோக்கினாலே அவரது படைப்புத் திறனும் நுண்மாண் நுழைபுலமும் நன்கு வெளிப்படும்.

1. வினாவாகத் தலைப்புகள் — விடுதலையா? அந்த மனம் வருமா?
2. உருவகத் தலைப்பு — சுடரின் நகைப்பு.
3. பழமொழித் தலைப்பு — அக்கரை பச்சை.
4. பெயரெச்சத் தலைப்பு — இறந்த சிற்றப்பா.
5. தத்துவத் தலைப்பு — உலகம் பொய்.
6. வினைமுற்றாக அமையும் தலைப்பு — வாய் திறக்க மாட்டேன்.
6. சமுதாய உணர்வு அமைந்த தலைப்பு — எல்லோரும் சமம்.

சிறுகதைகளின் தலைப்பு படிப்போர்க்கு ஆவலையும், சிந்தனையையும் தூண்டும் வண்ணம் அமையவேண்டும்

என்ற திறனாய்வுக் கருத்துக்கேற்ப மு. வ. படைத்துள்ள கதைகளின் தலைப்புகள் அமைந்துள்ளமை காணலாம். தலைப்பிடுவதிலே மு. வ. விடம் ஒரு கலைநயம் — கலைக் கண்ணோட்டம் ஒளிர்வதை நாம் உணரமுடிகின்றது.

## செயல் ஒருமை (Unity of action)

கதைக்கரு, கதை நிகழ்ச்சி, கதை மாந்தர், கதையின் நோக்குநிலை ஆகியவற்றில் ஏற்படுகின்ற ஒருமுகப்பட்ட ஒழுங்குமுறையைச் செயல் ஒருமை என்பர். கதையின் முதல் சொற்றொடரிலிருந்து இறுதிச் சொற்றொடர் வரை செயல் ஒருமை சிறந்து விளங்க வேண்டும் என்று காலின்ஸ் என்னும் திறனாய்வாளர் மொழிவார். மு.வ.வின் சிறு கதைகளுள் ஒரு சிலவற்றைத் தவிரப் பெரும்பாலானவற்றுள் செயல் ஒருமை சிறக்க அமைந்துள்ளது. கதையின் தனித்த குறிக்கோளை வெளிப்படுத்தும் நோக்கில் கதையின் ஒவ்வொரு சிறுகூறும், நிகழ்ச்சியும், பாத்திரமும் பொருத்மாக மு. வ. கதைகளில் அமைந்துள்ளன. 'விடுதலையா?' வில் இச்செயல் ஒருமை சிறப்பாக இடம் பெறவில்லை. ஒரு பொதுவுடைமை வாதியின் விளக்கவுரைகள், மாணவப் பருவம் தொடங்கி ஒரு பாத்திரத்தை வளர்த்துச் செல்லும் முறை போன்றவை இங்குச் செயல் ஒருமைக்குத் தடையாக அமைந்துள்ளன. சுடரின் நகைப்பு, குறட்டை ஒலி, அந்த மனம் வருமா, இயற்கை பொல்லாதது ஆகிய கதைகளில் இச்செயல் ஒருமை சிறப்பாக அமைந்துள்ளது, கதையைப் படிப்படியாக உச்சத்தை நோக்கி வளர்த்துச் செல்லும் பாங்கு இக்கதைகளில் நன்கு வெளிப்படுகின்றது. இவ்வாறு, செயல் ஒருமை என்னும் கலைத்திறமும் மு. வ. வின் சிறு கதைகளில் ஒளிரக் காண்கிறோம்.

## பாத்திரப் படைப்பு (Characterisation)

எந்த ஒரு கலைப்படைப்பும் அதன்கண் அமைகின்ற பாத்திரப்படைப்பிற்கேற்பவே நிலைபேற்றுத் தன்மையை

அடைய முடியும். சிறுகதைகள் ஏதேனும் ஒரு பண்பு, வாழ்வின் ஒரு பகுதியில் நிகழ்ந்த ஒரு சிறு நிகழ்ச்சி ஆகியவற்றை விளக்கியபோதிலும் அவற்றில் அமைகின்ற பாத்திரங்கள் மட்டும் படிப்போரின் நினைவை விட்டு அகலாதிருப்பின் அக்கதைகளில் பாத்திரப்படைப்பு சிறப்புப்பெற்றுத் திகழ்கிறது எனலாம். மு. வ. வின் சிறுகதைகளுள் வாழும் வழி, அந்த மனம் வருமா என்பவற்றில் வரும் தலைமை மாந்தர்கள் மு. வ. வின் வேறு வடிவத்தினராகத் தோன்றுகின்றனர். இவ்வாறு படைப்பாளர் தாமே ஒரு பாத்திரமாக அமைந்து சிறுகதையைச் சீரிய கலையுருவாக்க முடியும். இவரது பிற சிறுகதைகளில் அமையும் மாந்தர்கள் நடைமுறை மக்களின் படப்பிடிப்பாக அமைகின்றனர். காட்டாக 70 வயதுடைய அமாவாசையார் பாத்திரத்தைச் சுட்டலாம். நடப்பியல் நெறியில் நகைச்சுவையோடு பாத்திரத்தின் இயல்புகள், செயல்கள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைக் காட்டி மனத்தில் நிலைக்கும் பாத்திரமாக அவரைப் படைத்துள்ளார் மு. வ.

சில மாந்தர்கள் ஒப்பு — உறழ்வு (Parallelism and Contrast) நெறியில் படைக்கப்பட்டுள்ளனர். குறட்டை ஒலி சிறுகதையில் இத்தகு மாந்தர்கள் இடம் பெறுகின்றனர். மு. வ. வின் சிறுகதைகளில் பெண் மாந்தர்கள் மிகுதியாக இடம் பெறவில்லை. இரண்டு பெண்களின் உளவியல் கூறுகளைப் படிம உத்தியின் உதவியோடு விளங்கும் நிலையினை 'எவர் குற்றம்' கதையில் காண முடிகினறது. 'இயற்கை பொல்லாதது' என்னும் கதையில் கணவன், மனைவி ஆகிய இருபாத்திரங்களின் உளவியல் கூறுகளை அழகுற வெளிப்படுத்துகின்றார் மு. வ. பாத்திரப் படைப்பு என்னும் கலைக்கூறினையும் மு. வ. திறம்படச் செய்துள்ளார்.

## நோக்குநிலை (Point of view)

கதையைக் கூறிச் செல்லும் முறையை நோக்குநிலை என்பர். கதையைப் பாத்திரம் கூறல், கதையை ஆசிரியர்

கூறல் என்னும் இருவகைப்பட்ட, பொதுவான நோக்கு நிலையையே மு. வ. வும் கையாண்டுள்ளார். இவற்றுள் பாத்திரம் கதை கூறிச் செல்லும் நிலை அவரது கதைகளில் மிகுதியாகவும், ஆசிரியர் கதை கூறும் நிலை சிறுபான்மை யாகவும் அமைகின்றது.

## கதைக்கரு

மு.வ. சிறுகதைகளில் கதைக்கரு, காந்தியநெறியையும், அன்புநெறிறையும் வலியுறுத்துவதாக அமைகின்றது. மூட நம்பிக்கையைச் சாடல், தனிமனிதனைத் திருத்தும் நோக்கு, செல்வர்களின் கொடு மனத்தைச் சாடல், ஏற்றத்தாழ் வற்ற சமுதாயம் உருப்பெற வேண்டும் என்னும் வேட்கை ஆகியனவும் அவரது கதைகளின் கருவாகியுள்ளன.

## வருணனை, இலக்கியமேற்கோள்

பொதுவாக, சிறுகதைகளில் வருணனை, இலக்கிய மேற்கோள் முதலியன மிகுதியாக இடம் பெறுதல் இல்லை. நிகழ்ச்சியின் விரைவையும் அது தருகின்ற உணர்வுச் சூழிப் பையும் வருணனை, இலக்கியப்பகுதி போன்ற கூறுகள் சிதைத்துவிடக் கூடும். எனவே, இவை சிறுகதைகளில் பெரிதும் போற்றப்படுவதில்லை. மு. வ. வின் சிறுகதை களில் இவ்வருணனை மற்றும் இலக்கியப்பகுதி அளவாகவே அமைந்துள்ளன. 'குறட்டை ஒலி' சிறுகதைத் தொகுதியில் மலை, ஊர், வயல் ஆகிய இயற்கை வருணனைகளும், கதை மாந்தர் உருவ வருணனையும் இடம் பெற்றுள்ளன. இலக்கிய மேற்கோளாக 'கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே' என்னும் ஒரு பகுதி மட்டுமே அதிலும் ஓரடி மட்டுமே குறட்டை ஒலி கதைத் தொகுதியில் இடம் பெறுகின்றது.

## உரையாடல்

சிறுகதையின் வெற்றிக்கு அதில் அமையும் உரை யாடலும் ஓரளவு உதவுகின்றது. உரையாடல் கருத்துப்

புலப்பாட்டை எளிமைப்படுத்தவல்லது. மு. வ. வின் சிறு கதைகளில் இவ்வுரையாடற்பகுதி அளவாகவும், அழகாகவும் அமைந்துள்ளது. சான்றாக,

" ஒரு நண்பரை வழியில் பார்த்துவிட்டு வந்தேன் "

" நண்பர் என்ன பால்? ஆணா? பெண்ணா? "

" பலர்பால் "

" இலக்கணம் கேட்கவில்லை. பொருள் கேட்டேன் "

—குறட்டை ஒலி, பக். 129

என்னும் பகுதியைக் குறிப்பிடலாம். இதில் நகைச்சுவைத் தன்மை அமைந்த பொருளை நேரடியாக விளக்குகின்ற, வினா - விடை முறையோடு கூடிய உரையாடல் அமைப்பு இடம் பெற்றிருக்கின்றது. இதுபோன்று பல நிலைகளில் அமையும் உரையாடற்பகுதிகளை மு. வ. வின் சிறுகதைகளில் காணலாம்.

### முடிவு

மு. வ. வின் நாவல்களைப் போலவே அவரது சிறுகதைகளும் ஒழுங்கமைவு என்னும் கலைக்கூறைப் பெற்றுத் திகழ்கின்றன. உருவம், உள்ளடக்கம், உத்தி என்னும் முதன்மைக் கூறுகளைச் செறிவுறக் கையாண்டு, தம் சிறுகதைகளைச் சீரிய கலைப்படைப்பாக்கியுள்ளதன் மூலம் அவர் சிறுகதைக் கலைஞராகவும் திகழ்கிறார்.

### டாக்டர் மு. வ. வின் நாடகங்கள்

முத்தமிழ்க் கூறுகளில் ஒன்றாகிய நாடகம் கண், செவி ஆகிய இரண்டு புலன்களாலும் நுகரத்தக்க கலையாகும்; இக் கலைப்பிரிவிலும் டாக்டர் மு. வ. தன்னுடைய முத்திரையைப் பதித்துள்ளார் என்று கூறுவது பொருத்தமாகும்; இவர் பதினொன்று நாடகங்களை இயற்றியுள்ளார். அவை கீழ்வரும் வகைப்பாட்டான் விளக்கமுறும்.

| எண் | நாடகத்தின் பெயர் | நூலின் பெயர் | வகை | காட்சி எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| 1 | பச்சையப்பர் | பச்சையப்பர் | சமூகம்; வரலாறு | 21 |
| 2 | இளங்கோ | மூன்று நாடகங்கள் | இலக்கியம்; வரலாறு | 7 |
| 3 | திலகவதியார் | | | 7 |
| 4 | வீண் கனவு | | | 3 |
| 5 | காதல் எங்கே? | காதல் எங்கே? (ஓரங்க நாடகங்கள்) | சமூகம் | 5 |
| 6 | கடமை எங்கே? | | | 3 |
| 7 | நன்மை எங்கே? | | | 9 |
| 8 | மனச்சான்று | மனச்சான்று (ஓரங்க நாடகங்கள்) | சமூகம் | 7 |
| 9 | கிம்பளம் | | | 8 |
| 10 | ஏமாற்றம் | | | 7 |
| 11 | பொதுநலம் | | | 6 |

இந்த 11 நாடகங்களைத் தவிர, 'அல்லி' என்னும் புதினம் டி. கே. கணபதி என்பவரால் 'டாக்டர் அல்லி' என்னும் பெயரில் நாடகமாக்கப்பட்டுள்ளது; மேலும் மூன்று நாடகங்கள் என்னும் நூலில் இடம் பெற்றுள்ள 'இளங்கோ' தனி நூலாகவும் வெளியிடப்பட்டது.

டாக்டர் மு. வ. எழுதிய முதல் நாடகம் 'பச்சையப்பர்' என்பதாகும்; இஃது ஒரு வரலாற்று நாடமாகும். 1951 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் எழுதப்பெற்ற இந்நாடகத்தில் 21 காட்சிகள் அமைந்துள்ளன. 104 பக்கங்களைக் கொண்ட இந்நாடக நூலின் முன்னுரையில்,

> தமிழ்நாடு வண்மையில் எல்லையையும் கண்ட நாடு. ஈதலையே வாழ்தலின் ஊதியமாகக் கொண்ட வள்ளல்கள் பலர் தோன்றிய நாடு இது. 18 ஆம் நூற்றாண்டில் அறம் பல புரிந்த வண்மையாளராய்த் திகழ்ந்த தமிழர் பச்சையப்பர். அவருடைய அறநெஞ்

சமே இன்று ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கல்விச் செல்வத்தை வழங்கும் அறிவு நிலையங்களாக விளங்கு கிறது. இத்தகைய அறவோரின் வரலாற்றைப் பலரும் அறிதல் நலம். உயர்வு நவிற்சியும் திரிபும் இல்லாமல் உள்ளவாறே விளக்கும் நாடகமாக இச்சிறுநூல் அமைந்துள்ளது.

என்று குறிக்கின்றார் டாக்டர் மு. வ.

1952 ஆம் ஆண்டு சூலைத் திங்களில் எழுதி வெளியிடப் பெற்ற நாடகம் 'இளங்கோ' என்பதாகும். இந்நாடகம் இளங்கோ அடிகளின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு புனையப்பெற்றது. இதில் இளங்கோவடிகள் ஒரு நாடக மாந்தராவார்; துறவியாக இருப்பினும் இல்லறத்தின் மேன்மையினைப் புகழ்கின்றார்; சமய ஒருமையினைப் போற்றுகின்றார். சேர இளவலாக இருப் பினும் மூவேந்தரையும் மதித்துப் போற்றுகின்றார். தமிழகத்தின் ஒற்றுமையை வலியுறுத்துகின்றார். இளங்கோ வின் ஆளுமை, உயர்ந்த குறிக்கோள்கள், நாடகத்தில் வடிக்கப்பட்டுள்ளன

'இளங்கோ' என்னும் இந்நாடகத்தில் சிலப்பதிகாரம் தொடர்பான பல்வேறு சிக்கல்கள் வினாக்களாகப் பல்வேறு நாடகமாந்தர்களால் எழுப்பப்படுகின்றன. அவற்றிற்கெல் லாம் இளங்கோவடிகள் விடைதருகிறார். இந்நாடகத்தைச் சிலம்பின் திறனாய்வு என்று கூறலாம். மு. வ. வின் கற்பனைத்திறன் சிறப்புற வெளிப்படும் நாடகங்களுள் குறிப்பிடத்தகுந்த நாடகம் 'இளங்கோ' ஆகும். அவரது நாடகங்களுள் இதனையே தலைசிறந்தது என்று கருதலாம். கீழ்வரும் நாடகத்தின் பகுதிகள் அதன் சிறப்பைப் புலப்படுத்தும்.

சேரன்: ...கால்கோட் காதையில் 'இமிழ்கடல் வேலி யைத் தமிழ்நாடு ஆக்கிய, இது நீ கருதினை ஆயின் ஏற்பவர், முதுநீர் உலகில் முழுவதும் இல்லை' என்று எழுதி இருக்கின்றாய்.

இளங்கோ: வில்லவன் கோதை உங்களுக்குச் சொல்வதாக.

சேரன்: ஆமாம். இருந்தாலும் உன் கருத்துத்தானே? உன் காவியத்தில் வரும் வில்லவன் கோதை நீ தானே?

இளங்கோ: (புன்முறுவலுடன்) ஒரு வகையில் உண்மை தான் அண்ணா?

சேரன்: அந்த மூன்று அடிகளுக்கு என்ன பொருள்?

இளங்கோ: பொருள் வெளிப்படைதானே அண்ணா-மயக்கத்திற்கு இடம் இல்லையே.

சேரன்: உலகத்தையே தமிழ்நாடாக ஆக்கக் கருதினால் அது முடியும் என்று எழுதியிருக்கிறாய்-தமிழ்நாடு ஆக்குவது என்றால் எப்படி?

இளங்கோ: நீங்கள் எப்படிக் கருதுகிறீர்கள் அண்ணா?

சேரன்: உலகத்தை வென்று என் ஆட்சிக்கு உட்படுத்தல் என்று கருதினேன் ஆனால்.

இளங்கோ: அண்ணி என்ன சொன்னார்கள்?

சேரன்: உலகத்தை வென்று, தமிழ் மொழியையும் தமிழ்ப் பண்பாட்டையும் அங்கெல்லாம் பரப்பி, மற்ற நாட்டு மக்களையும் தமிழர்களாக்கி, தமிழ் நாட்டின் எல்லையை விரிவடையச் செய்தல் என்று வேண்மாள் கூறினாள்.

இளங்கோ: அண்ணியின் கருத்தே அழகான பொருள் அண்ணா?

*　　*　　*

இளங்கோ: திருவள்ளுவர் போன்ற பெருமக்களையும் உன்னையும் என்னையும் வளர்த்துப் பண்படுத்தும் தாய்மொழியாகிய தமிழையும் இந்தத் தமிழ் நாட்டையும் நினைத்துத்தான் வருந்துகின்றேன்.

இளந்துறவி: விளங்கவில்லை அடிகளே!

இளங்கோ: ஒரு நாட்டில் வழிகாட்டும் அறிஞர்களிடமும் தலைவர்களிடமும் பொறாமை வாழ்ந்தால், அந்த நாடு வாழாது. ஐந்தவித்தானடிகள் போன்ற அறிஞர்களிடமும் தமிழகத்தை ஆளும் தலைவர்களிடமும் பொறாமை காணும்போதெல்லாம் எனக்கு அந்த வருத்தம்தான் தோன்றுகின்றது. நம்மை எல்லாம் வளர்த்துப் பண்படுத்தி வரும் தமிழ் மொழியும் தமிழகமும் எப்படி ஓங்கி வாழப் போகின்றன என்று கவலைப்படுகின்றேன். பொறாமை ஒரு நச்சுப் பாம்பு-அதன் நஞ்சு ஏறினால் நாடும் மொழியும் நலிந்து போகுமே!

* * *

மூன்றாவதாக வெளிவந்த நாடகத்தொகுதி 'மனச்சான்று' என்னும் தலைப்பில் அமைந்த நூலாகும். இது 1952 ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் வெளிவந்தது. இத்தொகுதியில் 'மனச்சான்று' என்னும் தலைப்பினில் அமைந்த நாடகம் காந்திய நெறியை வற்புறுத்துகின்றது; 'கிம்பளம்' என்னும் தலைப்பினில் அமைந்த நாடகம் தீயவர்களையும் அனுசரித்துப் போனால்தான் உலகில் வாழமுடியும் என்று கூறுகின்றது; 'ஏமாற்றம்' என்னும் தலைப்பினில் அமைந்த நாடகம் சமுதாயத்தில் பணத்தின் மதிப்பினையும், தனி மனிதனின் மதிப்பின்மையையும் தெளிவாக்குகின்றது. 'பொதுநலம்' என்னும் தலைப்பினில் அமைந்த நாடகம் காந்தியைப் போன்று சமயம் வாயிலாகப் பொதுத் தொண்டு புரியவேண்டும் என்பதனை அறிவுறுத்துகின்றது. இந்நாடக நூலின் முன்னுரையில் டாக்டர் மு. வ.

கல்லூரிக் கழகங்களில் நடிப்பதற்கென்று யான் அவ்வப்போது எழுதிய நான்கு ஓரங்க நாடகங்களின் தொகுதியே இந்நூல். நாடகமாக நடித்த இளைஞர்

களின் ஆர்வமும் ஊக்கமுமே இந்நூல் வெளிவரக் காரணம்''...

என்று குறிப்பிடுகின்றார்; அவர் பணிபுரிந்த பச்சையப்பன் கல்லூரியில் நாடகங்கள் அரங்கேற்றப்பட்டன. இந் நாடகங்கள் நல்ல புகழை ஈட்டின.

'அல்லி' என்னும் புதினம் 1955 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 'டாக்டர் அல்லி' என்னும் தலைப்பினில் மேடைக்கு ஏற்ப திரு டி. கே. கணபதி என்பவரால் நாடகம் வடிவம் பெற்றது. இதன் பின்னர் 1959 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 'காதல் எங்கே' என்னும் தலைப்பினில் ஓரங்கநாடக நூல் தொகுதி வெளிவந்தது. ஐந்தாவதாக வெளிவந்த இந்நாடக நூலின் முன்னுரையில் டாக்டர் மு. வ.

> ஒரே துறையில் அமைந்த மூன்று ஓரங்க நாடகங்கள்; ஆயினும் வெவ்வேறு கோணங்களிலிருந்து இன்றைய திருமணச் சிக்கல்களையும் அவற்றின் காரணங் களையும் புலப்படுத்துவன.

என்று குறிப்பிடுகின்றார். இத்தொகுதியில் 1. காதல் எங்கே? 2. கடமை எங்கே? 3. நன்மை எங்கே? என்னும் தலைப்புகளில் மூன்று நாடகங்கள் காணப்பெறுகின்றன. இளைஞர்களின் உள்ளங்களை நன்கு ஆராய்கின்றது; உண்மையாகக் காதல் கொண்டவர்கள் கூட மிகுதியாகப் பொருள் வருமானால் மனத்தை மாற்றிக் கொள்கின்றனர் என்று கூறுகின்றது; உறுதியான உள்ளம் இன்மையால் சிறு ஆசைகளுக்கு இரையாகின்றனர் என்று தெளிவாக் கின்றது; மேலும் நடுத்தரக் குடும்பத்துப் பெண்களின் அவலம் புலப்படுத்தப்படுகின்றது.

'மூன்று நாடகங்கள்' என்னும் தலைப்பினில் 1960 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் வெளிவந்த நாடகத் தொகுதியே கடைசியாக வெளிவந்ததாகும். இதனுள்

1952 ஆம் ஆண்டு தனித்து வெளியிடப்பெற்ற 'இளங்கோ' என்னும் நாடகமும், பின்னர் எழுதப் பெற்ற 'திலகவதியார்' 'வீண் கனவு' என்னும் இரண்டு நாடகங் களும் காணப்பெறுகின்றன. நாடகத் தொகுதியின் முன்னுரையில்.

> இளங்கோ நாடகம் கி. பி. 3 ஆம் நூற்றாண்டில் சிலப்பதிகாரம் இயற்றிய ஆசிரியரைப் பற்றிய கற்பனை; "திலகவதியார்" சேக்கிழாரின் காவியத்தை ஒட்டி அமைந்தது; அது கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. கி.பி. 11 ஆம் நூற்றாண்டில் ஆண்ட சோழவேந்தன் இராசேந்திரன் வாழ்வைப் பற்றிய கற்பனை 'வீண் கனவு' என்பது.

என்று குறிப்பிடுகின்றார் டாக்டர் மு.வ.

'இளங்கோ' என்னும் நாடகத்தைக் குறித்து முன்னர்க் குறிக்கப்பெற்றது. 'திலகவதியார்' என்னும் நாடகம். நாவுக்கரசர் மற்றும் அவரது உடன் பிறந்தாளாகிய திலகவதி ஆகியோரின் வாழ்க்கையை நாடக வடிவில் கூறுகின்றது; தொண்டுள்ளத்தை நாடக மாந்தர்களின் வாயிலாகவும் நாடகப் போக்கின் வாயிலாகவும் வலியுறுத்து கின்றார். 'வீண்கனவு' என்னும் நாடகத்தில் நாட்டில் போரே இனி கூடாது எனச் சோழ அரசன் கனவு காண்கின்றான்; கடந்த காலத்தின் நிகழ்ச்சிகளையும், வரலாற்றையும் நம்மால் மாற்றவியலாது என்றும், போர் கள் தவிர்க்கப்பட்டிருக்கலாம் என்று கூறுவதெல்லாம் நமது விருப்பின் வழிப்பட்ட எண்ணமே என்றும், அவ்வகை எண்ணங்கள் வீண் கனவு என்றும் சோழன் மரணப்படுக்கை யின்போது உணர்கின்றான் என்றும் கூறுகின்றது.

செவிடரும் இன்புறக் கூடிய வகையில், குருடரும் மகிழக் கூடிய வகையில் நாடகத்தில் நடிப்பும் உரை

யாடலும் ஒருங்கே அமையவேண்டும் என்னும் மு.வ.வின் கருத்திற்கேற்ப அவரது நாடகங்கள் அமைந்துள்ளமை உணரப்பெறும். மேலும் அவரது நாடகங்கள் பொழுது போக்கிற்காக எழுதப்பட்டவை அன்று; நல்வழியையும் நன்னெறியையும் அறிவுறுத்துபவை (Dr Mu. Va. did not try to entertain the readers by his plays. They are highly instructive and carry some messages) என்னும் கருத்து ஈண்டு நோக்கத்தக்கது.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர் மு. வ., இலக்கிய மரபு (சென்னை, தாயக வெளியீடு, 1968), ப. 161.

2. டாக்டர் மு. வ., மலர்விழி (சென்னை, தாயக வெளியீடு), ப. 1.

3. டாக்டர் மு. வ., அல்லி (சென்னை, தாயக வெளியீடு), ப. 145 — 146,

4. டாக்டர் மு. வ., மண்குடிசை (சென்னை, தாயக வெளியீடு, 1964), ப. 111.

5. டாக்டர் மு. வ., 'கொங்குதேர் வாழ்க்கை', (சென்னை, தாயக வெளியீடு, 1963), ப. 48 — 9.

6. டாக்டர் மு. வ., விடுதலையா?, முன்னுரை (சென்னை, தாயக வெளியீடு, 1968), ப. 3.

7. டாக்டர் மு. வ., கவிஞர் தாகூர் (சென்னை, தாயக வெளியீடு, 1967), ப. 62.

8. தி. பாக்கியமுத்து (பதிப்பாசிரியர்), விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள், (சென்னை, கிறித்தவ இலக்கியச் சங்கம், 1974), ப. 41.

9. "Theme properly speaking the theme work is not its subject but rather its central idea which may be stated directly or indirectly".

— J. A. Cudden, A Dictionary of Literary terms (Andre Deutch, Indian Book Company, 1977), p. 679.

10. தமிழ் ஒளி, மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை இதழ் : ஆறு (1966 — 67), ப. 44.

11. மலர்விழி.

12. அகல் விளக்கு.

13. ,,

14. கரித்துண்டு.

15. "Characters in realistic novels may be meaningful as illustrctians of philosephical ideas or attitude".

—Robert Scheles, Elements of fiction (New Yark, Oxford University Press, 1977), p. 20.

16. E. M. Forster, Aspects of the Novel, (England, Penguin Books, 1970), pp. 75 — 78.

17. Richard Church, 'The Crowth of the English Novel', pp. 171 — 172.

18. கள்ளோ காவியமோ?, (சென்னை, தாயக வெளியீடு, 1965), ப. 6.

19. நெஞ்சில் ஒரு முள்.

20. அகல் விளக்கு, ப. 7.

21. அகல் விளக்கு.
22. E. M. Forster, Aspects of the Novel, pp. 85 — 87.
23. அகல் விளக்கு,
24. மு. வ., 'பாவை', (சென்னை, தாயக வெளியீடு.)
25. மு. வ., 'கயமை', (சென்னை, தாயக வெளியீடு.)
26. ,, 'செந்தாமரை'.
27. மு. வ., வாடாமலர், பக். 175 — 176.
28. ,, அகல் விளக்கு.
29. ,, கயமை, ப. 192.
30. ,, பெற்ற மனம், ப. 6.
31. ,, மலர்விழி, ப. 47.
32. ,, அகல் விளக்கு.
33. மு. வ., தமிழ் இலக்கிய வரலாறு, (புதுதில்லி, சாகித்திய அக்காதெமி, 1972), ப. 291.

* * *

## இரண்டாம் பகுதி

## I

# என் பார்வையில் — டாக்டர் மு. வ.

"வாழ்க்கை மிகப்பெரிய கலை. அதில் தேர்தல் கடமை. வாழத் தெரிந்தவர்களாக விளங்குதலே சமுதாயத் திற்கு நாம் செய்யத்தக்க நல்ல தொண்டு. எப்படி எனின் நம்மைப் பார்த்துப் பிறர் கற்குமாறு, நாம் ஒரு நூலாகப் பயன்படுவோம்".

இவ்வாறு தம் மாணவர் ஒருவர்க்கு 1959 ஆம் ஆண்டில் கடிதம் எழுதியவர் என் பேராசான் டாக்டர் மு. வரதராச னார் அவர்கள் ஆவர்.

தம் வாழ்க்கை குறித்து அவரே ஓர் இடத்தில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"என் வாழ்க்கை படிப்படியான முன்னேற்றங்கள் உடையது. திடீர் மாற்றங்களோ சரிவுகளோ இல்லாதது... வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருப்பத்தூரில் பிறந்தேன்... பாட்டனார் உழவர், பெரியதனக்காரர். தந்தை வியாபாரம் செய்தவர். நானே குடும்ப வட்டாரத்தில் முதல் பட்டதாரி."

'உழப்பின் வாரா உறுதிகள் உளவோ?' என்னும் பழமொழிக்கேற்பத் தம்முடைய அரிய உழைப்பால்,

அயராத முயற்சியால் 'தன்னைத் தலையாகச் செய்து கொண்டவர்' டாக்டர் மு. வரதராசனார் ஆவர்.

வேலம் என்னும் சிற்றூர், வடார்க்காடு மாவட்டம் வாலாசாபேட்டை நகருக்கு அருகே அழகுற நிமிர்ந்து நிற்கிறது. அச் சிற்றூரிற் பிறந்த மு. வ. அவர்கட்குச் சங்கப் புலவர் போன்று இயற்கையில் இணையிலாத ஈடுபாடு இருந்தது. தமிழ்த் தென்றல் திரு. வி. கலியாண சுந்தரனார் தமிழ்ப் பெருமக்கள் இயற்கைக் காட்சிகளில் மனந்தோய்ந்து ஈடுபட வேண்டிய இன்றியமையாமையை வற்புறுத்துவார்.

''மனிதன் இயற்கையோடு உறவாடல் வேண்டும். காடுகளிலும் மலைகளிலும் புகுந்து ஆங்காங்குள்ள இயற்கை வனப்பைக் கண்டு கண்டு மகிழ்தல் வேண்டும். செடிகளின் அழகும், கொடிகளின் அழகும், பூக்களின் அழகும், பறவைகளின் அழகும், பிற அழகுகளும் அடிக்கடி மனத்திற் படிவதால் உடலில் அழகரும்பும். கடலோரத் தமர்ந்து கடலைக் காணக் காண மகிழ்ச்சி பொங்கும். வானத்தை நோக்கினால் அழகிய நீல நிறமும், விண்மீன்களும், திங்களும் மகிழ்ச்சியூட்டும். மகிழ்ச்சி அழகை வளர்க்கும். ஆதலால் மனிதன் என்றும் இயற்கை வாழ்வை விரும்புதல் வேண்டும்'' என்பது திரு. வி. க. கண்ட தெளிவாகும்.

தொடக்க நாட்களில் மு. வ. அவர்களைத் திரு. வி. க. கண்டவுடன், அவர் பார்வையில் மு. வ. பட்ட நிலையினை திரு. வி. க. அவர்களின் மணிமொழி கொண்டே தெரியலாம்.

''வாலாஜா, இராணிப்பேட்டை, வேலூர், வெட்டு வானம் முதலிய இடங்கட்கு யான் அடிக்கடி செல்வேன். கூட்டங்களில் யான் மு. வரதராஜனாரைப் பார்ப்பேன். அவர் என்னைக் கண்டதும் ஒதுங்கி ஒதுங்கி நிற்பார். பின்னர் நாங்கள் நெருங்கிப் பழகினோம். வரதராஜனார் முக அமைப்பு என் மூளைக்கு வேலை அளித்தது. அதைக்

சிந்திக்கச் சிந்திக்க என் மூளை அவர் மூளையை நண்ணியது. நுண்ணறிவுக்கேற்ற முகம் வடிந்திருக்கிறது என்ற முடிவுக்கு வந்தேன்.

"முதல் முதல் வரதராஜனார் பேச்சை யான் வெட்டுவாணத்தில் கேட்டேன். அப்பேச்சு, அவர் முக அமைப்பைப் பற்றி யான் கொண்ட முடிவை உறுதிப்படுத்தியது. அவரது எழுத்தும் பேச்சைப் போலவே இருத்தல் கண்டேன்.

"கூட்டம் கூடுதற்கு முன்னர்க் காலையிலும் கூட்டம் முடிந்த பின்னர் மாலையிலும் வரதராஜனாரும் யானும் ஆற்றங்கரைக்குச் செல்வோம்; தோட்டங்களுக்குப் போவோம். இயற்கையை எண்ணுவோம்; பேசுவோம்; உண்போம். அவர் திருப்பத்தூரில் வதிந்தபோது இயற்கையோடியைந்த வாழ்வு அவரிடம் தானே தவழ்ந்தது."

இவ்வாறு 'கூறாது நோக்கிக் குறிப்புணரும்' தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் கூற்றிற் கிணங்க மு. வ. அவர்கள் இளமைதொட்டே இயற்கையில் ஊறித் திளைத்தவராவர். 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை' என்ற தலைப்பில் தம் டாக்டர் பட்டத்திற்குரிய ஆராய்ச்சியினை மேற்கொண்டு வெற்றி பெற்றார்கள். இன்னும் ஆராய்ச்சியுலகில் மணிமுடியாக அமையத்தக்க அவரது நூலான 'ஓவச் செய்தி' பிறந்த வரலாற்றினை, "ஒரு பாட்டு; அதைக் குறித்துப் பல நாள் போராட்டம். இரண்டு நாள் இரவும் பகலும் ஏக்கம். மூன்றாம் நாள் மாலை வேலத்து மலையை அடுத்து அழகிய ஓடையில் உலவும்போது எதிர்பாராத விளக்கம்; நல்ல தெளிவால் பிறந்த பேருவகை. அவைகளே இந் நூலாக உருப்பெற்றது" என்று குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

இளமைக் காலத்திலேயே சான்றாண்மைக்குரிய பெரிய பண்புகள் இவரிடம் படிந்திருந்தன. எளிய

உடைகளையே உடுத்துவார். காந்தியத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டிருந்த இவர் தூய வெள்ளிய கதராடையினையே உடுத்தி வந்தார். நெடிய உருவமும் கரிய நிறமும் வாய்ந்து எடுப்பான தோற்றங் கொண்டிருந்த இவரின் கண்கள் ஒளிமயமானவை. உள்ளொளி துலங்கும் மனத்தை வெளிப்படுத்தும் கூரிய சீரிய பார்வை. மேலும் அருளொளி துலங்கும் விழிகள் எனலாம்! அரவணைக்கும் கைகள் எனலாம். பிறருக்கு எப்போதும் உதவி செய்ய விரையும் மனம் எனலாம். குடும்பப் பாசத்தோடு பிறரிடம் பழகும் பெருமனம் இவருடையது எனலாம். தம் உடல்நலத்திற்கு ஊறு விளைவிக்காத எளிய உணவையே உண்டு, பழங்களை மிகுதியாகச் சேர்த்துக் கொண்டு வாழ்ந்தார் எனலாம். வருவாயைத் தாம் தேடிச் செல்லாமல் வருவாய் தம்மை நாடி வர உழைப்பையும் அறிவையும், பண்பையும், முயற்சியையும் பெருக்கிக் கொண்டவர் மு. வ. ஆவர்.

1931 ஆம் ஆண்டு முதல் 1934 ஆம் ஆண்டு வரை நலிந்த உடலை ஓம்ப வேண்டும் என்று அரசாங்கப் பணியை விடுத்துச் சொந்தவூர் சேர்ந்த மு. வ. அவர்கள் கற்றுக் கற்று உயர்ந்தார். இயற்கை மருத்துவ முறையில் உடல்நலம் காத்துக் கொண்டார்.

"ஓய்வு கொள்ளக் கிராமத்திற்குச் சென்ற நான், ஓயாமல் இரவும் பகலும் தமிழ் நூல்களைக் கற்றேன்" என்கிறார் மு. வ.

திருப்பத்தூருக்கு அண்மையில் 'கிறித்து குல ஆசிரமம்' என்ற அமைப்பு இன்றும் உளது. அது மருத்துவச்சாலையாகவும் அமைந்து ஏழை எளியோர்க்கு மருத்துவத் தொண்டு ஆற்றிவந்தது. டாக்டர் ஏசுதாசன் என்ற பெரியவர் தாய்மொழிப் பற்றுமிக்கவர். அவருடன் ஸ்காத்லாந்து நாட்டைச் சேர்ந்த டாக்டர் பேட்ரன் என்பவரும் பணியாற்றி வந்தார். தமிழ் மொழியினைக்

கற்க உளங்கொண்ட மருத்துவமனைப் பெரியவர்கள் பலர் மு. வரதராசனாரின் உதவியை நாடினர். 'தீனபந்து ஆண்ட்ரூஸ்' அவர்கள் அண்ணல் காந்தியடிகளாரிடம் பயின்றவர். அவரும் அவ் ஆசிரமத்திற்கு வந்திருந்தார். அவரோடு பழகிய காரணத்தால் மு. வ. அவர்கள் காந்தியப் பற்றும், சமயப் பொறுமையும், பிறருக்கு உழைக்கும் பெருமனமும் கைவரப்பெற்றார்.

கடுமையாக உழைத்துத் தம்மைச் சார்ந்த பிறரும் கடுமையாக உழைக்க வேண்டும் என்று கருத்துக் கொண்டிருந்த மு. வ. அவர்கள் தாமே பயின்று சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் தேர்வில் 1935 ஆம் ஆண்டில் முதலாமவராக வந்து திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத தம்பிரானவர்களின் ஆயிரம் ரூபாய்ப் பரிசினைப் பெற்றார். 1939 ஆம் ஆண்டில் புகழ் பூத்த கல்வியாளர் டாக்டர் ஏ. எல். முதலியார் ஆதரவு காரணமாகச் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் தமிழ் திருத்தாளராகப் பணியமர்த்தம் பெற்றார்.

மு. வ. பிறவி ஆசிரியர். மாணவர் மனத்தில் பசுமரத் தாணியெனப் பதியும் வண்ணம் பாடம் நடத்துதலில் வல்லவர். இருபத்தெட்டே நிறைந்த அகவையில் கல்லூரியிற் கால் வைத்துப் பயிலாத அவர், தாமே முயன்று படித்துத் தகுதியுடன் தேறிக் கல்லூரியில் — அதுவும் தமிழிற்கே அந்நாளில் முடிமணியாக விளங்கிய வகுப்பான பீ. ஓ. எல். ஆனர்ஸ் வகுப்பில் அவர் மாணாக்கர்க்குத் தமிழ் கற்றுக் கொடுத்த திறத்தினை அவருடைய முதலணி மாணவர் ஒருவரே மனந்திறந்து குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

"கழுத்துவரை மூடிய நீண்ட கோட்டு, வெள்ளைத் தலைப்பாகை, நெற்றியில் சந்தனப் பொட்டு ஆகிய கோலத்துடன் மு. வ. அவர்கள் எங்கள் வகுப்பிற்குள் முதன் முதலாக 1940 ஆம் ஆண்டு ஜூன் மாதம் நுழைந்தார். அவர் தோற்றப் பொலிவும், முகத்தில் தவழ்ந்த இனிமையும்,

நிமிர்ந்த நன்னடையும் எங்களை ஆட்கொண்டன. 'திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்' என்ற நூலை முதல் பாடமாகத் தொடங்கினார். தமிழ்த்தெய்வமான முருகனை இலக்கிய உலகில் அவர் அறிமுகம் செய்த விதமே தனிச் சிறப்புடன் திகழ்ந்தது. அதை அடுத்து 'நம்பி அகப்பொருள்' என்ற இலக்கண நூலைப் பாடம் சொல்லி விளக்கினார். ஆம், தேனில் இனிமையைக் குழைத்துச் செந்தமிழ்ப் பாலினை ஊட்டத் தொடங்கினார். அள்ள அள்ளக் குறையாத அமுதை வாரி வாரி வழங்கினார். ஐந்து ஆண்டுகள் போனதே தெரியவில்லை.''

கண்டறியாதன வெல்லாம் கண்முன் காட்டி, விளக்கம் ஊட்டி மாணவர் மனத்தைத் தெளிவுறச் செய்வது மு. வ. அவர்களின் பாடஞ் சொல்லும் முறை. ஒரு சமயம் புன் கம் பூக்களைக் கொண்டு வந்து மேசை மேல் வைத்து, ‘‘ 'பொரிப்புன்கு' என்றாரே சங்கப் புலவர்; பாருங்கள் — சிந்திக் கிடக்கும் புன்க மலர்களை! தெரியாமல் அயர்ந்து போய், பொரி என்று வாயில் போட்டுக் கொள்ள யாரேனும் நினைத்தாலும் வியப்பதற்கில்லை. பாருங்கள் இலக்கியப் புலவரின் கூரிய கலைப் பார்வையை'' என்று அவர் குறிப்பிட்ட பொழுது, அவர் பாடம் பயிற்றலும் வகையும் திறமும் ஒருசேர விளங்கின.

டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் எண்ணிப் பார்க்க முடியாத அளவிற்கு — எடுத்து மொழிய முடியாத அளவிற்கு ஆழ்ந்த தமிழ்ப் பற்றாளர் என்பதனை அவரோடு நெருங்கிப் பழகியவர்கள் மிக நன்றாக அறிவார்கள். தம் தந்தையின் தமிழறிவு சரிவர அமையவில்லையே என வருந்தி அவரே குறிப்பிடும் இடம் அவர் மொழிப் பற்றுக்குத் தக்கதோர் எடுத்துக்காட்டாகும். அவரே இதனைக் குறிப்பிடக் காணலாம்.

‘‘எனக்கு ஒரு பெரிய குறை உண்டு. நான் வெளியூர்க்குச் சென்ற பிறகு அவர் எழுதிய கடிதங்களைப் படிக்கும்

போதெல்லாம், என் தந்தையாரைப்போல் தமிழ்க் கொலை செய்கின்றவர் எவரும் இல்லை என்று எண்ணி வருந்துவேன். 'றாமசாமி, நன்ராக, இருக்கிறார்கள், வன்து போறார், எண்று சொண்ணார்' என்றெல்லாம் அவர் கடிதங்களில் எழுதியவற்றைக் கண்டு ஆத்திரம் கொள்வேன். 'அந்தக் காலத்துப் படிப்பு அவ்வளவுதான் போலும்' என்று ஒருவாறு ஆத்திரம் அடங்குவேன்''

என்று குறிப்பிட்டிருப்பதைக் காணும் பொழுது தமிழைப் பிழையற எழுத வேண்டும் என்று அவர் காட்டிய ஆர்வம் புலனாகின்றது.

ஒரு முறை வகுப்பறையில் மொழி நூற் பாடத்தினை எங்கட்குப் பயிற்றி வந்தார்.

**ஆயினும் தமிழ் நூற்கு அளவிலை...**
**ஐந்தெழுத்தால் ஒரு பாடை என்று**
**அறையவும் நாணுவர் அறிவுடை யோரே**

என்ற புலவர் ஒருவரின் — சுவாமிநாத தேசிகரின் பாட்டைச் சொல்லி, தமிழ் மண்ணிற் பிறந்து, தமிழ் நாட்டில் வாழ்ந்த ஒருவர் இப்படிச் சொல்லிப் போனாரே என்று துடித்துத் துடித்து மனம் மாழ்கினார்.

இந் நிகழ்ச்சி அவர்தம் மொழிப்பற்றினைக் காட்டும்.

சின்னஞ் சிறு குழந்தையர்க்கு என அவர் தொடக்க காலத்தில் எழுதிய கவிதைகளில் கருத்துவளம் இருப்ப தனைக் காணலாம். மு. வ. வின் எழுத்துகள் என்றால் அவற்றில் வாழ்க்கையை வழிநடத்தி வளப்படுத்தும் கருத்துகள் தவறாது இருக்கும் என்று பின்னாளில் தமிழுலகு ஏற்றிப் பாராட்டியதற் கிணங்க, அடிநாளிலேயே தம் எழுத்தைச் சமுதாயப் பயன்பாட்டிற்கெனப் பயன் படுத்தியவர் மு. வ. அவர்களாவர். ஒரு பாட்டைப் பார்ப்போம் :

தென்னை மரமே கேளாய்!
தென்னை மரமே கேளாய்!
உன்னை வளர்த்தவர் அப்பா
என்னை வளர்த்தவர் அம்மா!
உனக்கும் வயது ஆறே:
எனக்கும் வயது ஆறே;
நீ வளர்ந்த உயரம்
நான் வளரவில்லை!
நீ கொடுப்பாய் இளநீர்
நான் கொடுப்ப தென்ன?
ஆனாலும் என்னை அன்பாய்
அன்னை வளர்த்தலைப் பாராய்!

அரியவற்றையெல்லாம் எளிதில் விளக்கும் அரிய திறம் பெற்றவர் பெருந்தகை மு. வ. ஆவர். நுணுக்கமாக மொழிநூற் கருத்துகளையும் எவரும் விளங்கிக் கொள்ளும் வண்ணம் அவர் எழுதியிருப்பதைக் காணலாம்.

"கோழி பேசுகிறது. கோழியாவது பேசுவதாவது? இது என்ன கதையா என்று எண்ணத் தோன்றும். ஆனால் நன்றாக எண்ணிப் பார்த்தால் தாய்க்கோழி தன் குஞ்சுகளோடு இருக்கும் போது எந்நேரமும் பேசிக் கொண்டே இருப்பது உண்மை என்று தெரியும். அது ஒரு பேச்சா, கிக் கிக்கிக் என்ற ஒலிதானே என்று எண்ணலாம். நமக்கு விளங்காத காரணத்தால் அது பேச்சு அன்று என்று தள்ளிவிடக் கூடாது. சீனாக்காரன் பேசுவது நமக்கு ஒன்றும் விளங்கவில்லை. அதனால் அது பேச்சு அன்று என்று தள்ள முடியுமா? அப்படித் தான் கோழிப் பேச்சும். அதன் பேச்சு நமக்கு விளங்க வில்லை. ஆனால், அதன் இளங்குஞ்சுகளுக்கு நன்றாக விளங்குகிறதே. அவைகள் தாய் சொல்வதைக் கேட்டு அதன்படி நடப்பதைக் காணலாம். ஆகையால் அது பேச்சுத்தான்."

— இது மொழியின் கதை என்கிறார்.

பாத்திரப் படைப்புகளை நுணுகிக் கண்டு அவர்களின் வாழ்வினைத் திறனாய்வு நோக்கில் பார்த்து உண்மை தெளியும் திறம் மு.வ. அவர்களுடையது. 'மாதவி' என்ற நூலில் மாதவியின் பண்பு நலங்களை அவர் விளக்கும் போக்கு, புதுமையும் புரட்சியும் உடையதாகும்.

"கண்ணகியின் வாழ்வு கணவனுக்காகவே வாழ்ந்து கணவனுக்காகவே முடிந்தது. மாதவியின் வாழ்வு காதலின் நின்று பிறகு அதையும் கடந்து அறத்துறையில் சென்றது. மனம் மாறிய மாதவி பிறந்த குடும்பத்தின் தீமையை வேருடன் களைந்தாள்; அதுபோன்ற மற்றக் குடும்பங்களின் சீர்திருத்தத்திற்கு வழிகாட்டியாக விளங்கினாள்; பெரும் புரட்சி செய்தாள்; கலையின் வளர்ச்சிக்காக மங்கையர் சிலரின் வாழ்வைக் கெடுக்கும் மடமையைக் கொளுத்தினாள். அரசன் திகைக்க, ஊரார் வியக்க, சுற்றத்தார் இரங்க, பெற்ற தாயும் வருந்த, சீர்திருத்தம் செய்தாள். கணிகையரின் வாழ்வுக்கும் தனக்கும் தொடர்பு இல்லை என்பதை நாடு அறியச் செய்தாள். தன் வயிற்றில் பிறந்த மணிமேகலையைத் தமிழகத்தின் தவச் செல்வி ஆக்கினாள். சிறைக் கோட்டத்தை அறக் கோட்டமாக்குதல், அமுத சுரபி ஏந்திப் பசிப்பிணி தீர்த்தல் முதலிய அறப்பெருஞ் செயல்கள் செய்து தொண்டு ஆற்றி, உலகப் பெருமாதரில் ஒருத்தியாக விளங்கிய மணிமேகலையைப் பெற்ற தாய் என்று உலகம் புகழுமாறு உயர்நிலை உற்றாள் மாதவி" என்று அவர் கூறுந் திறம் பாத்திரங்களையே விளக்கும் தன்மைத்தன்றோ!

படைப்பு எழுத்தாளர் (Creative Writer) என்ற வகையில் மு.வ. இந்நூற்றாண்டிற் சிறக்க விளங்கியதனால் அவர் எழுதிய இலக்கிய நூல்களுக்குக் கூடப் படைப்பிலக்கியத்தின் தகுதிகள் சிலவற்றைப் புகுத்தி விளக்கினார். சிறு கதையின் தொடக்கமும் முடிவும் குதிரைப் பந்தயத்தைப் போல இருக்கவேண்டும் என்பர். தொடக்கம் கருத்தைக் கவர்ந்து மனத்தைச் சுண்டியிழுப்பதாக இருக்க

வேண்டும் என்பர். முடிவு நம்மைச் சிந்திக்க வைத்து நம் வாழ்வைச் சிறக்க வைப்பதாக இருக்கவேண்டும் என்பர். அம் முறையில் 'கண்ணகி' என்னும் இலக்கிய நூலின் தொடக்கம் இவ்வாறு அமைகின்றது.

"ஏறக்குறைய ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் மாலையில் மதுரை மாநகரத்தின் ஒரு பகுதியில் ஒரு பெண்ணின் கூக்குரல் கேட்டது. இந்த ஊரில் கற்புடைய பெண்கள் இல்லையா? அருளுடைய சான்றோர் இல்லையா? அறங்காக்கும் தெய்வமும் இல்லையா? என்று அழுது அரற்றுவது கேட்டது"

என்று சிறுகதைப் போக்கின் சிறந்த உத்தியினைக் கையாண்டு, நூல் படிப்போரின் கவனத்தினைக் காந்தமெனக் கவர்கிறார் மு.வ.

தமிழ் நாட்டுப் பதிப்பக வரலாற்றில் இதுகாறும் அதிகமாக விற்பனையாகியுள்ள நூல் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் எழுதிய 'திருக்குறள் தெளிவுரை' என்பது பலரும் அறிந்த செய்தியே. பத்து லட்சம் படிகளுக்கு மேல் விற்பனையாகியுள்ள ஒரே தமிழ் நூல் அது.

'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' மு. வ. அவர்கள் எழுதிய மிக உயரிய நூல். தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்கள் வாக்கிற் சொல்லவேண்டும் என்று சொன்னால், 'உலகம் ஒரு குலமாதல் வேண்டும்' என்னும் உயர்ந்த உணர்வே திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் என்றும் நூலைப் படைக்க வைத்தது' எனலாம்.

மு.வ. அவர்கள் திருப்பெயர் ஒளிர வகை செய்தது படைப்பிலக்கியத் துறையே எனலாம். 'செந்தாமரை' என்னும் முதல் நாவலை எழுதி முடித்துப் பொருள் முட்டுப் பாட்டால் வெளியிட முடியாமல் மு. வ. அவர்கள் திணறிய

பொழுது, அவருக்கு அமைந்த அருமை வாழ்க்கைத் துணைவியார் எங்கள் மதிப்பிற்குரிய இராதா அம்மா அவர்கள் தாம், தம் நகைகளைக் கழற்றித் தந்து நூல் வெளியிட உதவி செய்தார்கள். செந்தாமரை 1948 ஆம் ஆண்டில் வெளிவந்தது. 'கள்ளோ காவியமோ' அவருக்குப் புகழ் சேர்த்த நாவல். இந் நாவலைப் படித்துவிட்டு மணமக்கள் பலர் மகிழ்ச்சியோடும் அமைதியோடும் வாழ்வதாக அவர் அமரராகிப் பல ஆண்டுகள் கழிந்த நிலையிலும் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள்.

> "காதல் வாழ்க்கையில் ஒருவகைக் கண்மூடி வாழ்வு வேண்டும். குழந்தைபோல் வாழவேண்டும்! தொடக்கத்தில்தான் ஆராய்ச்சி வேண்டும். பிறகு அயுள் வரைக்கும் ஆராய்ச்சியும் கூடாது. அறிவும் மிகுதியாகக் கூடாது. ஒருவர் குற்றம் ஒருவர்க்குத் தெரியாத அன்பு வாழ்வு—கண்மூடி வாழ்வு வேண்டும்"

என்பார் மு.வ.

"இன்பத்திற்குத் துணையாக யாராலும் முடியும். ஈ எறும்பாலும் முடியும் தேவையானபோது ஈயும் எறும்பும் நம்மைக் கேளாமலே வந்து மொய்க்கின்றன. அதுபோல் இன்பம் உள்ளவரை யார் வேண்டுமானாலும் வந்து மொய்த்துக் கொள்வார்கள். ஆதலால் இன்பத்திற்குத் துணையாக வல்லவரை நம்பாதே. துன்பத்திற்குத் துணையாக இருக்க வல்லவரைத் தேடு. உறவானாலும், நட்பானாலும், காதலானாலும் இப்படித்தான் தேட வேண்டும்."

இஃது 'அல்லி' என்னும் நாவலின் உள்ளீடான கருத்தாகும்.

"தமிழர்கள் நல்லவர்களாக மட்டும் வாழ்ந்தால் போதாது; வல்லவர்களாகவும் வாழவேண்டும்" என்பது மு.வ. தமிழர்களுக்கு விடுத்த செய்தியாகும்.

"அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கிநட; உரிமைக்காகப் போராடிக் காலங் கழிக்காதே."

—இது 'தங்கைக்கு' நூல் வழி, பெண்ணுலகிற்கு விடுத்த செய்தி.

"விரும்பியது கிடைக்கவில்லையென்றால், கிடைத்ததை விரும்பவேண்டும்".

இஃது எல்லார்க்கும் விடுத்த செய்தி.

அரசு, நம்பி, பாரி என்று தூய தமிழ்ப் பெயர்களையே தம் பிள்ளைகளுக்கு இட்ட மு. வ. ஒரு **தமிழர்.**

தமிழின் துறைதோறும் துறைதோறும் சென்ற நூல்கள் பலவற்றைப் படைத்த மு. வ. ஒரு **கலைஞர்.**

தமிழ்ச் சமுதாயவுணர்விற்கே முதலிடம் தந்து வாழ்ந்த மு. வ. ஒரு **சான்றோர்.**

* * *

II

# நினைத்துப் பார்க்கிறேன்

திருமால் வாமனனாக வந்து ஈரடியால் இம்மண்ணையும் விண்ணையும் அளந்தார் என்பது. மு. வ. என்ற ஈரெழுத்தால் தமிழ் நெஞ்சங்களைத் தம் எளிய எழுத்தால் உயரிய சிந்தனையால் ஈர்த்தவர் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் ஆவர். பள்ளி இறுதித் தேர்வு மட்டுமே வகுப்பில் அமர்ந்து படித்துத் தேறிய அவர், பின்னாளில் அமெரிக்க நாட்டின் கல்லூரியொன்றில் 'டி.லிட்.' சிறப்புப் பட்டம் பெறும் அளவிற்குத் தம்மைக் கல்வியாலும், பண்பாலும், தகுதியாலும், புகழாலும் ஒருவர் வளர்த்துக் கொண்டார் என்பது அவரைப் பொறுத்தவரையிலும் பொருந்தும் பொன்மொழியாகும்.

அவர் பிறந்த வேலம், வாலாசா ரோடு எனும் ரயில் நிலையத்தை யடுத்த சிற்றூராகும். அவர் பரம்பரையில் எவரும் உயர்கல்வி படித்திருக்கவில்லை என்பது மட்டுமல்ல; எளிய உழைப்பினைக் கூட அன்றாட வாழ்க்கையில் மேற்கொண்டிருக்கவில்லை என்பதும் உண்மை. அப்படிப்பட்ட குடும்பத்தில் பிறந்த என் ஆசிரியர் மு. வ. அவர்கள் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களால் பெரிதும் பாராட்டப் பெற்றவராகப் பின்னாளில் மிளிர்ந்தார் என்பது மட்டுமல்ல, தாம் பெற்ற மூன்று மக்களையும் மருத்துவத்துறையில் முன்னுக்கு வரச் செய்ததோடு, அத்-

துறையின் உயர் பட்டங்களைப் பெறச் செய்ததும் ஓர் உயரிய சாதனையாகும்.

மு. வ. அவர்கள் நூல் வெளியீட்டுத் துறையில் செய்த சாதனை இன்னும் முறியடிக்கப்படவில்லை என்பது ஈண்டு நினைவுகூரத் தக்க செய்தியாகும். அவர் எழுதிய 'திருக்குறள் தெளிவுரை' பல இலட்சம் படிகள் இதுகாறும் விற்பனையாகியுள்ளது என்பது நூல் வெளியீட்டுலகில் நிலைத்த சாதனையாகும்.

இவர் எழுதிய 'கள்ளோ காவியமோ' எனும் நாவல், புதுவதாகத் திருமணம் மேற்கொண்டு வாழும் பலருக்கு வழிகாட்டும் தகுதி படைத்த தனிநூலாய்த் திகழ்கின்றது. இந்நூல் படித்ததால் எங்கள் வாழ்வு பூசலும் சிறுசிறு சச்சரவுமின்றி அமைதியாகச் செல்கிறது என்று இவருக்கு வந்திருந்த கடிதங்கள் மிகப் பலவாகும். இவர் எழுதிய 'கி. பி. 2000' என்னும் கற்பனை நூலினைப் பலரும் பாராட்டுவர். 'அறமும் அரசியலும்' நாட்டுத் தலைவர் பலரால் வரவேற்கப்பட்ட நல்லதொரு கட்டுரை நூலாகும்.

இவருடைய நூல்களில் 'தங்கைக்கு' என்னும் கடித இலக்கியம் முடி மணியானது என மொழியலாம். என் பேராசிரிய அனுபவத்தில் திருமணப் பரிசிற்கெனத் திரு. வி. க. எழுதிய 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணைநலம்', பாரதிதாசன் எழுதிய 'குடும்ப விளக்கு', மு. வ. எழுதிய 'தங்கைக்கு' ஆகிய மூன்று நூல்களையே பரிந்துரை செய்வது வழக்கம். தாம் எழுதிய நூல்கள் சிலவற்றைத் திரு. வி. க கல்வி அறத்திற்கென ஒதுக்கிய உயர் பண்பாடும் இவரிடத்துண்டு.

ஆனந்த விகடன் அதிபர் அமரர் எஸ். எஸ். வாசன் அவர்கட்கும் மு. வ. அவர்கட்கும் அறிமுகம் அவ்வளவாக இல்லாதிருந்த காலம். சிலம்புச்செல்வர் ம. பொ. சி. அவர்கட்குப் பொன்விழா ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது. அவ்விழாவில் வாசன் அவர்

களும் மு. வ. அவர்களும் அருகருகே அமர்ந்திருந்தனர். தாம் பேச உடன்படும் கூட்டத்திற்கெல்லாம் 200 ரூபாய் அன்பளிப்புப் பெற்று, அவ் அன்பளிப்பாலும் பிற செல்வர் களின் நன்கொடையாலும் சென்னாய் நகரில் திரு. வி. க. உயர்நிலைப் பள்ளியினை உருவாக்கி மு. வ. பள்ளி நிர்வாகி யாகி இருந்து அப்பள்ளியை நடத்திவரும் காலம். எனவே தம் அருகே அமர்ந்திருந்த வாசன் அவர்களிடம் அப் பள்ளிக்கு நிதி கேட்டார்கள். அப்போது வாசன் அவர்கள் ஒன்றும் மறுமொழி கூறவில்லை. தம் வீட்டிற்குச் சென்று மு. வ. அவர்களைத் தம் வீட்டிற்கு அன்புடன் வரவழைத்து ரூ. 5000/- நன்கொடை வழங்கியதோடு மு. வ. அவர் களை ஆனந்த விகடனில் தொடர்ந்து எழுத வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள். அப்போது ஆனந்த விகடனில் வெளியான கட்டுரைகளே பின்னாளில் 'கல்வி' என்ற நூலாக வெளிவந்தது. பின்னர்ப் பட அதிபர் ஏ. வி. மெய்யப்பன் அவர்களும் ரூ. 5000/- தந்தார்கள். மு. வ. அவர்களின் 'பெற்ற மனம்' படமாக வெளிவந்தது. அந்நாளில் மு. வ. அவர்களை யார் அணுகினும், அவர் களிடம் திரு. வி. க. உயர்நிலைப் பள்ளியின் வளர்ச்சிக் கெனவே பேசி, நன்கொடை பெற்று அப்பள்ளியினை நன்னிலைக்குக் கொண்டுவந்த திறத்தினை ஈண்டு நினைத் துப்பார்க்கிறேன். நான் எம்.ஏ. தேறிய நிலையில் கல்லூரிப் பணி கிடைக்காதோ என்றிருந்த நேரத்தில் ''நீ வீட்டி லிருந்து நேராகத் திரு. வி. க. உயர்நிலைப் பள்ளிக்கு வந்து விடு. அங்கேயே வேலைக்கான 'ஆர்டர்' தருகிறேன். நாளையே வேலையில் சேர்ந்துவிடலாம்'' என்ற மு. வ. அவர்களை நினைத்துப் பார்க்கிறேன்.

ஒரு திருமண விருந்திற்குப் போய் மு. வ. அவர்கள், பேராசிரியர் அ. மு. ப. அவர்கள், பச்சையப்பர் கல்லூரி உதவி மேலாளர் திரு. வீ. பாஷ்ய ராமானுஜம், நான் ஆகிய நால்வரும் வீடு திரும்பிக் கொண்டிருந்தோம். அப்பொழுது சிந்தாதிரிப்பேட்டையில் ஒரு வீட்டில் நான்

குடியிருந்து வந்தேன். என்னை முதலில் விடுவதற்கென என் வீட்டின் முகப்பில் கார் வந்து நின்றது. எல்லோரையும் என் வீட்டினுள் அழைத்தேன். அப்போது என் வீட்டில் ஒரு மேசை, ஒரு நாற்காலி, ஒரு ஸ்டூல் மட்டுமே இருந்தன. மு. வ. அவர்கள் நாற்காலியில் அமர்ந்தார். அ. மு. ப. அவர்கள் ஸ்டூலில் உட்கார்ந்தார். பாஷ்யம் அவர்கள் மேசை மேல் அமர்ந்தார். இவர்கள் உட்காருவதற்குக் கூடச் சரியான இருக்கைகள் இல்லையே என என் மனத்தில் சிந்தனை ஓடியது. இதனை எவ்வாறோ மு. வ. அறிந்து கொண்டார். என்னைத் தேற்றும் போக்கில் சொன்னார் ''சர். சி. வி. இராமனுக்குக் கூடத் தொடக்க நாளில் ஒரு மேசையும் நாற்காலியும் மட்டுமே இருந்தன. உனக்கோ உடன் ஒரு ஸ்டூலும் உள்ளது'' என்று குறிப்பிட்டார். அம் மட்டோடன்றி மறுநாள் கல்லூரியில் என்னை அழைத்து ''நேற்று உன் வீட்டில் புத்தகங்கள் வைக்கப்படுவதற்கு ஒரு 'பீரோ' இல்லாமல், மேசை மேலும் சன்னல் அருகிலும் புத்தகங்கள் சிதறிக் கிடப்பதைப பார்த்தேன். நான் தரும் பணத்தை எடுத்துக் கொண்டு போய் 'மர்ரே கம்பெனி' ஏலத்தில், அங்கிருக்கும் சம்பந்தம் என்பவரிடம் சொல்லி நல்ல பீரோவாக ஒன்று வாங்கி வா'' என்றார். அவ்வாறு அவர் அன்போடும் அருள் உள்ளத்தோடும் வாங்கித் தந்த பீரோ இன்றும் என் இல்லத்தில் அணி செய்து வருகின்றது.

''வலக்கை தருவது இடக்கைக்குத் தெரியக்கூடாது'' என்பார்கள். இப் பழமொழி மு. வ. அவர்களைப் பொறுத்த வரையில் முற்றிலும் உண்மையாகும். கல்லூரிக் கல்விக் கட்டணம் செலுத்தாதவர்கள், தேர்வுக் கட்டணம் செலுத்தாதவர்கள், விடுதிக் கட்டணம் செலுத்தாத வர்கள், புத்தகங்கள் வாங்க முடியாதவர்கள் ஆகிய பல தரப்பு மாணவர்களுக்கும் அவர் பிறர் எவரும் அறியா நிலையில் உதவினார். ஆராய்ச்சிப் படிப்பிற்கெனப் பாடுபடும் மாணவர்க்கென அவர் எடுத்துக் கொண்ட அக்கறையினை இன்று எவரேனும் எடுத்துக் கொள்ள

முடியுமா என்பது ஐயப்பாடே. என் ஆராய்ச்சி அமைதியாக நடைபெறுவதற்குப் பெங்களூரில் இருந்த அவர் வீட்டைச் சில கோடை விடுமுறைகளில் எனக்கு ஒதுக்கிய அப்பேருள்ளத்தினை இன்றும் நான் நன்றியோடு நினைத்துக் கொள்கிறேன்.

அரசினரின் உதவித்தொகைக்கெனக் கல்லூரி மாணவர் எவரேனும் விண்ணப்பஞ் செய்வாரேயானால், தொடர்புடைய அதிகாரியைக் கண்டுபேசி அவ் ஏழை மாணவர் அரசின் நிதியுதவி பெற்று வாழ்வில் ஏற்றம் பெற எல்லா வகைகளிலும் உதவுவார்.

சிலர் இவரைச்சட்ட மேலவைத் தேர்தலுக்கு நிற்க வேண்டும் என்று வற்புறுத்திய காலையிலும், தாம் உறுதியாக என்றும் எப்போதும் தேர்தலுக்கு நிற்கப் போவதில்லை என்று ஒரேயடியாக மறுத்துவிட்டார்.

இயற்கைக் காட்சிகளில் இவருக்கு ஈடுபாடு மிகுதி. காவிரியாறு கண்டால் அதில் குளித்து விட்டுத்தான் மேற்கொண்டு பயணத்தைத் தொடருவார், இயற்கை மருத்துவமே இவருக்கு உடன்பாடு. சளித்தொல்லையிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ளத் தாம் அலுவலக அறையில்' 'Sea Pills' என்னும் இயற்கை மருத்துவ மாத்திரைகளை வைத்திருந்தார்.

திருமணம் இரு தரப்புப் பெற்றோர்களும் விரும்பும் வகையில் அமைய வேண்டும் என்பார். பிறர் கண்படாத வாறு வாழ்வு எளிமையாக அமைய வேண்டும் என்பார். திருநாவுக்கரசர் திருத்தாண்டகம், தாயுமானவர் பராபரக் கண்ணி, இராமதீர்த்தரின் கட்டுரைகள், இராமகிருஷ்ணரின் உபதேசங்கள், விவேகானந்தரின் வாழ்வு, காந்தியடிகளின் தொண்டு, இவருக்கு மிகவும் பிடிக்கும். இவற்றையெல்லாம் நினைவுகூரும்பொழுது, பெருவாழ்வு வாழ்ந்த அப்பெருமகனாரின் நினைவு வருகின்றது.

* * *

III

# சான்றோர் பெருந்தகை

1952ஆம் ஆண்டு சென்னை, தேனாம்பேட்டை காங்கிரஸ் திடலில் ஐந்தாம் தமிழ் விழா நடைபெறுகிறது. ஓர் 'ஆட்டோகிராப்' (Autograph) நோட்டுடன் டாக்டர் மு. வ. அவர்களை அணுகுகின்றேன். அப்போது நான் 'இண்டர்மீடியட்' வகுப்பில் படிக்கும் மாணவன். பெயர், ஊர், படிப்பு முதலியவற்றைப் பற்றி அன்போடு விசாரிக்கிறார். உடல் நலங்காத்து உழைப்போடு படித்து முன்னுக்கு வர வேண்டுமென்று வாழ்த்தி 'ஆட்டோகிராபி'ல் தம் கையெழுத்திட்டுத் தருகிறார்.

அன்று, இலங்கை அமைச்சர் திரு. சு. நடேசன் அவர்கள் தலைமையில் 'சங்க இலக்கியம்' என்ற பொருள் பற்றிப் பேசுகிறார். பாமரர் உலகும் பண்டிதர் உலகும் ஒருங்கே மகிழும் வண்ணம் அவர் பேச்சு அனைவரையும் இழுக்கின்றது. மாணவர்கள் அவர் பேச்சில் மயக்கங் கொள்கிறார்கள். தலைவர் நடேசனார் 'தமிழ்நாட்டின் இலக்கிய நோபல் பரிசாளர்' என்று மு. வ. அவர்களை அவையோருக்கு அறிமுகப்படுத்துகிறார்.

ஆனால், இரண்டு ஆண்டுகள் கழித்து 1954ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் அவரிடமே தமிழ் பயிலும் பேறு பெறும் மாணவன் ஆகும் வாய்ப்புப் பெறுவேன் என்று யான் கனவிலும் நினைக்கவில்லை.

அன்று தொடங்கிய தொடர்பு அவர் வாழ்நாளின் இறுதிவரை இடையறவு படாமல் நீடித்ததனை நான் என் வாழ்வின் மிகப் பெரிய பேறு என்று கருதுகின்றேன்.

ஆனால், அவர்கள் மறைவதற்கு மூன்று நாட்களுக்கு முன்னர், அதாவது 7-10-1974 திங்கள் அன்று மாலை 7 மணியளவில் மருத்துவரைப் பார்த்து 'எழுபது ஆண்டுகள் வரை உயிருடன் இருப்பேன் என்று பாலசுப்பிரமணியனிடம் உறுதிமொழி (Assurance) தந்துள்ளேன். அதன்படி மருந்தில்லாமல் என் உடலை நானே இயற்கை மருத்துவ முறைப்படிக் காத்து ஆறேழு ஆண்டுகள் வாழ்வேன்' என்று அவர்கள் ஆணித்தரமாகக் கூறிய சொற்கள் இன்று என் நினைவை விட்டு நீங்காமல், இன்றும் என் காதுகளில் ஒலிப்பனபோல் இருப்பதனை எண்ணி எண்ணிக் கலங்குகின்றேன்.

* * *

1921ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 25ஆம் நாள் திருப்பத்தூரில் பிறந்தவர்கள். வாலாசாவை அடுத்த வேலம் இவர்தம் சொந்த ஊர். பள்ளியிறுதித் தேர்வை 1928ஆம் ஆண்டில் எழுதி நல்ல வெற்றி பெற்றார்கள். கணக்குப் பாடத்தில் நூற்றுக்கு நூறு மதிப்பெண் எடுத்துத் தலைமையாசிரியர் திருவேங்கடத்தையங்கார் பாராட்டினைப் பெறுவது வழக்கம். பள்ளி நாட்களில் அவரே இவர் தரமும் தகுதியும் ஆற்றலும் அறிந்து பாராட்டி ஊக்குவித்து வந்தார்.

இவருடைய வீட்டில் இவரை, இவரை வளர்த்த பாட்டியார் 'திருவேங்கடம்' என்ற பெயராலேயே அழைப்பார். பள்ளிப் பெயர் 'வரதராசன்' என்றிருக்க, வீட்டில் 'திருவேங்கடம்' என்ற பெயராலே வழங்கப் பெற்றார். அந்த அன்புப் பாட்டியின் நினைவில் மலர்ந்ததே 'விடுதலையா' என்ற சிறுகதை.

* * *

பதினாறு வயது முடிந்த நிலையில் அரசாங்கப் பணியினை ஏற்றார். திருப்பத்தூர் தாலுக்கா அலுவலகத்தில் வரி வருவாய்த் துறையில் எழுத்தரானார். பின்னர் 'ஆப்காரி'த்துறை எழுத்தரானார். அந்தத் துறையில் அக்காலத்தில் லஞ்ச நடமாட்டம் உண்டு. ஆனால் அந்தத் தீமைக்குச் சற்றேனும் ஆளாகாத இவர்கள், கடமையுணர்வோடு பணிகளைத் திறம்பட ஆற்றிய காரணத்தினால் வேலைப்பளு மிகுதியாகத் தரப் பட்ட நிலையில் மூன்றாண்டுகளில் உடல்நலம் குன்றி இரத்த வாந்தி எடுத்துத் தம் பணியினை 'ராஜினாமா' செய்துவிட்டுத் தம் சொந்த ஊரான வேலத்திற்குத் திரும்பினார்.

* * *

இவருக்கு இளமை நண்பர்கள் நால்வர் சிறப்பான வர்கள். ஒருவர் மளிகைக்கடை தாமோதர முதலியார்; இரண்டாமவர் மண்டிக்கடைக் கணக்கர் குப்புசாமி முதலியார்; மூன்றாமவர் கவிநயம் கந்தசாமி முதலியார்; நான்காமவர் வேலூர் ஊரீசு கல்லூரித் தமிழ்ப் பேராசிரிய ராக இருந்து ஓய்வு பெற்ற யோகசுந்தரம் ஆவர். இவர்களில் முதலாமவர் தாமோதர முதலியார் முதலில் காலமாகி விட்டார். மற்ற நண்பர்கள் மதுரையில் டாக்டர் மு. வ. அவர்கள் துணை வேந்தராக இருந்தபோது அங்குச் சென்று பத்து நாட்கள் தங்கியிருந்து, பள்ளிக்கூட இளமை நாட்களை நினைவு கூர்ந்து, அந்தக் காலத்திற்கே போய்விட்டவர்களைப் போல் வாழ்ந்தார்கள். தம் நண்பர்களிடம் பிரியாவிடை பெற்ற மு. வ. அவர்தம் குடும்பத்தினர்க்கும் வேட்டி, புடவை, பெட்டி, பை முதலான அன்பளிப்புகளை வழங்கி, பேருந்து வண்டி நிலையம் வரை வந்து வழியனுப்பி வைத்தார். 'பஸ்'ஸில் அமர்ந்ததும் நண்பர்கள் 'நீங்கள் துணைவேந்தர்; வேலை பல இருக்கும்; போய் வாருங்கள்' என்று கூற, மு. வ. அவர்கள் சிரித்துக்கொண்டே, 'நான்

வீட்டிற்குப் போய் விட்டால் நீங்கள் ஒருவேளை பேருந்து வண்டியை விட்டு என் பின்னாலேயே வீட்டிற்கு வந்து விடுவீர்கள். எனவே நான் உங்களை இருந்து ஏற்றி விட்டுச் செல்கிறேன்' என்று சிரித்துக்கொண்டே கேலி பேசினாராம். நண்பர்கள் சூழலில் குழந்தையாகிவிடும் மனத்தை இவரிடம் காணலாம்.

* * *

1931ஆம் ஆண்டில் வேலூரார் நண்பர் திரு. யோக சுந்தரம் அவர்கள் மூலம் 'எல்லா நோய்களுக்கும் மருந்து' எனும் அரிய இயற்கை மருத்துவ நூலை மு. வ. அவர்கள் கண்டார்கள். அந்நூல் இவர் வாழ்க்கையில் புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. பதினாறு வயதில் தொடங்கிய இயற்கை மருத்துவம் இவர் வாழ்நாள் இறுதிவரை நாற்பத்தாறு ஆண்டுகள் தொடர்ந்தது. தம் மக்கள் அரசும், நம்பியும், பாரியும் மருத்துவத்துறை உயர் பட்டங்கள் பெற்று, மருத்துவத்துறையில் உயர்ந்து நிற்கும் நிலையிலும் 'அலோபதி' என்னும் ஆங்கில மருத்துவ முறையில் இறுதிவரை நம்பிக்கை கொள்ளாமல் இருந்தார். தம் உடம்பிற்கு இயற்கை மருத்துவமே ஒத்துவரும் என்று உறுதியாக நம்பினார். அக்கூற்று எத்துணையளவு உண்மை என்பது அவர் இறுதிநாட்களில் 9-10-74 அன்று நேரடியாக விளங்கியது.

* * *

அரசியலில் காந்தியடிகள்பால் ஈடுபாடு கொண்டவர். கட்சி அரசியலை விரும்பாதவர். இருபது ஆண்டுகளுக்கு முன்னர் இன்றைய சர்வோதயத் தலைவர் செயப்பிரகாசர் அவர்களே இவருடைய 'அறமும் அரசியலும்' எனும் நூற் கருத்துகளை இவரை மேடையில் வைத்துக்கொண்டே பாராட்டியிருக்கிறார். காந்தியத்தில் அழுத்தமான பற்று உடையவர் இவர்.

* * *

திரு. வி. க. அவர்களிடத்தில் இவர்கள் கொண்டிருந்த தொடர்பின் சிறப்பு எழுதிக் காட்ட இயலாதது. இவர் வாழ்வில் தோய்ந்து நின்றிலங்கிய பெரியார் அவரே. மு. வ. அவர்களிடத்தில் திரு. வி. க. அவர்கட்குப் பெரு மதிப்பு உண்டு. இதனை அவர்தம் 'வாழ்க்கைக் குறிப்பில்' காணலாம். 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்னும் மு. வ. வின் நூலிற்குத் திரு. வி. க. அணிந்துரை தந்துள்ளார். நூலின் முன்பக்கத்திலேயே 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' (திரு. வி. க. அணிந்துரை யுடன்) என்று இருக்கக் காணலாம். அணிந்துரையில் மு. வ. அவர்களைப் பலபடப் பாராட்டியெழுதியிருந்தார் திரு. வி. க. அவற்றில் பல பகுதிகளை நீக்கிவிட்டு ஒரு சில பகுதிகளையே அச்சிட்டார் மு. வ.

* * *

புகழ்ச்சி வேண்டாதவர் மு. வ. திருக்குறளில் வரும் புகழ் என்ற அதிகாரத்தைத் திருவள்ளுவர் இன்று வாழ்ந்திருந்தால் எழுதியிருக்கமாட்டார் என்பார். அமெரிக்காவில் ஊஸ்டர் கல்லூரியில் தாம் கௌரவ டாக்டர் 'டி. லிட்.' பட்டம் பெற்றதனை அவருடன் நெருங்கியிருந்த ஒரு சிலரே அறிவர். புகழ்ச்சி ஒரு சில சமயங்களில் பகைமையினையும் சிலவிடங்களில் வளர்த்து விடும் என்று நம்பினார் இவர்.

* * *

இயற்கை மருத்துவ முறையினைத் தேர்ந்து, நலிவுற்றிருந்த தம் உடம்பை மாற்றி நலமடைந்தார். தாமே முயன்று படித்து 1934 ஆம் ஆண்டில் 'வித்துவான் — பிரிலிமினரி' தமிழ்த்தேர்வு எழுதி வெற்றி பெற்றார். தாம் படித்த திருப்பத்தூர் உயர்பள்ளியில் தம் தமிழா சிரியர் முருகைய முதலியார் ஓய்வு பெற்ற பின் அவ்விடத்தில் தமிழாசிரியராக நியமிக்கப்பட்டார். 'ஆப்காரி குமாஸ்தா'வாக இருந்தபொழுது இலஞ்சம் வாங்காமல் நேர்மையாகத் தம் கடமையைச் செவ்வனே ஆற்றிய திறம்

உணர்ந்த அக்காலத்தில் அவ்வூரில் அரசியல் செல்வாக்கும் பணச்செல்வாக்கும் பெற்றிருந்த 'ஆப்காரி கான்டிராக்டர்' நாயுடு அவர்கள் முயற்சியால் இப்பணி இவருக்கு வாய்த்தது. இருபத்திரண்டு வயதில் தமிழாசிரியர் பணி தொடங்கினார் மு. வ.

* * *

1935 ஆம் ஆண்டு இவர் வாழ்வில் முக்கியமான ஆண்டு. இவ்வாண்டில் 'வித்துவான்—நிறைவிலை (Final)த் தேர்வில் மாநிலத்திலேயே முதலாமவராக வந்து, திருப்பனந்தாள் மடத்தின் ஆயிரம் ரூபாய்ப் பரிசினைப் பெற்றார். இவர் இத்தேர்வு எழுதுவதற்கு இரண்டு திங்களுக்கு முன்தான் 1935 பிப்ரவரியில் தைத்திங்களில்தான் இவர் தம் உறவுப்பெண் மாமன் மகளார் — நாங்கள் வணக்கத்தோடு போற்றும் இராதா அம்மாவைத் திருமணம் செய்து கொண்டார்கள்.

* * *

திருமணத்திற்கு மாமனார் மாப்பிள்ளை உடைக்கென்று ஐம்பது ரூபாய் தர, முப்பது ரூபாயில் வேட்டி, சட்டை, மேல் துண்டு எடுத்துக்கொண்டு, மீதிப்பணத்தை மாமனாரிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார். திருமணம் வேலத்தில் நடந்தது. மருமகப்பிள்ளையிடம் மாமனாருக்குப் பேரன்பு. பின்னாளில் இவ்வன்பு இருவரிடையிலும் பெரிதும் வளர்ந்தது. மருமகப்பிள்ளை எழுத்துப் பணிக்குத் தடங்கல் வரக்கூடாது என்று, மருமகப்பிள்ளை வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்கி வந்து போட்டு மு. வ. அவர்களின் குடும்பப் பொறுப்பினைக் குறைத்தவர் மாமனார். இவர் மாமனார் மெச்சிய மருகர். மருகரும் மாமனாரைப் பாராட்டிப் பலமுறை என்னிடம் பேசியிருக்கிறார்.

* * *

திருநாவுக்கரசர் பெருமானிடத்தும் அவர்தம் தேவாரப் பாடல்களிடத்தும் அப்பா (இனி நான் இவ்வாறே குறிப்பிடுவேன்; நெருங்கிய மாணவர் பலரும் அவ்வாறே இவர்களை நினைத்து அழைப்பது, எழுதுவது வழக்கம்) அவர்கட்குப் பெரிதும் ஈடுபாடு உண்டு. அதனால் 1936-ல் பிறந்த தம் குழந்தைக்குத் திருநாவுக்கரசு என்று பெயரிட்டு 'அரசு' என்று அன்போடு அழைத்தார். சங்க இலக்கியத்தில் அகப்பொருள் பாடல்களுக்கு அரிய விளக்கங்களை அள்ளி அள்ளி வழங்கும் அவர்கள் 1943 ஆம் ஆண்டு பிறந்த தம் இரண்டாவது மகனுக்கு 'நம்பி' என்று பெயர் வைத்தார். கடைசிப் பிள்ளைக்குப் (1949-ல் பிறந்தவர்) 'பாரி' என்று பெயரிட்டு மகிழ்ந்தார்.

* * *

1939 ஆம் ஆண்டு சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழாசிரியராகச் சேர்ந்தார். B. O. L. முதல் வகுப்பில் தேறியிருந்த இவருக்கு அப்பணியினைத் தந்தவர் சென்னைப் பல்கலைக்கழகத்தின் சிறப்புமிக்க முன்னாள் துணைவேந்தர் டாக்டர் இலட்சுமணசுவாமி அவர்கள் ஆவர். கல்வித்துறையில் இவர் மேன்மேலும் உயர அப் பெரியாரே ஊக்கமும் ஆக்கமும் தொடர்ந்து தந்தார். அவரைப் பல சமயங்களிலும் நன்றியோடு நினைத்து நெகிழ்ந்து அப்பா பேச நான் கேட்டிருக்கிறேன்.

* * *

'வினைச் சொற்களை'ப் பற்றி (Origin and development of verbs in Tamil) ஆய்ந்து 1944 ஆம் ஆண்டில் M. O. L. பட்டமும் 'பழந்தமிழ் இலக்கியங்களில் இயற்கை' (The treatment of Nature in Ancient Tamil Literature) என்ற பொருள் குறித்து ஆராய்ந்து 1948 ஆம் ஆண்டில் 'டாக்டர்' பட்டமும் பெற்றார்கள். தமிழ்த்துறையில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதன்முதலில் 'டாக்டர்' பட்டம் பெற்ற பெருந்தகை இவரேயாவர்.

* * *

அப்பா அவர்கள் பச்சையப்பன் பணியினை 1939 ஆம் ஆண்டில் ஏற்றபோது தமிழ்த்துறைத் தலைவராக இருந்தவர் மோசூர் கந்தசாமி முதலியார் அவர்கள் ஆவர். இவர் ஆங்கிலமும் அருந்தமிழும் பாங்குறப் பயின்றவர்; நகைச்சுவையோடு பேசுதலில் வல்லவர். அப்பா அவர்களிடத்தில் பேரன்பும் பெருமதிப்பும் வாய்ந்தவர். 'முதலியார்' என்று அன்பொழுக அழைப்பார். தமிழ்த் துறைப் பொறுப்பையெல்லாம் கவனிக்கச் சொல்வார். மதியம் உண்ண வீட்டிலிருந்து எல்லோருக்கும் சிற்றுண்டி கொண்டு வந்து தருவார். அப்பா அவர்களை 'மூலவர்' என்றும் குறிப்பிடுவார். அவரின்றித் தமிழ்த்துறையின் எப்பணிகளும் நடைபெறா. இவர்கள் வற்புறுத்தலின் பேரில் 'கீழ்ப்பாய்ச்சு' கட்டி, தலைப்பாகை அணிந்து, சந்தனப்பொட்டு இட்டு வருவார். திரு. வி. க. அவர்களிடத்தில் மோசூர் கந்தசாமி முதலியார் அவர்களுக்கு ஈடுபாடு இருந்ததில்லை. ஆயினும் இவ் இருவர்களிடத்திலும் நன்கு பழகியவர் அப்பா அவர்கள். வேற்றுமை மனப்பான்மையுடையார் இருவரிடையேயும் நட்பு காத்த நல்லவர் எங்கள் அப்பா. ஒருவர் பேசுவதை மற்றவரிடம் சொல்லிக் கலகம் விளைவிக்கும் பண்பு அப்பாவிடம் எந்த நாளும் இல்லை. வேண்டாதவர்களுக்கும் வேண்டியன செய்யும் அருள் உள்ளம் இவர்களிடம் என்றும் உண்டு.

* * *

கல்லூரி நாட்களில் அப்பா அவர்கள் கணக்கற்ற மாணவர்களுக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள். கல்லூரிச் சம்பளம் கட்டாமையினால் ஒரு மாணவர் பெயர் நீக்கப்பட்டிருந்தால், அதனை அறிய வந்தால் அந்த மாணவரும் அதனை அறியாவகையில், சம்பளத்தைக் கல்லூரி அலுவலகத்தில் தாமே கட்டி விடுவார். இதனைப் பின்னர் அம்மாணவர் அறிந்து அவரிடம் சென்றால், 'பணத்தைத் திருப்பித் தர

வேண்டுமே என்று கவலைப்படாமல் கல்வியைக் கவனி; வாய்ப்பு நேருமானால் திருப்பிக்கொடு; இன்றேல் அது குறித்துக் கவலைப்படாதே' என்பார். தேர்வுப் பணம் கட்ட முடியாத மாணவர்க்குத் தேர்வுப் பணம் கட்டுவார். நெடுந்தொலைவிலிருந்து கல்லூரிக்கு வரச் சைக்கிள் வசதி வேண்டும் எனும் நிலையுள்ள மாணவர்க்குச் 'சைக்கிள்' வாங்கித் தந்துள்ளார். இன்னும் இவ்வாறே பலப்பல கொடைகள். 'வலக்கை தருவது இடக்கைக்குத் தெரியக் கூடாது' எனும் சொல்லிற்கு இயைய, விளம்பரம் இன்றி உதவி செய்வார். அப்பா அவர்கள் வீடு மாணவர் பலருக்கு உணவுச்சாலையாக இருந்தது; பள்ளியறை (இரு பொருளிலும் பயிலுமிடம் — உறங்குமிடம்)யாக இருந்தது. அன்பிற்குரிய அம்மா அவர்கள் இன்முகத்தோடு விருந்து படைப்பார்கள். எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் மாணவர்களும் அங்கு உண்டு. இயல்பிலேயே முரட்டுத் தன்மை வாய்ந்த பலரும் அங்குப் பக்குவம் பெற்று இன்று பண்பாட்டின் பாதுகாவலர்களாக ஒளிவிட்டு நிற்கிறார்கள்.

* * *

அப்பா அவர்கள் காலையில் ஐந்து மணிக்கெல்லாம் படுக்கையைவிட்டு எழுந்து விடுவார்கள். வேப்பங்குச்சியை (பின்னாளில் பிரஷ்) எடுத்து வாயில் வைத்துக் கொண்டு தோட்டமெல்லாம் உலாவிச் செடி கொடிகளைப் பார்த்து வருவார்கள். காலைக்கடன் முடித்துச் சிறிது நேரம் தியானத்தில் — வழிபாட்டில் நிற்பார்கள். இராம கிருட்டிணரும், விவேகானந்தரும், அன்னை சாரதா தேவியும் இவர்கள் நினைவில் நிற்பர். திருநாவுக்கரசர் திருத்தாண்டகப் பாடல்களும், நம்மாழ்வாரின் அகப் பொருட் பாடல்களும், தாயுமான தயாபரரின் பராபரக் கண்ணி, கிளிக்கண்ணிப் பாடல்களும், இராமலிங்க வள்ளலாரின் அருட்பாக்களும், இராமதீர்த்தரின் மணி மொழிகளும் இவர் வழிபாட்டிற்குரிய பாடல்களாகும்.

● ● ●

காலையுணவு இட்டலி, தோசையாகும். ஏழரை மணிக்கெல்லாம் காலைச் சிற்றுண்டி கொள்வார். மதிய உணவு ஒரு மணிக்கு. முருங்கைக்காய் சாம்பார், உருளைக் கிழங்கு, அப்பளப்பூ கடலைப்பருப்புக் கூட்டு; நெய் ஊற்றிய மிளகுக் குழம்பு. வாழைப்பூ வடை இவற்றை விரும்பி உண்பார். முருங்கைக்கீரை 'சூப்' குடிப்பார். மலை வாழைப்பழம், பப்பாளிப்பழம், சாத்துக்குடிப்பழம், திராட்சைப்பழம், ஆப்பிள்பழம் இவற்றை நாள்தோறும் தம் உணவில் சேர்த்துக் கொள்வார். பின்னாளில் — நாற்பத்தைந்து வயதிற்கு மேல் இரவில் சப்பாத்தி சாப்பிடும் பழக்கத்தை மேற்கொண்டார். இரவு உணவை எட்டு மணிக்கு உண்பார். சொற்பொழிவு, மற்ற பல நாட்களில் இந்த நேரம் மாறுவதும் உண்டு.

காப்பி குடிப்பதே இல்லை. குளிர் பானங்களும் குடிக்க மாட்டார்.

எப்போதும் என்ன மழையாக இருந்தாலும் குளிர்ந்த நீரிலேயே குளிப்பார். காரில் பயணம் செல்லும்போது காவிரி ஆற்றைக் கண்டால், காரிலிருந்து இறங்கிக் குளித்து விட்டே செல்வார். இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் இரண்டாவது மாநாடு திருச்சியில் 1970-ல் நடைபெற்ற போது காவிரியாற்றுக்குக் காலை 5 மணிக்கே எழுந்து நண்பர் மாணவர் அணி ஒன்றனை அழைத்துச் சென்று குளித்து வந்ததனைப் பலரும் அறிவர். இதுபோன்றே இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்களின் நான்காவது மாநாடு 1972ஆம் ஆண்டில் திருவனந்தபுரத்தில் நடைபெற்றபோது, காலையில் எழுந்து அப்பா அவர்கள் எங்களையெல்லாம் அழைத்துக்கொண்டு அரபிக்கடலுக்குச் சென்று குளித்து வந்ததனையும் இன்னும் நெஞ்சம் மறக்கவில்லை. திருச்சி நண்பர் இராசகோபாலன் வீட்டில் தங்கும்போதெல்லாம் காவிரி நீரில் குளித்து அகமகிழ்வதனை அம்மா அவர்கள் சொல்லிச் சொல்லி இன்றும் அகங்குழைவார்கள்.

இருபது வயதில் தொடங்கிய காந்தியப் பற்று அப்பா அவர்களின் இறுதிநாள் வரை நிலைத்து நின்றது. நான்கு முழக் கதர் வேட்டியும், கைத்தறி வேட்டியுமே விரும்பி யணிவார். தலைமை சான்ற சிலர் வற்புறுத்தல் காரண மாக ஒரு சில காலமே வேறு உடை அப்பா அவர்கள் வாழ்வில் இடம் பெற்றிருந்தாலும், கல்லூரி நாட்களில் கீழே 'பி அன்ட் சி' (B & C) மில் வெள்ளை 'பேண்ட்'டும் (Pant), மேலே கதர்க்கோட்டும் அவர் உடைகளாக விளங்கின.

1961ஆம் ஆண்டு சூலைத் திங்கள் முதல் நாள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் — பேராசிரியர் பணியேற்ற பின் பெரும்பாலும் அவர் கீழ் உடை கருநிறம் வாய்ந்த மில் துணி 'பேண்ட்' ஆகவும், மேலே கதர் முழுக்கை 'ஸ்லாக்' (Slack) ஆகவும் இருந்தது. அகாடெமிக் கவுன்சில், செனேட் முதலிய சில முக்கியமான கூட்டங்களில் கலந்து கொள்ளும்போது 'கோட்' அணிவார். 'கோட்' ஒன்று எப்போதும் அலுவலக 'நிலைப்பேழை' (பீரோவில்) இருக்கும்.

தம்மை ஆளாக்கிய பச்சையப்பர் கல்லூரியினை இவர் என்றும் மறந்ததில்லை. 'பச்சையப்பர்' என்ற நூலும், பிற்காலத்தில் பச்சையப்பர் கல்லூரி வழியாகப் போகும் போதெல்லாம், கையால் வணங்கி விட்டு, நெஞ்சால் நினைந்து செல்லும் போக்கு இவர் நன்றியுணர்ச்சியினை நன்கு காட்டும்.

* * *

அப்பா எழுதிய நூல்கள் பல திறத்தன. நாவல், சிறு கதை, குழந்தை இலக்கியம், மொழிநூல், இலக்கிய ஆராய்ச்சி, கடிதங்கள் என்று பல துறை நூல்களை எழுதி யுள்ளார்கள். தொடக்கக் கால நூல்கள் திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பாவை, செந்தாமரை முதலியனவாகும். 'செந்தாமரை'க்கு முதலில் இட்ட

பெயர் 'முருங்கை மரம்' என்பதாகும். பி. ஓ. எல். (ஆனர்ஸ்) முதல் அணி மாணவர் பேராசிரியர் ம. ரா. போ. குருசாமி அவர்களே 'செந்தாமரை' என்ற தலைப்பினைத் தந்தார்.

* * *

மற்றொரு குறிப்பிடத்தக்க செய்தி, இவர்கள் அணிந்துரை பெற்றது திரு. வி. க. அவர்கள் ஒருவரிடம் மட்டுமே. 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' எனும் நூலிற்குப் பெற்றார். அந்நூலினைப் புரட்சி நூல் எனப் பாராட்டுவர் தமிழ்த்தென்றல் திரு. வி. க.

பி. ஓ. எல். (ஆனர்ஸ்) படித்த முதலணி மாணவர் நால்வர். அந்நால்வரும் இவர்தம் நான்கு நாவல்களுக்கு முன்னுரை — அறிமுகவுரை எழுதியுள்ளனர். 'அல்லி'க்குத் திரு. ம. ரா. போ. குருசாமி அவர்களும், 'கரித்துண்டு'க்குத் திரு சி. வேங்கடசாமி அவர்களும், 'அகல்விளக்கு'க்குத் திரு கா. அ. ச. ரகுநாயகன் அவர்களும், 'நெஞ்சில் ஒரு முள்'ளுக்குத் திரு. இரா. சீனிவாசன் அவர்களும் முன்னுரை எழுதியுள்ளனர். 'நூலிற்குப் பாயிரம் மாணவர் தரலாம்' எனும் நன்னூல் உரை. அப்பா அவர்கள் மாணவர்க்குத் தந்த அரிய வாய்ப்பால் விளக்கம் பெற்றது.

எண்பதிற்கு மேலும் நூல்களை எழுதிக் குவித்த அப்பா அவர்கள், தொடக்க நாளில் அம்மா அவர்களின் நகைகளை அடகு வைத்தே நூல்களை வெளிக் கொணர்ந்தார்கள் என்பதனைப் பாரி நிலைய உரிமையாளர் சீர்சால் செல்லப்பா அவர்கள் கண்ணீருடன் நினைவு கூர்கிறார்கள்.

புதிதாக மணமான பலருக்கும் வழிகாட்டும் ஆண் பெண் மனப்போராட்டங்களை விளக்கி நிற்கும் 'கள்ளோ காவியமோ' அச்சிடப்பட முடியாமல் ஒரு பதிப்பகத்தில் பல நாள் முடங்கிக் கிடந்தது. பதிப்பாளர் ஆணை பெற்றுத் தாமே முயன்று தேடிக் கையெழுத்துப்படியைக் கொண்டு

வந்து, பெண்ணாடம் புதுமைப் பிரசுரத்தின் மூலம் முதலில் வெளியிட்டார்.

சென்னை அரசாங்கப் பரிசினை இவர்தம் 'ஓவச் செய்தி', 'அரசியல் அலைகள்', 'கள்ளோ காவியமோ' ஆகிய மூன்று நூல்களும் பெற்றன.

'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்', 'மொழி நூல்', 'விடுதலையா' ஆகிய மூன்று நூல்களும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பாராட்டினைப் பெற்றன. 1962ஆம் ஆண்டில் சாகித்திய அகாதெமிப் பரிசான ரூபாய் ஐயாயிரத்தினை இவர்தம் 'அகல் விளக்கு' பெற்றது.

இவர் தொடக்க நாளில் எழுதிய 'திருக்குறள் தெளிவுரை' இதுவரை பல லட்சம் படிகளுக்குமேல் விற்று எல்லாக் காலப் பதிவினை (All time record) ஏற்படுத்தியுள்ளது. 'தமிழ் இலக்கிய வரலாறு', 'நல்வாழ்வு' ஆகிய இரண்டும் அண்மைக் காலத்தில் வெளிவந்தன.

* * *

இவர்தம் நூல்களிற் காணும் சிறந்த கருத்துகள் சில:

'நல்லவனாக இருந்தால் மட்டும் போதாது, வல்லவனாகவும் இருக்கவேண்டும் அல்லவா? நன்மை வன்மை இரண்டும் இருந்தால்தான் இந்த உலகில் வாழ்க்கை உண்டு' (தம்பிக்கு)

'அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலங் கழிக்காதே' (தங்கைக்கு)

'இன்பத்திற்குத் துணையாக வல்லவரை நம்பாதே. துன்பத்திற்குத் துணையாக இருக்க வல்லவரைத் தேடு. உறவானாலும் நட்பானாலும் காதலானாலும் இப்படித்தான தேடவேண்டும்' (அல்லி)

* * *

தமிழ்ப் பெரியார் திரு. வி. க. இவர்களைத் தமிழறிஞர், சீர்திருத்தக்காரர் என்று புகழ்கிறார். 1965ஆம் ஆண்டு நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போரில் மாநில அரசு மாணவர்களைக் கொடுமைப்படுத்தி வேட்டையாடுவதை நிறுத்த வேண்டும் என்று தந்தி கொடுத்தார். 'ஐந்தெழுத் தால் ஒரு பாடை என்று அறையவும் நாணுவர் அறிவுடை யோரே' என்ற அடிகளை மொழிநூல் வகுப்பில் ஒரு முறை படித்துக்காட்டித் தமிழ்நாட்டுச் சோற்றையும் பருப்பையும் நெய்யையும் உண்டு இப்படித் தமிழிற்குப் புறம்பாக ஒரு கை எழுதியதே என்று பேசினார். ஆரவாரம் காட்டாமல் அமைதியாகத் தொண்டாற்றும் நோக்கங் கொண்டவர்; கடமையுணர்வு நிறைந்தவர். மறைவதற்கு நான்கு நாட் களுக்கு முன்னர் தம் உடல்நிலையைச் சற்றேனும் பொருட் படுத்தாது 'கோப்புகள்' (Files) பலவற்றைப் பார்த்து முடித்தார். வேண்டியவர்கள் திருவாளர்கள் பெரி. தியாக ராசன், திரு ஒய். சத்தியமூர்த்தி, திரு கு. ராசவேலு முதலானோர் தடுத்தும் கேட்கவில்லை. மருத்துவ மனைக்குப் போகும்போதும் கடமையை நினைந்து மதுரைப் பல்கலைக்கழகப் பதிவாளர்க்கு 'அடுத்து நான் குறிப்பிடும் வரை கோப்புகளை எனக்கு அனுப்ப வேண்டா' என்று கடிதம் எழுதி அஞ்சலில் சேர்த்துவிட்டே சென்றார்.

• * •

இவர் எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகும் வழக்கம் உடையவர் இல்லை. குழந்தைகளுக்குக் காது குத்துதல், மொட்டையடித்தல் முதலான சடங்குகளை விரும்பு வதில்லை. திருமணம், சாவு தவிரக் காதுகுத்தல், மொட்டையடித்தல், கருவளர் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு வீட்டினர் செல்வதை விரும்புவதில்லை. சோப்புப் போட்டுக் குளிப்பதில்லை. ராகுகாலம், எமகண்டம் பார்ப்பதில்லை. சகுனங்களில் நம்பிக்கை கொள்வதில்லை.

• * •

1969 ஆம் ஆண்டு இவர்தம் திருவுருவப்படம் அந்நாள் தமிழ்மன்றத் தலைவரும், பின்னாளில் அவர்தம் டாக்டர் பட்ட ஆராய்ச்சி மாணவருமாகிய கவிஞர் மா. செல்வ ராசன், அவர்தம் நண்பர்கள் முயற்சியால் அப்பா அவர்கள் பணியாற்றிய பச்சையப்பர் கல்லூரியில் அந்நாள் தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அப்போது அவர்கள் கூறியது வருமாறு:

'டாக்டர் மு. வ. அவர்களுடைய கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்றவர்கள், மறுப்பவர்கள் என்று பிரித்துப் பார்க்க முடியாத வகையில் தமிழ்க் கருத்துக் கொண்ட அத்தனை பேரும் மிக இனிமையாகவும் எளிதாகவும் ஏற்றுக் கொள்ளத் தக்க முறையில் தம் முடைய கருத்துக்களைப் பக்குவப்படுத்தி, பதப்படுத்தி, பலருக்கும் நல்லவிதத்திலே புரியும்படிச் செய்து கருத்துக்களை அளித்துக் கொண்டு வருகின்ற ஒரு பெரும் எழுத்தாளர். டாக்டர் மு. வ. அவர்கள் தம்முடைய எழுத்தின் மூலம் பேச்சின் மூலம் தாமும் சிந்திப்பார். அவருடைய பேச்சையும் எழுத்தையும் பெற்றவர்கள் தாமும் சிந்திக்கத் தொடங்குகின்ற வகையில் அந்தப் பேச்சுக்கும் எழுத்துக்கும் தனிச் சிறப்பு இருக்கின்றது.'

எல்லோரும் இனிதே பாராட்டும் பண்பாளர் அப்பா அவர்கள். அவர்கள் பொன்னுடலுக்கு இறுதி மரியாதை செலுத்த, எல்லாக் கட்சியினைச் சேர்ந்த பெருந் தலைவர் களும், கல்வியாளர்களும், எழுத்தாளர்களும், மாணவ ஆசிரியருலகினரும் ஆட்சியாளரும் ஒருங்கு வந்திருந்ததே அவர்களின் வாழ்வினை வகையுறக் காட்டும்.

* * *

எழுபது ஆண்டுகள் வாழ்வேன் என்று கூறிய அப்பா இன்று இல்லை. அவர்கள் அனைவர் நெஞ்சிலும் நினைவிலும் நிறைந்து இன்று வழிகாட்டுகிறார்கள்.

* * *

IV

# 'தங்கைக்கு'—ஓர் ஆய்வு

டாக்டர் மு. வ. அவர்கள் நல்ல தூய சிந்தனையாளர். அவர் எழுதிய நூல்களைப் படிப்போர் அவர் அந் நூல்களில் தந்துள்ள கருத்துகளை ஏற்றுக்கொள்ளும் வண்ணம் புதிய சிந்தனைகளை அவர்கள் முன்வைப்பார். ஆரவார மற்ற அமைதி நடை. நுணுகி ஆராயும் மனம். எளிய தூய அறவாழ்வையே எழுத்தில் வற்புறுத்தும் திறம். தமிழ், தமிழர், தமிழ்நாடு எனும் துடிப்பு அவர் எழுத்து களில் எங்கும் காணலாம். காந்திய நெறிகளைப் போற்றி நிற்கும் போக்கும், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் தம் வாழ்வில், எழுத்தில் காட்டிய எளிமையும் பொதுமை யும் இவர் வாழ்விலும் படிந்திருந்தன.

மொழி, எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒரு கருவி யாகும் (Language is the vehicle of thoughts). கடிதங்கள் வாயிலாக ஒருவர் தம் மனத்தில் முகிழ்க்கும் எண்ணங் களை மற்றவர்க்குப் புலப்படுத்தும் போக்கு தொன்று தொட்டே இருந்து வருவது ஆகும். நேரு, மறைமலை யடிகளார், சீனிவாச சாஸ்திரி, அறிஞர் அண்ணா முதலானோர் மகளுக்கோ, தம்பிக்கோ என்று தாம் கூற வந்த கருத்துகளை அவர்களுக்குக் கூறுவது போன்று சமுதாயத்திற்கெனக் கடித இலக்கிய வாயிலாகப் புலப் படுத்தினர்.

கடித இலக்கியங்களாக டாக்டர் மு. வ. அவர்கள் படைத்த நூல்கள் மொத்தம் ஐந்தாகும். இத் துறையில் முதலாவதாக அவர் எழுதி வெளிவந்த நூல் 'அன்னைக்கு' என்பதாகும். இந்நூல் 1948 ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நூலில் எட்டு மடல்கள் மலர்ந்துள்ளன. அடுத்து, 1949 ஆம் ஆண்டில் வெளிவந்த 'நண்பர்க்கு' எனும் நூலில் ஒன்பது மடல்களும், 1949 ஆம் ஆண்டில் வெளிவந்த 'தம்பிக்கு' எனும் நூலில் எட்டு மடல்களும், 1950 ஆம் ஆண்டில் வெளிவந்த 'தங்கைக்கு; எனும் நூலில் எட்டு மடல்களும், அதே ஆண்டில் வெளிவந்த 'யான் கண்ட இலங்கை' எனும் நூலில் ஐந்து மடல்களும் அமைந்துள்ளன.

டாக்டர் மு. வ. அவர்கள் தம் டாக்டர் பட்ட ஆய்வேட்டினை 1948 ஆம் ஆண்டு ஜனவரி 30 ஆம் நாள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் சேர்ப்பித்தார்கள். அன்று சோர்வோடு வந்து வீட்டில் மாலையில் எந்த மின் விளக்குகளையும் போடாமல் ஒய்வு எடுத்துக்கொண்டிருக்கும்பொழுது, அவர்தம் வாழ்வில் விரும்பிப் பின்பற்றிய அண்ணல் காந்தியார் அவர்கள் டெல்லியில் ஒரு வழிபாட்டுக் கூட்டத்தில் சுடப்பட்டு மறைவெய்தினார் என்பதனைக் கேட்டுத் திடுக்கிட்டார். இந்த நிகழ்ச்சி அவர் மனத்தில் ஆழப் பாய்ந்தது. அவர்தம் படிப்பறையில் (Study Room), காந்தியார் குண்டுபட்டு இறந்து பொது மக்கள் பார்வைக்கு அவர் திருவுடலம் வைக்கப்பட்டிருந்த நிலையில் செய்தித்தாளில் வெளிவந்த அப் படத்திற்குக் கண்ணாடிச் சட்டமிட்டு வைத்திருந்ததனைப் பார்த்த நான், ''திடுக்கீடு விளைவிக்கும் இப்படம் ஏன்?'' என்று ஒருமுறை கேட்டேன். ''அறம் வளர்த்த, பொதுநலம் பேணிய நாட்டின் தந்தைக்கே இந்நிலை. எனவே, வாழ்வில் ஒவ்வொருவரும் அயராது தம் வாழ்நாளின் ஒவ்வொரு நாளிலும் கடமையுணர்வுடன் தாம் ஏற்ற பணிகளை இனிதேயாற்றி வரவேண்டும் என்பதனை அப்

படம் தமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கிறது'' என்று மறுமொழி இறுத்தார்.

அதே ஆண்டில் கடித இலக்கியத் தொடர் எழுதத் தொடங்கினார். அவர் எழுதிய நூல்களில் இதுகாறும் பத்து லட்சம் படிகளுக்குமேல் விற்பனையாகியுள்ள 'திருக்குறள் தெளிவுரை' யினையடுத்து, அதிகப்படிகள் விற்றுள்ளவை அவர் கடித இலக்கிய நூல்களே. இதனை அவரே குறிப்பிட்டு நான் கேட்டிருக்கிறேன். 'சின்னஞ்சிறு நூல்கள்; விலைமலிவு; திருமணத்திற்கு அன்பளிப்பாக வழங்க ஏற்ற நூல்கள்' என்னுந் தகுதிகளும், அந் நூல்களில் இடம் பெற்றிருக்கும் நல்ல வாழ்வியற் கருத்துகளும் இந் நிலைக்குக் காரணங்களாக அமையலாம். மேலும் அவரின்கீழ் டாக்டர் பட்ட ஆய்வு செய்த மாணவர் கவிஞர் திரு. மா. செல்வராசன் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழக அண்மைக் கால வெளியீடான 'இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்' எனும் கருத்தரங்கக் கட்டுரை நூலின்கண் அமைந்துள்ள 'டாக்டர் மு. வ. வின் கடிதங்கள்' எனும் தம் கட்டுரையொன்றில் ''உலகளாவிய தலைசிறந்த சிந்தனையாளர் என மு. வ. வை உறுதிப் படுத்துகிற அதே நேரத்தில் தமிழினம், தமிழ்மொழி, தமிழ்நாடு என்ற மூன்று பெருமிதங்களையும் துறக்க விரும்பாதவர் அவர் என்பதையும் உரைத்தாக வேண்டும். அந்த உணர்ச்சிகள் இந்த ஐந்து நூல்களிலும் தலைசிறந்து விளங்குகின்றன'' என்று குறிப்பிட்டுள்ளார்.[1] ஆம்; இது உண்மையே! இந் நூல்களைப் படிக்கும்பொழுது எவரும் 'நாம் தமிழர்; நம் மொழி தமிழ்; நம் தாயகம் தமிழ்நாடு' என்ற பெருமித உணர்ச்சியினைப் பெறுவர் என்பது திண்ணம்.

இனி, அவர் எழுதி 1950ஆம் ஆண்டில் வெளி வந்துள்ள 'தங்கைக்கு' எனும் நூலே, அவர்தம் கடித இலக்கிய வரிசை நூல்களில் முடிமணியான நூலாக யான் கருதுவதனா .

முதலாவதாக என் ஆய்வினுக்கு அந் நூலினை எடுத்துக் கொள்ள முன்வந்தேன். அவர் எழுதிய நூல்களில் எந் நூலினை எவரொருவர் படிக்காமற் போனாலும், இந் நூலினைப் படித்துப் பார்க்க வேண்டும் என்றும் கூறுவேன். திருமணம் ஆன ஒரு பெண், தன் வாழ்க்கையில் வழுக்கி விழாமல், தன் வாழ்வை வளப்படுத்தி வாழ வகைசெய்யும் முறையில் இந்நூல் அழகுற அமைந்து பொலிகின்றது.

இனி, நூலின்கண் நுழைந்து, நூலுள் பொதுளும் நுண் மாண் நுழைபுலக் கருத்துகளைக் காண்போமாக.

## நூலின் நோக்கம் — முன்னுரை — நூலின் அமைப்பு

'அன்புள்ள தங்கை' என்று தொடங்கி, 'உன் அன்புள்ள அண்ணன் வளவன்' என்று நூலில் அமைந்துள்ள எட்டு மடல்களும் முடிகின்றன. 80 பக்கங்கள் கொண்ட இந் நூல் முழுதும் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ' மகளிர் போற்றிப் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள் யாவை என்பது நன்கு உணர்த்தப்படுகின்றது. நேருக்கு நேர் நின்று உணர்ச்சியுடன் பேசிக் கொள்வது போன்று இக் கடிதங்கள் அமைந்துள்ளன.

## இந்நூலில் இடம்பெறும் அல்லது குறிப்பிடப்பெறும் மாந்தர்

காந்தியடிகளும் கஸ்தூரிபா அம்மையாரும் பலவிடங் களிலும் குறிப்பிடப் பெறுகிறார்கள்.[2] மற்றும் குறிப்பிடப் பெறுவோர் குயூரி அம்மையார்,[3] பக்கத்துத்தெரு வழக்கறிஞர் மகள் கனகா,[4] எச். ஜி. வெல்ஸ்ஸின் மனைவி[6], நண்பர் அருளப்பர்[5], நண்பர் முருகையா[7], தேவசுந்தரி[8], தேவசுந்தரியின் தமக்கை,[9] நண்பர் அருளப்பரின் தம்பி[10], நண்பன் ஒருவன்[11], அண்ணிக்குத் தெரிந்த மனைவி[12] முதலியவர்களோடு 'ஆ' என்று முதல் எழுத்தால் குறிக்கப்பெற்ற ஒரு பெண்ணும் இடம் பெறு கின்றனர்.[13] இவர்களன்றி அண்ணியும்[14] பெரியம்மாவும்[15] அடிக்கடி குறிப்பிடப்பெறுகின்றனர்.

**பெண் எவ்வாறு இருக்க வேண்டும்?**

“இளமையிலிருந்தே நீ அறிவும் திறமையும் அன்பும் பணிவும் உள்ள பெண்ணாக விளங்கியதைக் கண்டிருக்கிறேன் அல்லவா?”[16]

“பிறரிடம் கொள்ளும் விருப்பு வெறுப்புக்களில் பிடிவாதம் காட்டாதே. இதில் பிடிவாதம் பெருந்தீங்கு உண்டாக்கும். ‘பெண்கள் பிடிவாதமானவர்கள்; நினைத்ததை முடிக்காமல் விடமாட்டார்கள்’ என்று பழிச்சொல் இருக்கிறது. அதை மாற்றிவிடு. அன்புக்காக விட்டுக்கொடுப்பவர்கள் பெண்கள் என்பதை உன் வாழ்வில் புலப்படுத்து.”[17]

காலத்திற்கேற்பப் புதிய நோக்கில் பெண்களைப் பார்த்து, பழமையிற் கொள்ள வேண்டியனவற்றைக் கொண்டு, புதுமையில் போற்றி நிற்க வேண்டுவனவற்றையும் டாக்டர் மு. வ. அவர்கள் விடாது குறிப்பிடுகின்றார் என்பதனை நூலின் பலவிடங்களிலும் காணலாம்.

**இல்வாழ்க்கை**

கணவன் மனைவியர் இணைந்து வாழும் இல்வாழ்க்கை குறித்து டாக்டர் மு. வ. அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

“இல்வாழ்க்கை என்பது முன்காலத்தில் ஒரே பொருளை விற்கும் வெல்ல மண்டிபோல் இருந்தது. நாகரிகம் பல வகையில் கடமைகளைப் பெருக்கியுள்ள இந்தக் காலத்து இல்வாழ்க்கை பலசரக்குக் கடைபோல் ஆகிவிட்டது. பல பொருள்களையும் கவனித்து விற்கும் திறமை இல்லாவிட்டால் பலசரக்குக் கடையில் வாழ முடியுமா? நாம் பலருடைய வாழ்க்கையில் கலந்திருக்கிறோம். பலர் நம்முடைய வாழ்க்கையில் கலந்திருக்கிறார்கள். ஆகையால்

கடமைகள் பலவாகிவிட்டன. இந்தக் காலத்தில் ஒரு இன்பத்தையோ ஒரு குறையையோ எண்ணித் தலை மேல் கை வைத்து உட்கார்ந்து விட்டால், யாரும் முன்னேற முடியாது. அவர்களை நம்பியவர்களும் கடைத்தேற முடியாது. நன்மை தீமை, இன்பம் துன்பம், குணம் குற்றம், நிறை குறை எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, எதற்கும் தயங்கி நிற்காமல் ஓடுகின்ற கடிகாரம் போல் கடமைகளை அஞ்சாமல் செய்கின்றவர்கள்தான் இந்தக் காலத்தில் தலைமைப் பதவிக்குத் தக்கவர்கள். குடும்பத் தலைவியும் இப்படி இருந்தால்தான் வாழ்வு நன்றாக நடக்கும். யாராவது தன்னைக் குறை கூறினார்கள் என்றால், அதையே எந்நேரமும் எண்ணிக்கொண்டிருப்பது, யாராவது நோயால் வருந்துகிறார்கள் என்றால், எந் நேரமும் அவர்களையே நினைந்து உருகுவது; இவ்வாறு வாழ்வது கூடாது.''[18].

''பிறர் உள்ளம் அறிந்து நடப்பது ஓர் அரிய கலை. பெண்ணுக்கு அது கட்டாயம் வேண்டும் என்று நான் எண்ணும்போது, அந்தக் கலையால் வாழ்க்கையில் வெற்றி பெற்ற சிலர் நினைவுக்கு வருகிறார்கள்[19]''......என்று கூறி,

''இந்த அறிவுரைக்கும் ஓர் எல்லை உண்டு, அதை மறந்துவிடாதே'' என எச்சரித்துப் பின்வருமாறு கூறுகின்றார்:

''அதாவது, உள்ளம் அறிந்தொழுகும்போது, ஒரு துறையில் கணவன் விருப்பத்திற்கு முற்றிலும் இணங்கி நடப்பது குடும்பத்திற்குத் தீமையாக இருந்தால், அப்போது இந்த அறிவுரையைக் கடந்து வாழவேண்டும். கணவனுக்குக் கத்தரிக்காய் விருப்பம் என்றால், அதையே கறியாக்கலாம்; கத்தரிக்காய் வறுவல் விருப்பம் என்றால் அதை அவ்வாறே செய்யலாம். ஆனால் அதுவே அவருடைய உடல் நலத்திற்கு ஆகாததாக இருந்தால், அப்போதும் அதைச் செய்யலாமா? கூடாது. உணவைப்போலவே, மற்றத்

துறைகளிலும் கணவனுக்கு இயைந்து நடப்பது நல்லது. ஆனால் குதிரைப் பந்தயம் அவருக்கு விருப்பமானதாக இருந்தால் என்ன செய்வது? கிண்டி விளையாட்டால் உள்ளதெல்லாம் இழந்து ஓட்டாண்டியாகிக் குடும்பம் அழிவதைவிட, அவருடைய மனத்தை மகிழ்விக்காமல் நின்று வெறுப்பைத் தேடிக் கொள்வதே நல்லது அல்லவா? அப்போதும் அவரைக் கிண்டிக்கு அனுப்பாதபடி அன்பால் அவர் மனத்தை மாற்றுதல் நல்லது; முடியாதபோது அவருடைய வெறுப்பை வரவேற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றுவது கடமை அல்லவா? இல்வாழ்க்கைக்காகப் பொறுமை; ஆனால் அந்தப் பொறுமையால் இல்வாழ்க்கை கெடுவதானால்—? உடம்புக்காக உணவு; அந்த உணவால் உடம்பு அழிவதானால், பட்டினியைப் போற்ற வேண்டாமா?''.[20]

## பெண்ணின் வளர்ச்சிப் பெருமை

''ஒரு பெண் பெற்றோரின் மகளாக உள்ள வரையில் உரிமை மிகுந்தவளாக அரசிளங்குமரியாகவே வாழ்கிறாள். கணவனின் மனைவியாக வாழத் தொடங்கியதும் அரசியாகவும் அடிமையாகவும் மாறி மாறி வாழ்வதுபோல் விளங்குகிறாள். தான் பெற்ற மக்களின் தாயாக வாழும் போது எல்லா உரிமைகளையும் உதறிவிட்டு அன்புருவாக உயர்கிறாள். பிடிவாதம் செய்யும் ஒரு பெண்ணை இயற்கை இப்படி மாற்றி மாற்றித் தியாகத்தின் திருவுருவாகச் செய்கின்றது.''[21]

பெண்ணின் படிப்படியான வாழ்வியல் வளர்ச்சியினை இவ்வாறு திறம்படக் குறிப்பிடுகின்றார்.

## கற்பு பற்றிய கருத்து

''வாழ்நாள் வரை மாறாத அன்புடன் ஒருநெறியாக வாழும் வாழ்க்கையைத்தான் முன்னோர்கள் கற்பு என்று சொன்னார்கள்.''[22]

'திட்ப நுட்பம் செறிந்தன சூத்திரம்' என்பர்.[23] கற்பின் இலக்கணம் காட்டும் இத் தொடரினை 'நூற்பா'வாகக் கொள்ளலாமன்றோ?

## முன்னோர் கண்ட நன்னெறி

இல்வாழ்க்கை இனிதே நடைபெறுதற்கு முன்னோர் வகுத்துச் சென்றுள்ள வாழ்வியல் அமைப்பினைப் பின் வருமாறு வகையுறப் போற்றியுள்ளார் டாக்டர் மு. வ. அவர்கள்.

"அந்தக் கால நிலையை ஒட்டி இல்வாழ்க்கை சீராய் நடைபெறுவதற்காக முன்னோர் சில திட்டங்கள் அமைத்திருந்தனர். ஆண் உடல்வலி மிகுந்தவன்; ஆகையால் அவன் வெளியுலகில் அலைந்து பொருள் தேடுக என்று அமைத்தனர். பெண் உடல்வலி குறைந்தவள்; ஆக்க வேலையில் ஆர்வம் நிறைந்தவள்; ஆதலால் வீட்டிலிருந்து அமைதியைக் காத்து வருக என்று அமைத்தனர். அலைவுக்கு ஏற்றது ஆண் உடல், அமைதிக்கு உரியது பெண் உடல் என்று அவர்கள் வகுத்த முறை இயற்கையோடு இயைந்த முறையாக இருந்தது. அதற்கு ஏற்றவாறே ஆண் வயதில் மூத்தவனாக இருக்குமாறும் பெண் இளையவளாக இருக்குமாறும் ஏற்படுத்தினர். இந்த ஏற்பாட்டில் தவறு காண முடியாது. இன்றைக்கும் உலகில் பெரும்பான்மையோர் இதையே போற்றி வருகின்றனர்."[24]

மேலும் அவர் குறிப்பிடுவதாவது :

> "முன்னோர்களின் அறிவுரை என்ன? உரிமைப் பேச்சுப் பேசுவதில் பயன் என்ன?"[25]

## பிரிவு வேண்டும்

"நம் நாட்டில் திருமணமான தொடக்கத்தில் மனைவி கணவனோடு இருக்கக் கூடாது என்று பிரிக்கும் வழக்கம் ஒன்று இருந்து வருகிறது. அதுவும் இவ்வகையான

நன்மைக்கே என்று எண்ணுகிறேன். அறிஞர் எச். ஜி. வெல்ஸ் வாழ்க்கையில் ஒரு குறிப்பு—அவரே எழுதிய குறிப்பு—ஒன்று என் நினைவுக்கு வருகிறது. அவருடைய இரண்டாம் மனைவி ஒருமுறை வாழ்க்கையில் மிகச் சலித்தபோது, கணவருக்குச் சொல்லி அனுமதி பெற்றுத் தனியே பிரிந்து சில வாரங்கள் வாழ்ந்தாராம். அப்போது சென்று தங்கியிருந்த இடத்தையும் கணவருக்குத் தெரிவிக்கவில்லையாம்'',[26] என்று ஓர் அருமையான வாழ்வியல் நடப்பு உண்மையினைக் குறிப்பிட்டு, ''அன்போடு கடமையைச் செய்தல் முதலில் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் மனத்தின் பேயாட்டத்திற்கு இடம் இருக்காது. தவற வாய்ப்பு நேராது; நேர்ந்தாலும் விழிப்போடு தற்காப்புத் தேடிக் கொள்ளலாம்'',[27] என்று கூறி, அன்பும் கடமையுணர்வும் வாழ்விற்குத் தேவை என வற்புறுத்துகின்றார்.

## அறிவுரைகள்

வாழ்க்கை வெற்றி பெறுவதற்குக் கீழ்க்காணும் அறிவுரைகளை நூற்கண் ஆங்காங்கே பொதிந்து தந்துள்ளதனைக் காணலாம்:

- ''திருவள்ளுவரின் அறத்துப்பால் நெறி — அதாவது, காந்தியடிகளின் எளிய தூய நெறி; இதை நம்பினால் எவ்வளவோ தொல்லைகளை எளிதில் தீர்த்துக் கொள்ளலாம். தனி வாழ்க்கையைப் பொறுத்தமட்டில்தான் இதைச் சொல்கிறேன். நெறியை முழுவதுமாக நம்பாவிட்டாலும், ஆடம்பரமற்ற ஆணவமற்ற அமைதியான வாழ்க்கை நல்லது என்பதையாவது நம்புவார்களானால் போதும். ஆடம்பரம், ஆணவம், ஆரவாரம், இவைதான் இந்தக் காலத்து நாகரிகத்தின் உயிர் நாடிகள். தனி வாழ்க்கையில் மனம் பண்படுவதற்கு இவைகள் தடைகள் என்பது என் கருத்து.''[28]

"தனக்கென்று மிகுதியாகப் புகழ் தேடிக் கொள்வது பொல்லாத தன்னலம்; தன்மானத்தைப் பெரிதாக எண்ணுதல் அதைவிடக் கொடிய தன்னலம். கணவன் மனைவி என்று இருவர் சேர்ந்து வாழத் தொடங்கிய பிறகு, தனியே புகழ் தேடுவதும் தனியே மானம் போற்றுவதும் தவறானவை."[29]

"கணவன் புகழைக் கண்டு மகிழும் மனம் இல்லாத மனைவி, மனைவியின் மானத்தைத் தன் மானமாகக் கருதாத கணவன் — இவர்கள் சேர்ந்து வாழத் தகுதி உடையவர்களா? உடம்பு, பணம் இவற்றில் சுற்றத்தாரும் அயலாரும் தலையிடுவது குறைவு. ஆனால் புகழ் மானம் ஆகிய துறைகளில் எல்லாரும் (தாய்வீட்டார், மாமி வீட்டார், நண்பர்கள் உட்பட எல்லாரும்) தலையிட்டு அவரவர்கள் பங்குக்குத் தூபம் போட்டு இல்வாழ்க்கைக்குத் தீமை செய்வதை நீ எங்கும் பார்க்கலாம். இந்தத் தொல்லைகள் இல்லாமல் அமைதியாக வாழ வழி சொல்லட்டுமா? புகழ் மானம் ஆகியவற்றையும் ஆடம்பரப் பொருள்களாகக் கருதி ஒதுக்கி எளிய வாழ்க்கையை நாடு. ஒழியட்டும் அந்த மயக்க உணர்ச்சிகள்!"[30]

## எளிய வாழ்வின் ஏற்றம்

"எளிய வாழ்க்கை வாழ்வது சிறந்த அறம்"[31] என்றும், "பாவங்களில் பெரிய பாவம், குற்றங்களில் முதல் குற்றம் ஆடம்பர வாழ்க்கைதான்"[32] என்றும் குறிப்பிடுகின்றார். விபசாரம் கொள்ளை கொலையினும் ஆடம்பர வாழ்க்கை தீதென்பதனைக் காட்ட, "விபசாரம் கொள்ளை கொலை முதலியன ஒரு சிலரைத்தான் அழிக்கின்றன. ஆனால் ஒரு சிலருடைய ஆடம்பர வாழ்க்கை எத்தனையோ ஏழை மக்களின் அமைதியான வாழ்க்கையைப் பாழ்படுத்தி அல்லல் விளைக்கின்றது"[33] என்கிறார்.

## ஆசிரியர் கூற்று

சிலவிடங்களில் ஆசிரியர் தாமே நேர்நின்று அறவுரை பகர்கிறார்.

(அ) "ஏழை மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துதல், உணவு உடை தொழில் கல்வி ஆகிய அடிப்படைத் தேவைகளை எல்லோர்க்கும் அமைத்துத் தருதல் இவைகளைச் செய்யக் காலம் ஆனாலும் ஆகட்டும். போட்டிக்கும் பூசலுக்கும் குறைகளுக்கும் குற்றங்களுக்கும் வழி அமைத்துத் தருகின்ற இந்த ஆடம்பரங்களையாவது தடுக்கலாமே! இதற்கு ஒரு சட்டம் பிறப்பிக்க ஒருவர் துணிவாரானால், அவரைத்தான் நாட்டின் முதல் தொண்டர் என்று நான் போற்றுவேன்."[34]

(ஆ) "எந்த அளவிற்கு ஆடம்பர ஏணியில் ஏறி நிற்க முடியும் என்றுதான் பெண்கள் முயல்கின்றார்கள். ஆடம்பரப் போக்கு இல்லையானால், தங்களுக்கு உலகத்தில் மதிப்பு இல்லை என்று எண்ணும் தாழ்வு மனப்பான்மை பெண்கள் பலரிடம் இயல்பாக உள்ளது. இதுதான் உண்மையான பிற்போக்கு என்பது என் கருத்து."[35]

(இ) அழகைக் காக்கும் வழிகள்: முரட்டு உழைப்பும் முரட்டு உணவும் அழகுக்குப் பகை என்பதோடு, இயைபு இல்லாமல் உடல் பருத்து வளர்வதும் அழகுக்குப் பகை என்று கூறி, அதனைக் களைய "உழைப்பு இல்லாமல் இருக்கக்கூடாது, களைப்பு உண்டாகுமாறு உழைக்கக் கூடாது, தசைநார் திரட்சி பெறுமாறு வன்மையான பயிற்சிகள் செய்யக்கூடாது. குடலில் ஊறிப் புளிக்கும் நிலையை வளர்த்துக்கொள்ளலாகாது. மென்மையான சுவையுள்ள உணவுகளை அளவுபடுத்தி உண்ண வேண்டும். மந்தப் பொருள்களை மிகுதியாக உண்ணலாகாது"[36] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## ஆசிரியரின் உளநூல் நுட்பம்

ஆசிரியர் பிறர் உள்ளத்தினை ஊடுருவிக் காணும் நுட்பம் வாய்ந்தவர். நாவலாசிரியர் தாம் படைக்கும் கதை மாந்தர்தம் உள்ளத்து உணர்வுகளைத் தாமும் உற்றும் பெற்றும் நிற்க வேண்டும். தலைசிறந்த சிந்தனையாளரும், கல்வியாளரும், நாவலாசிரியருமான டாக்டர் மு. வ. அவர்கள் தம் வாழ்வில் குழந்தைகளோடு பேசி மகிழ்வதில், விளையாடுவதில் ஆர்வம் மிகக் காட்டியவர். தம் வாழ்நாளின் இறுதி நாட்களில் கூட இப்பண்பினைத் துறக்கவில்லை என்பதற்குச் சான்றுகள் பலவுண்டு. குழந்தை பற்றி எழுதும்பொழுது அவரும் குழந்தையாகி விடுவார். 'குழந்தை' என்றே ஒரு நூலும் அவர் எழுதியிருப்பதும் இவ்வுண்மையினை உணர்த்தும். 'குழந்தை மொழி' என 'மொழி வரலாறு' எனும் நூலில் அவர் அமைத்துள்ள ஒரு கட்டுரையினைக் காண்க.

பெண்கள் குழந்தைகளிடம் பழகும் முறையினைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

''குழந்தைகளுக்கு அறநூல்களைத் திணிப்பதைவிட, அறிவுரைகளைக் கூறுவதைவிட, அவர்கள் பின்பற்றத் தக்க வழியில் நாம் வாழ்வதுதான் நல்லது என்று உளநூல் தெளிந்த அறிஞர்கள் கூறுவார்கள். அறவுரைகளும் அறிவுரைகளும் வற்புறுத்தி ஊட்டும் உணவு போன்றவை; அவை நன்றாகச் செரிப்பதில்லை. பெரியோரின் நடக்கை அப்படி அல்ல; குழந்தைகள் தாமே விரும்பி உண்ணும் பழம் போன்றது அது. அது எளிதில் உள்ளத்தில் பதிந்து விடும் என்பார்கள். ஆகவே, பெண்கள் குளிர்ந்த உள்ளத்தோடு மலர்ந்த முகத்தோடு இனிய சொற்களோடு குழந்தைகளிடம் பழகுவார்களானால், அதுவே குழந்தைகளுக்குக் கற்பிக்கும் சிறந்த கல்வியாகும். அதுவே பெரிய தொண்டு; எத்தனையோ பேரைத் திருத்தும் ஒப்பற்ற

தொண்டு; பத்திரிகைகளும் கட்சிகளும் புகழ வேண்டாத அரிய தொண்டு.''[37]

### காந்தியும் கஸ்தூரிபாவும் போற்றப்பெறல்

அண்ணல் காந்தியடிகளாரிடத்தும், அன்னை கஸ்தூரிபா அவர்களிடத்தும் தாம் கொண்ட ஈடுபாட்டினை ஆசிரியர் பின்வரும் பகுதியால் புலப்படுத்துகின்றார்:

''காந்தியடிகள் இந்த நாட்டில் எவ்வளவு பெரிய போராட்டம் எத்தனை முறை நடத்தியிருக்கிறார்! வரலாற்றில் அதற்கு இணை இல்லை. ஆயினும் எவ்வளவு தெளிவும் துணிவும் அவருக்கு இருந்தன. சத்தியத்திற்காக அஹிம்சைக்காக நாட்டின் விடுதலையையும் பொருட் படுத்தாதிருக்கத் துணிந்த நெருக்கடிகள் பல; நாட்டின் விடுதலைக்காகத் தம் அமைதியையும் குடும்ப நன்மையை யும் கைவிடத் துணிந்த நெருக்கடிகள் கண்டு, உடனுக்குடன் துணிந்து செயலாற்றிய வீரருள் வீரர் அவர்.''[38]

''நாம் குடும்பத்தோடு பூனாவுக்குப் போயிருந்தபோது ஆகாகான் அரண்மனையை அடுத்த பூங்காவில் கஸ்தூரிபா வின் சமாதியின் அருகே இருந்து உருகியது உன் நினைவில் இருக்கும். அப்போது அப்பா அம்மாவை நோக்கிச் சொன்ன சொற்கள் நினைவில் இருக்கின்றனவா? ''இந்த அம்மாவின் கணவர் காந்தியடிகள் உலகத் தலைவர். கணவரின் வழியைக் கண்மூடிப் பின்பற்றிய உத்தமி இவர். இந்த அம்மாவைப் போல் எளிய வாழ்க்கை வாழ எந்தப் பெண்ணாலும் முடியாது. கணவர் உலகத் தலைவர். உலகத் தலைவரின் மனைவி, பருத்திப் புடைவையும் சங்கு வளையலும் தாலியும் தவிர, எந்த ஆடம்பரமும் அறியாமல் வாழ்ந்து விட்டு மறைந்தார்'' என்று அப்போது அப்பா சொன்ன சொற்கள் இன்னும் என் செவியில் ஒலிக் கின்றன.''[39]

### திருவள்ளுவர் பெருமை

திருவள்ளுவரிடத்து டாக்டர் மு. வ. அவர்கள் காட்டிய பெருமதிப்பு அவர் எழுதிய ''திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்'' எனும் நூலால் விளங்கும்.

''உலகமெல்லாம் போற்றும் மருத்துவர் ஒருவர் சொல்லும் அறிவுரை என்று தயங்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும். அப்படி உலகம் போற்றும் மருத்துவர் — மன நோய் மருத்துவர் — திருவள்ளுவர். அவர் சொல்கிறார்: ஒப்பு அல்லாதவர்களிடத்தும் தோற்றுப் போவதே சான்றோரின் தன்மை என்கிறார். அவருடைய அறிவுரையைக் கண்மூடித் தன்மையோடு ஏற்றுக் கொள்வதில் தீமை ஒன்றும் இல்லை. பல தலைமுறைகளாக உலகம் பின்பற்றி நன்மை கண்டு நற்சான்று அளித்துப் போற்றிய முறை அது. ஆகையால் முன்னும் பின்னும் எண்ணாமல் அந்த முறையைப் போற்றுவது நல்லது.''[40]

மேலும், எண்பது பக்கங்கள் கொண்ட இந்நூலில் பின் வரும் ஏழு குறட்பாக்களின் முதல் அடி தக்க இடங்களில் எடுத்தாளப் பெற்றிருக்கக் காணலாம்.

'அன்பின் வழிவந்த கேண்மை'[41]

'ஊடலில் தோற்றவர் வென்றார்'[42]

'இளைதாக முள்மரம் கொல்க'[43]

'வேண்டாமை அன்ன விழுச்செல்வம்'[44]

'வேண்டின் உண்டாகத் துறக்க'[45]

'செவிகைப்பச் சொற்பொறுக்கும்'[46]

'யாகாவா ராயினும் நாகாக்க'[47]

### பழமொழிகளைக் கையாளல்

முன்னைப் பழமையையும் போற்றிப் பின்னைப் புதுமையையும் ஏற்றுக்கொண்டு வாழ்வு நடாத்தியவர்

மு. வ. அவர்கள். தம் நூலில் பழமொழிகளைக் கையாண்டு தாம் கூறவந்த கருத்துகளை அரண் செய்துள்ளார். அவர் இந்நூலில் ஏழு திருக்குறள்களை எடுத்தாண்டுள்ளது போன்றே ஏழு பழமொழிகளை எடுத்தாண்டுள்ளார். அவை வருமாறு :

'புதிய துடைப்பம் நன்றாகப் பெருக்கும்'[48]

'பழகப் பழகப் பாலும் புளிக்கும்
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்'[49]

'பூசனிக்காய் போகுமிடம் புலம் தெரியாது
கடுகு போகுமிடத்திற்குத் தடிகொண்டு
திரிந்தானாம்'[50]

'சுண்டைக்காய் கால் பணம் சுமைக்கூலி முக்கால்
பணம்'[51]

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்'[52]

'பொறுத்தவர் பூமி ஆள்வர்'[53]

'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை'[54]

## கண்ணகியின் நிறையும் குறையும்

இலக்கியமே வாழ்வெனக் கொண்ட மு. வ. அவர்கள் இளங்கோவடிகள் இயற்றிய சீர்சால் சிலப்பதிகாரக் காப்பியத்தில் நெஞ்சம் தோய்ந்து ஈடுபட்டவராவர். கண்ணகியின் நிறையினைப் பின்வருமாறு பாராட்டுகின்றார் :

"நீ யார் மரபில் வந்தவள் என்று எண்ணிப் பார். கணவனுடைய தவறான வாழ்க்கையைக் கடிந்து கூறாமல், வெறுத்துப் பகைக்காமல், பல ஆண்டுகள் பொறுத்திருந்த கண்ணகியின் மரபில் வந்தவள் நீ. கண்ணகி சில நாட்கள் பொறுக்கவில்லை; சில ஆண்டுகள் பொறுக்கவில்லை; பல ஆண்டுகள் பொறுத்த பெருமனம் படைத்தவள்.

கணவன் தவற்றை அவள் மறக்கவில்லை; அஞ்சி அடங்கி விடவில்லை. பெருமனத்தோடு பொறுத்திருந்தாள். அதைக் கடிந்து கூறுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கும் என்று காத்திருந்தாள். கணவனே மனம் மாறி இரங்கும் நிலை வரும் வரையில் காத்திருந்தாள். அந்த நிலை வந்ததும், ''போற்றா ஒழுக்கம் புரிந்தீர்'' எனக் கடிந்துரைத்தாள். இத்தகைய பெருமனம் இருந்த காரணத்தால்தான், ஒரு துறவியின் உள்ளத்தில் கோயில் கொள்ள முடிந்தது; அங்கிருந்து ஒரு காவியக் கோயிலில் வாழவும் முடிந்தது.'' 55

''மனித மனம் இப்படித் தியாகம் செய்பவர்களையே என்றும் விரும்பும். அது இயற்கை. எவ்வளவு உரிமை நாட்டம் உடையவனாக இருந்தாலும், ஒரு வியாபாரி தனக்கு இயைந்து நடப்பவனையே கணக்குப்பிள்ளையாக வைத்துக் கொள்ள விரும்புகிறான். எவ்வளவு முற்போக்கு உடையவனாக இருந்தாலும், ஒரு பத்திரிகை ஆசிரியன் தனக்காகத் தியாகம் செய்யக் கூடியவனையே துணையாசிரியனாக வைத்துக் கொள்ள விரும்புகிறான். எவ்வளவு சீர்திருத்தக்காரனாக இருந்தாலும், ஓர் அரசியல் தலைவன் தனக்காகச் சொந்தக் கொள்கைகளை விட்டுக் கொடுக்கக் கூடியவனையே தன் செயலாளனாக வைத்துக் கொள்ள விரும்புகிறான். இவ்வாறே ஒவ்வொரு துறையிலும் மனிதன் தனக்குத் துணையாக ஒருவனை நாடும்போது, கண்ணகி போன்ற மனம் உடையவனையே நாடுகின்றான். இந்த மனப்பான்மை என்றும் இருக்கும்; உலகம் எவ்வளவு மாறினாலும் அதன் பிறகும் இருக்கும். அதனால் அன்றும் கண்ணகியின் சிறப்பு எல்லோராலும் போற்றப்படும்.'' 56

கண்ணகியின் குறையோ என ஆயும் போக்கினைப் பின்வரும் வரிகளில் காணலாம்:

''ஆகையால் வாழ வழி நாடுகின்றவர்கள் எப்போதும் விதிவிலக்குகளை எடுத்துக்காட்டாகக் கொள்ளக்கூடாது.

இதை எழுதும்போதே எனக்குச் சிலப்பதிகாரம் நினைவுக்கு வருகின்றது. அன்பும் இரக்கமும் அருளும் கொடையும் மிகுந்தவனாகிய கோவலனுடைய உள்ளம் இசையிலும் கூத்திலும் எவ்வளவு ஆர்வம் உடையதாக இருந்தது; இதைக் கண்ணகி உணர்ந்து அந்தக் கலைகளைத் தானும் கற்றிருந்தால், கணவனுடைய உள்ளம் கலையரசியாகிய இன்னொருத்தியை நாடாதவாறு தடுத்திருக்கக் கூடுமே என எண்ணுகிறேன்." [57]

### கருத்தை விளக்கும் திறன்

கூறவந்த கருத்தினைப் படிப்பவர் மனத்தில் பசுமரத் தாணியெனப் பதியும் வண்ணம் விளக்கமுற எடுத்து-மொழியும் உணர்த்தும் திறனில் இவர் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் 'தோழி' போன்று காட்சி தருகின்றார். சான்றுக்குச் சில எடுத்துக்காட்டுகள்:

"புதிதாகப் பழகும்போது பெரும்பாலோர் நன்றாகப் பழகமுடியும். அதில் ஒன்றும் சிறப்பு இல்லை; திறமை இல்லை. புதிய மாணவர் ஒழுங்காக நடந்து கொள்வார். புதிய ஆசிரியர் பாடுபட்டுக் கற்றுக்கொடுப்பார். புதிய வியாபாரி நல்ல சரக்கு விற்பார். புதிய வேலைக்காரி நன்றாக உழைப்பாள். புதிய பால்காரன் நல்ல பால் தருவான். புதிய நட்பும் இனிமையாக விளங்கும். அதில் ஒரு சிறப்பும் இல்லை. இந்தப் புதுமையை எள்ளி நகையாடுவதுபோல் ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருப்பது உனக்கு நன்கு தெரியும். புதிய துடைப்பம் நன்றாகப் பெருக்கும் என்னும் அந்தப் பழமொழி வேடிக்கையாக இருந்தாலும், கருத்து உடையதுதான். அதற்கு மாறாக, எவ்வளவு பழமை ஆனபோதிலும் சிறப்புக் குன்றாமல் ஒளிவிடும் வாழ்க்கைதான் நல்ல வாழ்க்கை என்று சொல்வேன். இக்காலத்துப் பலருடைய வாழ்க்கை பொன்முலாம் பூசிய பொருள்போல் தொடக்கத்தில்

மட்டுமே நல்ல ஒளி வீசுகின்றது. பழமைப்பட்டுத் தேயத் தேய, ஒளி இழந்து மங்குகின்றது. உண்மையான பொன்னால் செய்யப்பட்ட பொருள் ஒருநாளும் அப்படி ஆகாது அல்லவா? பழகப் பழக, தேயத்தேய, அது குன்றா ஒளி வீசும் அல்லவா? அதுபோல் வாழும் வாழ்க்கையே நல்லவர்களின் குறிக்கோளாக இருக்கவேண்டும்.''[58]

''உன்னைப் போன்ற ஒருத்தி வயலிலும் கரம்பிலும் காட்டிலும் மேட்டிலும் பகலெல்லாம் உழைக்கிறாள்; பொழுதுபோனதும் வீட்டுக்குத் திரும்பிச் சமைத்துத் தொல்லைப்படுகிறாள். கணவனுக்கும் மக்களுக்கும் உணவு இட்ட பிறகு எஞ்சியதை அரைவயிறு உண்கிறாள். கட்டுவதற்குப் போதுமான கந்தை இல்லை. எண்ணெய் தேடித் தலைவார நேரமும் இல்லை; காசும் இல்லை. கண்ணாடி எடுத்து முகத்தைப் பார்க்க வாய்ப்பு இல்லை. (திருமணம் ஆவதற்கு முந்திய நாழிகையில் உடைந்த கண்ணாடி ஒன்றை எடுத்துப் பார்த்து மகிழ்ந்திருப்பாள்.) அவளுக்கு எதிர்காலத்தைப் பற்றி எண்ணுவதற்கு வழி இல்லை; நிகழ்காலத்தில் எதையும் தாங்கிக்கொள்ளும் நிலை இருக்கின்றது. சுத்தம் சுகாதாரம் இவை எல்லாம் அவள் அறியாத புதுச் சொற்கள். கலை, கருத்து இவை எல்லாம் அவளுக்குக் கனவைவிட அப்பாற் பட்டவை. அவள் உன்னைப் போன்ற தமிழ்ப் பெண்தான்; பெண் தான்.''[59]

''நினைத்துப்பார். நம் வீட்டில் பாத்திரங்களைத் துலக்கி வேலை செய்கிறாளே, அவளும் உன்னைப் போன்ற பெண்தான் உனக்குமேல் ஐந்து ஆறு வயது பெரியவளாக இருப்பாள். மாதம் ஏழு ரூபாய்ச் சம்பளத்திற்குத் தன் வீட்டைவிட்டு அயலார் வீட்டிற்கு வந்து உழைக்கிறாள். வைகறையில் துயிலெழுகிறாள். (வேறு எந்த நாகரிகப் பெண்களால் முடியும்?) சொந்த வீட்டு வேலைகள் சில வற்றைச் செய்கிறாள். தன் குழந்தைகள் எழுவதற்கு

முன்பே, அவைகளுக்குத் தெரியாதபடி இங்கே வருகிறாள். இங்குள்ள வேலைகளைச் செய்கிறாள். ஏதாவது உணவு கிடைக்கும் என்று அவளுடைய குழந்தைகள் அவளைத் தேடிக் கொண்டு இங்கே வருகின்றன. நம் அம்மா கொடுக்கும் பழைய சோற்றையும் காந்திப் போனதையும் கெட்டுப் போனதையும் குழந்தைகளிடம் கொடுத்து, அவைகள் உண்பதை மகிழ்ச்சியோடு பார்த்துக் கொண்டு தன் காய்ந்த வயிற்றுடன் குடிசைக்குத் திரும்புகிறாள்.''[60]

''நீ பள்ளிக்கூடத்தில் மூன்றாம் வகுப்பில் படித்த போது தெருக்கோடியில் முறுக்கு வாங்கித் தின்றாயே, நினைவிருக்கிறதா? அந்தக் கிழவி நாளெல்லாம் அந்தச் சின்ன அழுக்குக் கூடையை வைத்துக் கொண்டு கிழிச்சல் கோணியின்மேல் உட்கார்ந்து 'பெரிய வியாபாரம்' தொடர்ந்து செய்கிறாள் அந்தக் காலம் முதல் இன்று வரையில் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து செய்து வருகிறாள். கண் பார்வை மங்கிவிட்டதாம். ஆனால் தொழிலை விடமுடியவில்லை. ஏன், தெரியுமா? நாள் தோறும் எவ்வளவு விற்கிறாள். என்ன ஊதியம் கிடைக்கிறது, தெரியுமா? எண்ணிப் பார்த்திருக்கிறாயா? நரைத்துத் திரைத்துப் பழுத்த அந்த உடல் எங்காவது கட்டிலின்மேல் மெத்தென்ற படுக்கையில் படுத்துப் புரண்டு காலம் கழிக்காமல், வெயிலிலும் மழையிலும் காற்றிலும் பனியிலும் துன்பப்பட்டு, அரைமணி கால்மணிக்கு ஒரு முறை ஒரு சிறுவனுக்கோ சிறுமிக்கோ காலணா முறுக்கு விற்று, அதில் ஒரு பை ஊதியம் பெறப் பாடுபடுகின்றது! இவ்வாறு கிடைக்கும் சிறு ஊதியமான மூன்றணா நாலணா இல்லையானால் அந்த வற்றிய குடல் கஞ்சி இல்லாமல் பட்டினிகிடக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றதாம். தங்கியிருக்க நிழல் இல்லாமல், அடுப்பு மூட்ட இடம் இல்லாமல் மரத்தடியிலும் சாக்கடைக் கரைகளிலும் மானத்தோடு வாழும் தமிழ்ப் பெண்கள் எத்தனை பேர் தெரியுமா?''[61]

"ஆஸ்திரேலியாவைப் பற்றியும் அமெரிக்காவைப் பற்றியும் இமய மலையைப் பற்றியும் மிசிசிபியைப் பற்றியும் எக்ஸ்ரேயைப் பற்றியும் அணுக்குண்டைப் பற்றியும் அறியும் அறிவால் இவ்வாழ்க்கையைச் செம்மையாக நடத்த முடியாது என்றும், மனத்தைப் பற்றி அறிந்து ஒழுகினால்தான் சீராக நடத்த முடியும் என்றும் விளக்கினேன். மற்றப் பொருத்தங்களைவிட மனப் பொருத்தமே முதன்மையானது என்றேன்."[62]

"வீடு தீப்பற்றி எரியும்போது எதை முதலில் எடுத்துக் காக்க வேண்டும் என்ற அறிவு எல்லோர்க்கும் இயற்கையாக உள்ளது. கந்தலையும் குப்பையையும் துடைப்பத்தையும் முறத்தையும் அப்போது யாரும் எடுத்துச் செல்வதில்லை. பெட்டியையும் பேழையையும் முதலில் எடுத்துக் காக்கிறார்கள். அதற்கு அடுத்தபடியும் வாய்ப்பு இருந்தால் துணிமணிகளையும் உணவுப் பொருள்களையும் எடுக்கிறார்கள். சிறந்தது இது. ஆகையால் இதை முன்னே எடுக்க வேண்டும் என்று தெளிவு இயற்கையாக இருக்கிறது. சிறப்பு இல்லாதது இது. ஆகையால் எரிந்து போனால் போகட்டும் என்ற துணிவு மனப்பான்மையும் இருக்கிறது.

"இது புறத்தே நேரும் நெருக்கடி. அகத்தே — உள்ளத்தில் — நெருக்கடி நேரும்போது இவ்வாறு நடந்து கொள்ள வல்லவர்கள் எப்போதும் எந்தத் துறையிலும் வெற்றிபெற முடியும். எதை எதை விடாமல் போற்றுவது என்றும், எதை எதைக் கைவிடத் துணிவது என்றும் தெளிவாக உணர்ந்து நடக்கவேண்டும்.

"தேர்வுக்குப் படிக்கும் மாணவன், தேர்வு நெருக்கத்தில் பாடநூல்கள் முதன்மையானவை என்று உணர்ந்து மற்றவற்றைக் கைவிடத் துணியாவிட்டால் பயன் என்ன? கலையில் ஈடுபட்ட கலைஞன் தன் கலைத்துறைக்கு உரியவற்றைப் போற்றுவதோடு, நெருக்கடியில் மற்றவற்றை மறக்காவிட்டால் பயன் என்ன? நாட்டுத்

தொண்டில் ஈடுபட்ட ஒருவன் நெருக்கடி நேரும்போது தன் மனைவி மக்களையும் எதிர்காலத்தையும் பொருட்படுத்தாமல் தள்ளிவைக்கத் துணியாவிட்டால் பயன் என்ன?''.[63]

## படிக்க வேண்டிய நூல்கள்

பெண்கள் படிக்க வேண்டிய நூல்கள் என்று ஆசிரியர் குறிப்பிடும் நூல்கள் பின்வரும் அவர் கூற்றால் விளங்கும்:

''இளங்கோ எழுதிய கண்ணகியின் காவியத்தைப் படி; பலமுறை படி; என்றும் படி. குயூரி அம்மையாரின் வரலாற்றையும் கஸ்தூரிபா காந்தியின் வரலாற்றையும் திரும்பத் திரும்பப் படி. இவை போன்றவற்றை மேன்மேலும் படித்துக் கொண்டிரு.''[64]

## நட்புப் பற்றி நவில்வன

நட்பை எவ்வாறு நாடிப் பெற வேண்டும் என்பதனைப் பின்வரும் பகுதியில் டாக்டர் மு. வ. அவர்கள் விளக்குகின்றார்கள்.

''ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கிலப் புலவர் கண்டவரோடு எல்லாம் பழகிப் புதிய புதிய நட்புகளைப் பெருக்க வேண்டாம் என்று அறிவுரை வழங்கியிருக்கிறார்.''[65]

## நாசூக்கான திட்டல்

தாம் கூறவந்த கருத்தினை நாசூக்காக வெளிப்படுத்துதலில் டாக்டர் மு. வ. திறன் வாய்ந்தவர் என்பதனைப் பின்வரும் பகுதிகளில் காணலாம்:

''மானம் இழந்து வாழ்கின்ற பெண்களைப் பற்றி நான் குறிப்பிட வேண்டியதே இல்லை. பாத்திரம் துலக்கினாலும், முறுக்கு, வேர்க்கடலை விற்றாலும், பிச்சை எடுத்தாலும் வேறு என்ன செய்தாலும் சரி; மானத்தையும் விட்டு

ஒழுக்கமும் கெட்டு வாழத் தொடங்குகின்ற பெண்கள், முன் குறித்தவர்களைவிட ஒரு சிறிது நன்றாகவே வாழ்கிறார்கள்! எல்லாம் நம் சமுதாயப் பெருமை![66]

"திருவள்ளுவரின் அறத்தைப் பற்றியும் கண்ணகியின் தியாகத்தைப் பற்றியும் காந்தியடிகளின் வாய்மையைப் பற்றியும் கஸ்தூரிபாவின் உறுதியைப் பற்றியும் எளிய வாழ்வின் செம்மையைப் பற்றியும் இல்லறத்தின் அமைதியைப் பற்றியும் ஏழைகளின் முன்னேற்றத்தைப் பற்றியும் உலக ஒருமைப்பாட்டைப் பற்றியும் பேசும்போக்கு எங்கே உள்ளது? இவைகளை எல்லாம் சில ஆண்டுவிழா மேடைகளுக்கு என்றே ஒதுக்கிவிட்டார்கள் போல் தெரிகிறது."[67]

## மனைவி போற்ற வேண்டிய நெறிகள்

இல்வாழ்க்கையில் நிறைந்த பயனான வெற்றி காண்பதற்கு மனைவி ஒருத்தி கடைப்பிடிக்க வேண்டிய கோட்பாடுகளாக டாக்டர். மு. வ. அவர்கள் வற்புறுத்தும் கருத்துகள் பின்வருமாறு:

"கணவனோடு வாழும் ஒருத்திக்குக் கணவனுடைய அன்பே முதன்மையானது; மக்கள் இரண்டாம் நிலையினர்; கணவன் பெற்றோரும் தன் பெற்றோரும் மூன்றாம் நிலையினர்; நண்பரும் உறவினரும் நான்காம் நிலையினர்; புகழும் மதிப்பும் ஐந்தாம் நிலையின; கலையும் பொழுது போக்கும் ஆறாம் நிலையின; தெருவாரும் ஊராரும் ஏழாம் நிலையினர்; இப்படியே மற்றவற்றையும் மற்றவர்களையும் முறைப்படுத்தி வைத்துக் கொள்ளலாம்."[68]

"அன்புக்காக விட்டுக்கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே என்று நான் சொல்வேனானால், அது உனக்கும் உன்னைப் போன்ற பெண்களுக்கும் மட்டும் சொல்லும் அறிவுரை என்று எண்ணாதே. என்னுடன் பழகும் நண்பர்களான

ஆண்கள் பலர்க்கு இதையே நான் சொல்லியிருக்கிறேன். 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்னும் நாலடியாரின் பொன்மொழி இல்வாழ்க்கையின் மந்திரமாக விளங்க வேண்டும்; ஒருவேளை கணவனும் இன்னொரு வேளை மனைவியுமாக விட்டுக்கொடுத்தால்தான் வாழ்க்கை எளிதாக நடக்கும்."[69]

"ஆகையால், உலகப் படைப்பை மட்டும் அறிதலும், உலக வரலாற்றை மட்டும் படித்தலும், காவியங்களை மட்டும் கற்றலும், கடவுளை மட்டும் பூசித்தலும் இருந்து விட்டால் பரந்த நோக்கம் வந்துவிடாது. ஏழைகளின் முன்னேற்றத்தை எண்ண வேண்டும்; சுற்றுப்புறம் சீர்பெற வழிகோல வேண்டும்; ஆடம்பர மோகத்தை அகற்றவேண்டும்; தம் குறையைத் தாமே உணர வேண்டும்; மேற் சொன்னவற்றோடு இந்த நான்கும் பொருந்தினால்தான் குறுகிய நோக்கம் ஒழிந்து உயர்ந்த வாழ்வு அமையும். விவேகாநந்தரின் வாழ்வையும் ஆராய்ந்து பார்."[70]

### அவல ஓவியங்கள்

கிராமத்தில் பெண்ணையும்,[71] வேலைக்காரியையும்,[72] முறுக்கு விற்கும் கிழவியையும்[73] படம் பிடித்துக்காட்டி, நம் நெஞ்சில் இரக்கம் தோன்ற வைக்கிறார்.

### நடைச்சிறப்பு

டாக்டர் மு. வ. அவர்கள் கையாளும் நடை எளிமையானது; இனிமையானது; சிக்கலற்றது; தூய்மையும் தெளிவுங் கொண்டது; திட்பமும் நுட்பமும் செறிந் திலங்குவது. இதனை இக் கட்டுரையில் மேற்கோளாகக் கையாண்டிருக்கும் பகுதிகள் கொண்டே அறியலாம்.

'நினைத்ததை எழுதாமல் நினைத்து எழுதியவர்' என்று முன்னாள் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்

அவர்கள் தம் இரங்கல் உரையில் குறிப்பிட்டது இங்குக் கருதத்தக்கது.

"உங்கள் அன்பான இல்வாழ்க்கை வளர்பிறைபோல் வளரவேண்டும் என்று விரும்புகின்றேன். அது என் வாழ்த்துதலில் இல்லை; நீங்கள் வாழும் முறையில் இருக்கிறது."[74]

"பசி எடுக்கின்ற வயிறு உள்ளவர்கள்தான் வயிறாரச் சாப்பிட முடியும். அடங்கி நடக்கின்றவர்கள்தான் உரிமையின் நன்மையை அனுபவிக்க முடியும்."[75]

"அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே."[76]

"ஆடம்பரம், ஆணவம், ஆரவாரம் இவைதான் இந்தக் காலத்து நாகரிகத்தின் உயிர்நாடிகள். தனி வாழ்க்கையில் மனம் பண்படுவதற்கு இவைகள் தடைகள் என்பது என் கருத்து."[77]

"அம்மா! நீ கணவனுடைய மனம் அறிந்து நடந்து கொள்வதில் வல்லவளாக இருக்க வேண்டும். மனம்தான் வாழ்க்கை. மனம் அறிந்து மகிழ்விக்கத் தெரியாத பெண்கள், அழகு பண்பு திறமை எல்லாம் இருந்தும் வாழ்க்கையில் ஏமாந்து துன்புறுகிறார்கள். அழகும் பண்பும் திறமையும் குறைவாக இருந்தாலும், மனம் அறிந்து நடக்கத் தெரிந்த பெண்கள் வெற்றி பெறு கிறார்கள்."[78]

டாக்டர் மு. வ. அவர்கள், "'கருத்துகளே ஆற்றல்மிக்க படைக்கலன்கள்"[80] என்று எண்ணியதனை இந்தப் பகுதிகள் உணர்த்தும்.

சுருங்கச் சொன்னால் டாக்டர் மு. வ. அவர்களின் 'தங்கைக்கு' திருவள்ளுவர் காட்டும் இல்வாழ்க்கைச் சிறப்பினை உணர்த்தவந்த ஒப்பற்ற உயரிய நூல் எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. பக். 263.
2. பக். 7, 34, 75, 76 & 78.
3. பக். 7.
4. பக். 13.
5. பக். 17.
6. பக். 17.
7. பக். 31.
8. பக். 31, 32.
9. பக். 48.
10. பக். 62.
11. பக். 68.
12. பக். 79, 80.
13. பக். 41.
14. பக். 55, 56, 79.
15. பக். 54.
16. பக். 5.
17. பக். 26.
18. பக். 54, 55.
19. பக். 65.
20. பக். 65, 66.
21. பக். 50.
22. பக். 23.
23. பக். 18.
24. பக். 22.

25. பக். 23, 24.
26. பக். 16, 17.
27. பக். 17.
28. பக். 32, 33.
29. பக். 33.
30. பக். 33, 34.
31. பக். 34.
32. பக். 35, 36.
33. பக். 36.
34. பக். 37.
35. பக். 38.
36. பக். 40.
37. பக். 59.
38. பக். 75.
39. பக். 34.
40. பக். 27.
41. பக். 8, 9.
42. பக். 19.
43. பக். 26.
44. பக். 34.
45. பக். 38,
46. பக். 65.
47. பக். 67.
48. பக். 8.
49. பக். 15.
50. பக். 52.
51. பக். 52.
52. பக். 55.
53. பக். 65.
54. பக். 74.
55. பக், 28.
56. பக். 29.

57. பக். 63.
58. பக். 7, 8.
59. பக். 43.
60. பக். 44, 4.5.
61. பக். 45.
62. பக். 69.
63. பக். 73.
64. பக். 7.
65. பக். 71.
66. பக். 46.
67. பக். 76.
68. பக். 74.
69. பக். 12; 13.
70. பக். 79.
71. பக். 43.
72. பக். 44; 45.
73. பக். 45.
74. பக். 7.
75. பக். 11.
76. பக். 12.
77. பக். 32; 33.
78. பக். 38.
79. பக். 61; 62.
80. பக். 43.

# V

# மு. வ. நாவல்களில் சமுதாய நோக்கு

இருபதாம் நூற்றாண்டு இலக்கியம் பல துறைகளில் வளர்ந்து செழித்தது. பாரதியின் கவிதையில் தொடங்கிய மறுமலர்ச்சி, பல துறைகளிலும் பயன் நல்கியது. ஆங்கிலேயர் தொடர்பால் வேகமாக வளர்ந்த தமிழ் உரை நடை, தமிழில் சிறுகதை, நாவல், நாடகம் முதலான இலக்கிய வகைகள் தோற்றமும் தொடக்கமும் வளர்ச்சியும் வாழ்வும் பெற வகை செய்தது. முற்காலக் காப்பியங்களின் இடத்தினை நாவல் கைப்பற்றிக் கொண்டது. காரணம், நாவல்கள் நாம் வாழும் சமுதாயத்தைப் பிரதிபலிப்பன வாக அமைந்து விளங்கத் தொடங்கின. எனவே நாவலைப் படிக்கும்போது நம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்தையே பார்க்கிறோம் என்னும் உள்ளுணர்வு தோன்றத் தலைப் பட்டது. அவ்வுள்ளுணர்வு நாவல்களில் நம்மை ஆழமாக ஈடுபடுத்திக் கொள்ள வைத்தது. சுருங்கச் சொன்னால் இன்று எழுதப்படும் சமூக நாவல்கள் நாம் வாழும் சமுதாயத்தின் பிரதிபலிப்பு எனலாம்.

டாக்டர் மு. வரதராசனார் தமிழ் பயின்ற சான்றோர்; அறிஞர் பெருமக்கள் பலரோடு பழகியது போன்றே சமுதாயத்தின் பல்வேறு வாழ்க்கை நிலைகளைக் கொண்ட

மக்களோடும் நேயங்கொண்டும் நெருங்கியும் பழகியவர். தம் கூர்த்த நோக்காலும் மதியாலும் தம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்தை நுணுகிக் கண்டவர். தாம் கண்டவற்றையும் தாம் கண்டபோது தம் உள்ளம் உணர்ந்தவற்றையும் அவர் தம்முடைய நாவல்கள் அனைத்திலும் பிரதிபலித்துக் காட்டியுள்ளார். புரையோடிப் போன சமுதாயத்தை மட்டும் நாவலாசிரியர் சிலர் நமக்குத் தெற்றெனக் காட்டி விட்டு வாளா விட்டு விடுவர். ஆனால் மு. வ. போன்ற நாவலாசிரியர் அத்தோடு நின்று விடுவதில்லை. சமுதாயப் புண்ணிற்கு மருந்திடும் சமுதாய மருத்துவராய்த் துலங்கினர். தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களோடு நெருங்கிய தொடர்பு பூண்டிருந்தவர் தண்டமிழ்ச் சான்றோர் மு. வ. ஆவர். திரு. வி. க. அவர்கள் எப்படித் தம் உரைநடைத் திறத்தால் சமுதாயப் பிணி தீர்க்கும் பெருந்தகை மருத்துவராக விளங்கினாரோ அம்முறையிலேயே மு. வ. அவர்களும் தம் பேச்சால் எழுத்தால் சமுதாயப் படப்பிடிப்போடு நின்று விடாமல் சமுதாய நோய்களை இனங்கண்டு காட்டி அவற்றைத் தீர்க்கும் தேர்ந்த மருத்துவ மேதையாக விளங்கினார் எனலாம். 'நோய் நாடி, நோய் தணிக்கும் வாய் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செய்தவர்' மு. வ. ஆவர்.

'உலகப் பேரேடு' என்னும் கட்டுரை நூலில் மு. வ. அவர்கள் சமுதாயத்தைப் பற்றித் தாம் கொண்டுள்ள கருத்தினைப் பின்வருமாறு குறிப்பிடுவர்:

"மனித சமுதாயம் ஒரு குழந்தை போல் வளர்ந்து வருகிறது; இன்னும் ஒரு குழந்தையின் நிலையிலேயே இருக்கிறது. இந்தக் குழந்தைக்கு இப்போது வயது நான்கு என்று சொல்வதா, ஐந்து என்று சொல்வதா தெரியவில்லை. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக மனித இனம் வளர்ந்துவந்த பிறகும், இன்னும் சமுதாயம் குழந்தை நிலையிலேயே இருப்பதை எண்ணி வியப்புத் தோன்றுகிறது."

'உள்ளம் திருந்தினால் உலகம் திருந்தும்' என்பது மு. வ. வின் அசைக்க முடியாத நம்பிக்கை. எனவேதான் அவர் சொல்கிறார்: "எல்லாரும் உலகத்தைத் திருத்த முயல்கிறார்கள். உள்ளத்தைத் திருத்த அவ்வளவு முயற்சி செய்வதில்லை. செய்ய முடிந்ததைச் செய்யாமல் முடியாததற்காக உழைத்துச் சலிப்பும் வெறுப்பும் அடைகிறார்கள்" என்று குறிப்பிட்டு விட்டு 'அந்த நாள்' என்னும் தம் தொடக்க கால நாவலில் மனத்தின் சிறப்பினையும் அதனைப் பண்படுத்த வேண்டும் என்ற கடப்பாட்டினையும் தம் இலக்கிய நெஞ்சம் விளங்கப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்:

"மனம் ஒரு பெரிய உலகம்; அந்த மன உலகில் அந்தியின் அழகும் உண்டு; காலையின் கவர்ச்சியும் உண்டு; நள்ளிரவின் குளிர் மயக்கமும் உண்டு; நண்பகலின் கொதிப்பும் உண்டு. அந்த மன உலகில் கருமுகில்களும் உண்டு. ஆழ்ந்த கடல்களும் உண்டு. அந்த மன உலகில் வெயில் பரப்பும் கதிரவனும் உண்டு; வெண்ணிலாப் பொழியும் திங்களும் உண்டு; வெப்பமும் உண்டு; தட்பமும் உண்டு; மழையும் உண்டு; பனியும் உண்டு; வளமும் உண்டு; வறட்சியும் உண்டு. அந்த மன உலகை அல்லவா காண வேண்டும்; ஆராய வேண்டும்; பாட வேண்டும்; பண்படுத்த வேண்டும்."

இவ்வாறு உள்ளத்தின் சிறப்பை உணர்ந்த காரணத்தால் அவர் கூறுகிறார்:

"நாம் வாழ்வதற்கு மூன்று நன்றாக இருக்க வேண்டும். ஒன்று நம் உள்ளம். மற்றொன்று உடம்பு மூன்றாவது சுற்றுப்புறம். நாம் விரும்பினால் உள்ளத்தை முழுதும் நன்றாக வைத்திருக்க முடியும்; ஆனால் எல்லாரும் சேர்ந்து விரும்பினால்தான் சுற்றுப்புறத்தை நன்றாக அமைக்க முடியும்."

"உள்ளம் எவ்வளவு உயர உயரப் பரந்தாலும் காற்றாடி நூலால் பிணிக்கப்பட்டிருப்பது போல் அது உடம்பின் தொடர்பால் சின்ன உணர்ச்சிகளுக்குச் சிறிது கட்டுப் பட்டே இருக்கிறது."

"உடம்பில் அழுக்கு ஏற்படுகிறது; பிறகு குளிக்கிறோம். உள்ளமும் அப்படித்தான். தூய எண்ணங்களில் அடிக்கடி குளித்துக் கொண்டிருக்க வேண்டும்".

இவ்வாறு உள்ளம் திருந்தி உயர்ந்து தனி மனிதன் சிறந்தால் பின்னர்ச் சமுதாயமும் திருத்தமுறும் என்பது மு. வ. கூறும் கருத்து.

"தனிமனிதன் இன்புற வேண்டுமானால் சமுதாயம் நன்றாக அமைந்திருக்க வேண்டும், சமுதாயம் பழங் காலத்துத் தேர் போன்றது. அதை எல்லோரும் இழுக்க வேண்டும். அப்போதுதான் எல்லோருக்கும் இன்பம் உண்டு. பலர் ஏறி உட்கார்ந்து கொண்டு இன்பம் உற, சிலர் இழுத்துச் செல்கின்ற தேர் அன்று இது. ஒவ்வொருவரும் தம் கடமையைக் குறை வில்லாமல் செய்ய, ஒவ்வொருவரும் தமக்குரிய பங்கைப் பெறுமாறு அமைந்திருப்பதே நல்ல சமுதாயம் ஆகும்."

இவ்வாறு நல்ல சமுதாயம் அமையவில்லையானால் விளையப்போவது என்ன என்பது குறித்தும், அந்தத் தீமைகளைப் போக்கி ஒழுங்கான சமுதாயத்தினை அமைப் பதற்குமேற்கொள்ளப்பட வேண்டிய கடமை குறித்தும் அவர் ஆழமாகச் சிந்தித்துத் தம் கருத்தைப் பின்வருமாறு அமைக்கிறார்:

"எப்படியும் நல்ல சமுதாயம் அமையவில்லையானால் அமைதியான வாழ்க்கை இல்லாமற் போகும். நூற்றுக்கு ஒருவர் இருவரை மட்டும் திருத்தி இனிப் பயன்

விளையாது. பெரும்பாலோர் நெறியோடு வாழ்வதற்கு உரிய வழிவகைகளை அமைக்கவேண்டும். இரண்டில் ஒன்று நடக்கவேண்டும். இன்றைய பெரிய ஊர்களும் பெரிய அமைப்புகளும் குறைந்து பழங்காலம்போல் மனச்சான்று விளங்கும் சிறிய ஊர்களும் சிறிய அமைப்புகளும் ஏற்படவேண்டும். அதுதான் காந்தியடிகளின் நெறி. மற்றொரு வழி, பழங்காலத்தில் நம்பிக்கையும் உறுதியும் ஊட்டியதாகிய சமயத்திற்கு ஒப்பாக இக்காலத்தில் வேறொன்று ஏற்படவேண்டும். எல்லோருடைய நன்மைக்காகவும் எல்லோரும் சேர்ந்து செய்யும் சட்டத்தைக் கடவுளின் ஆணைபோல் போற்ற வேண்டும்.''

சமுதாயத்தில் நாம் காணுகின்ற கெட்டவர்களையும் போக்கிரிகளையும் அடியோடு ஒழித்துவிட முடியும் என்றோ, அல்லது அடியோடு ஒழித்துவிட வேண்டும் என்றோ கூறாமல், அவர்கள் மேல் நாம் இரக்கங் கொள்ள வேண்டுமென்றும் அவர்களைத் திருத்துவதற்கு விடாது தொடர்ந்த முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் அவர் 'மண் குடிசை' என்ற நாவலிலும் 'மண்ணின் மதிப்பு' என்ற கட்டுரை நூலிலும் குறிப்பிட்டிருக்கக் காணலாம்:

"ஒரு நாட்டில் சர்வாதிகாரி திடீரென்று தோன்றுவதில்லை. பலர்க்கு அவனைப் போன்ற மனம் வந்த பிறகுதான் அவன் தோன்றுகிறான். பலருடைய மனம் ஏமாற்றத்தாலும் நம்பிக்கையின்மையாலும் கெட்ட பிறகுதான், துணிச்சல் மிகுந்த ஒருவன் அப்படி ஆகிறான். சமுதாயத்தில் போட்டியாலும் ஏக்கத்தாலும் பலருடைய மனம் கெட்ட பிறகுதான் ஒரு சிலர் கொடியவர்களாக வளர்கிறார்கள். அவர்கள் கோபுரம் போன்றவர்கள். கோபுரத்தை மட்டும்

இடிப்பதால் பயன் இல்லை. உண்மையாக உணர்ந்தால், அவர்கள் மேல் இரக்கம் கொள்ளவேண்டும்.

—மண் குடிசை: ப. 443

"ஒரு சில நாட்களில் சமுதாயத்தைத் திருத்தி அமைத்துவிட வேண்டும் என்ற வேகம் உடையவர்களுக்கே உள்ளத்தில் சோர்வு ஏற்படுகிறது. நீதியின் பெருமை, நேர்மையின் மதிப்பு, மனச்சான்றின் வலிமை ஆகிய மூன்றும் சமுதாயத்தில் விளங்குமாறு நம்மால் இயன்ற தொண்டு செய்யவேண்டும் என்ற அமைதியான ஆசை கொண்டிருந்தால் அந்தச் சோர்வு ஏற்படாது. சமுதாயம் என்பது தனிமனிதர்களால் ஆனது. அவர்களில் எத்தனை பேருடைய மனப்பான்மையை நம்மால் திருத்த முடியுமோ அவ்வளவும் செய்வோம். இதுவே அடிப்படைத் தொண்டு என்று நம்புவோம்."

—மண்ணின் மதிப்பு: ப. 41-42

சமுதாய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டைகளாக விளங்கும் தகாதவர்களைத் தண்டித்து விடுவதால் மட்டும் பயன் விளைந்து விடாது, மாறாகக் குறை எங்கே உள்ளது என்று கண்டு, அதற்கு மாற்றுத் தேட முற்படவேண்டும் என்று அவர் தம் 'அல்லி' என்னும் தொடக்க கால நாவலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"இதுவரையில் தவறு செய்தவர்களைப் பிடித்துப் பிடித்து விடாமல் தண்டித்து வந்து என்ன பயன் கண்டோம்? குற்றங்கள் வளர்ந்து வருகின்றனவே தவிர, குறையவில்லை. உடம்பில் உட்கார்ந்து கடித்த கொசுக்களாகப் பார்த்து அவைகளை வேட்டையாடி நசுக்கிப் பொசுக்கி விடுவதில் வல்லவர்களாக இருக்கிறோம். அதற்காகவே நீதிமன்றங்கள், சிறைக் கூடங்கள் எல்லாம் ஏற்படுத்தி, ஏராளமாகச்

செலவழித்து வருகிறோம். ஆனால் கொசுக்கள் வளர்வதற்கு இடம் தருகின்ற சாக்கடைகளையும் தேக்கங்களையும் ஒழித்துச் சீர்ப்படுத்துவதற்கு அதில் கால்பங்கு முயற்சியும் செய்வதில்லை''.

—அல்லி, ப. 145-146

மேலும் மு. வ. அவர்கள் சமுதாயத்தை வெறும் அறவுரைகளால் மட்டும் திருத்திவிட முடியாது, என்று உறுதியாக நம்புகின்றார். விவேகானந்தரும், காந்தியடிகளும் பட்டினியால் வாடும் ஏழையிடம் முறையே கடவுளைப் பற்றியும், சுதந்தரத்தைப் பற்றியும் பேசமாட்டோம். அவர்களுக்குக் கடவுள் கஞ்சியின் வடிவில், ரொட்டியின் வடிவில் தான் காட்சியளிப்பார் என்று கருதியது போல டாக்டர் மு. வ. அவர்களும் சமுதாயம் புரையோடிப் போயிருப்பதற்குக் காரணம் வறுமையும், பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும்தாம் என்று வற்புறுத்திக் கூறுகின்றார்:

''களவு ஒழிய வேண்டுமானால் நாட்டில் வறுமை இல்லாதவாறு செய்யவேண்டும். ஒருபுறம் முப்பது ரூபாய்ச் சம்பளமும் மற்றொரு புறம் முப்பதாயிரம் ரூபாய் வருவாயும் உள்ள மிக இழிவான நிலையைப் போக்கவேண்டும். ஆயிரம் மடங்கு உள்ள வேறுபாட்டை அகற்றி, இரண்டு மூன்று பங்கு வேறுபாடு தான் என்ற நிலைக்குக் கொண்டு வரவேண்டும்...இந்த மண்ணில் பிறந்த எல்லோருக்கும் வாழ்வு உண்டு, வளம் உண்டு என்ற நல்ல நிலைமை ஏற்படுத்த வேண்டும். இந்த மண்ணின் மதிப்பு உயர்வதற்கு அதுதான் தக்க வழி''

—மண்ணின் மதிப்பு: ப. 10-11

என்கிறார். மேலும் அவர்,

''இன்று அறிஞர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமை தனிமனிதரைத் திருத்துவது அல்ல. சமுதாயத்தைத்

திருத்துவதே ஆகும். ஆசையோடு போராடுவது அல்ல; அமைப்போடு போராடுவதே ஆகும். பொருட் பற்றைப் போக்குவது அல்ல; பணவேட்டையைப் போக்குவதே ஆகும்''

என்றும் குறிப்பிட்டுள்ளார். இன்றையச் சமுதாயச் சீர்கேடு களுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் அறவுணர்வு அற்றுப் போனமையும், அறத்தில் பற்று நெகிழ்ந்து போனமை யுமே ஆகும் என்கிறார்.

''தனிமனிதன் வாழ்க்கைக்கு உணவும் உறக்கமும் இருந்தால் போதும். மக்கள் பலர் கூடிவாழும் சமுதாய வாழ்க்கைக்கு அறம் கட்டாயம் வேண்டும். மக்கள் எல்லோரும் கூடி நடத்தும் அரசியலுக்கே அறம் சிறப்பாக வேண்டும். உடம்பின் நன்மைக்கு இரத்த ஓட்டம் எப்படிக் கட்டாயம் வேண்டுமோ, அதுபோல உலக நன்மைக்கு அறத்தின் அடிப்படை கட்டாயம் வேண்டும்...அரசியலில் அல்லல் விளைப் பதற்கெல்லாம் முதல் காரணம் அறமாகிய அடிப் படையைப் புறக்கணிப்பதுதான் என்று உணர வேண்டும்.''

—அறமும் அரசியலும், ப. 40

இவ்வாறு அறத்திற்குச் சார்பாக நின்று பேசும் அறவோராம் மு. வ. அவர்கள், சமுதாயம் அறத்தில் அசையாத நம்பிக்கை வைத்திருப்பவர்களை என்ன செய்கின்றன என்பதனைக் 'கரித்துண்டு' என்ற தம் நாவலில் பின்வருமாறு விளக்குகின்றார்:

''நாம் எல்லோரும் சேர்ந்து என்ன செய்து வருகிறோம் தெரியுமா? அறத்தை நம்பும் நல்லவர்களை முதலில் வறியவர்களாக ஆக்குகிறோம்; பிறகு இரக்கமற்றவர் களாக மாற்றுகிறோம்...மாசற்ற மனிதப் பண்போடு கரவற்ற குழந்தைகளாய்ப் பிறந்து வளர்ந்தவர்களை

முதலில் ஏழைகளாக்கி, பிறகு பொல்லாத போக்கிரி களாக்கி விடுகிறோம்.''

இன்றுள்ள சமுதாயத்தை மண்குடிசையோடு ஒப்பிட்டுப் பின்வருமாறு பேசுகின்றார் மு. வ.

''இன்று உள்ள சமுதாயம் மண்குடிசை போன்றது. அதில் எலிகள் வளை தோண்ட முடிகிறது. பெருச்சாளிகள் கடைக்காலையே தோண்டுகின்றன. பலவகைப் பூச்சிகளும் குடிபுகுகின்றன. எல்லாம் சேர்ந்து குடிசையைப் பாழாக்க முடிகிறது. மண்குடிசை யாக உள்ள வரையில் இவைகளைத் தடுக்க முடியாது. ஒன்று, குடிசையை விட்டு, இயற்கையோடு இயற்கை யாய்க் குகையில் தங்கி வெட்டவெளியில் திரிய வேண்டும். அல்லது, ஒழுங்கான கல் வீடு கட்டி வாழ வேண்டும்; அப்போது எலிகள் முதலியன தோன்றி வளர முடியாது.''

சமுதாயத்தில் தீமைகள் பல்கிப் பெருகி வளர்ந்து கொண்டே செல்கின்றன என்றும், இதற்கு இக்காலத்தில் தேர்தல் முறை ஒரு தீங்கான காரணமாய் அமைகிறது என்றும் குறிப்பிட்டுப் பின்வருமாறு மு. வ. கூறுகின்றார்:

''சமுதாயம் பெருகப் பெருக, நன்மை தீமைகளைக் கலந்து பங்கிட்டுக்கொள்ள வேண்டி இருக்கிறது. பொதுத்தொண்டிலும் இந்தக் கலப்புத்தான் நிற்கிறது. ஆகையால் பணத்தை வாங்கிக் கொண்டு தேர்தலில் ஓட்டுப்போடும் மக்களைக் குறை சொல்வதா? தேர்தலில் வென்ற பிறகு செலவான பணத்திற்கு மேல் ஊழல் வழிகளில் சேர்த்துக்கொள்ள முயலும் உறுப்பினர்களைக் குறை கூறுவதா? அவர்களுக்கு லஞ்சம் கொடுத்தாவது தம் வேலைகளை முடித்துக் கொள்ள விரும்பும் மக்களைக் குறை கூறுவதா? எல்லாருடைய குறைகளும் ஒன்று கூடி உருவாகிப் பயன்

அளிக்கின்றன. நல்லவர்களின் பொதுத்தொண்டும் இதில் கலந்து கரைந்து போகிறது. சமுதாய அமைப்பிலும் தேர்தல் முறையிலுமே ஒரு புது மாறுதல் வந்தால்தான் இந்த நோய் தீரும்.''

எனவே டாக்டர் மு. வ. அவர்கள் ஒரு புத்துலகம் காண விழைகிறார். அந்தப் புத்துலகத்தின் அமைப்பினைப் பின்வருமாறு காண்கின்றார்:

"இதுவரை இருந்த உலக அமைப்பு வேறு. இனி வரப்போகும் புத்துலக அமைப்பு வேறு. பழைய உலகத்தில் பொதுமக்கள் பொருளாதாரப் போராட்டத்தில் சிக்குண்டவர்கள்... இனி அவர்களை அந்தக் கடலில் தத்தளிக்க விடும் கொடுமை இருக்காது. பொருட் போராட்டம் ஒழிந்து வாழ்க்கையில் அறப் போராட்டம் ஒன்றே நிற்க வேண்டிய அமைப்பே புத்துலக அமைப்பாகும்.''

"அறத்தைக் காக்கத் துணை செய்யும் என்று போற்றிய அந்த நெருப்பு — பணம் — இன்று வாழ்வையே பற்றி எரித்துக் கொழுந்து விட்டு ஓங்குகின்றது; அற நாட்டத்திற்கே இடமில்லாமல் செய்து விடுகின்றது. போகட்டும்; பழைய சமுதாய அமைப்பு மறைந்து சாம்பலானால், புதிய சமுதாய அமைப்பு ஒன்றைக் காண மக்களால் முடியும். அந்த அமைப்பில் பணம் இருக்கும்; பணவேட்டைக்கு இடம் இருக்காது. அறம் வாழும்; அறநாட்டம் அடிப்படையாக அமையும். பணம் அறத்தின் அடிப்படையில் சமுதாயத்திற்குப் பயன்பட்டு வாழ்க்கை திருந்தும். அன்றுதான் விமானங்களில் வானில் பறக்கக் கற்ற மக்கள், கப்பல்களாலும் நீர்மூழ்கிகளாலும் கடலில் நீந்தவும் மூழ்கவுங் கற்ற மக்கள், நிலத்தில் அமைதியாகவும் இன்பமாகவும் வாழ முடியும் என்பதை மெய்ப்படுத்துவார்கள்; பணம்

ஒரு கருவி, அறம் நெறி, வாழ்வே குறிக்கோள் என்பதை மெய்ப்படுத்துவார்கள்.''

—அறமும் அரசியலும் — பக். 65 - 66

சமுதாயத்தைக் கூர்ந்து நோக்கி அங்குள்ள அவலக் காட்சிகளைப் படம்பிடித்துக் காட்டிய அறவோர் டாக்டர் மு. வ. அவர்கள் 'நெஞ்சில் ஒரு முள்' என்னும் நாவலில் சமுதாய மாற்றத்திற்கு அனைவரும் ஆற்ற வேண்டிய அரும்பணி இன்னதெனத் தெளிவாகச் சுட்டுகின்றார்:

"இந்த உலக வாழ்க்கையிலும் தனி ஒருவர் எண்ணம் நிறைவேறி விடாது. தொன்றுதொட்டு இதுவரையில் வளர்ந்து வந்துள்ள கருத்துகளும் இன்று உள்ளவர்களின் விருப்பு வெறுப்புகளும் சேர்ந்தே சமுதாய வாழ்க்கையை உருப்படுத்துகின்றன. மாற்ற முயற்சி செய்யலாம்; உடனே பயன் விளையாது; போதிய பயன் விளையாது. ஆகையால் நம் கடமையைச் செய்வோம்; நடப்பது நடக்கட்டும் என்று இருப்போம். அதுவே அறிவுக்கு அழகு. கடமையைச் செய்வதற்கே நமக்கு உரிமை உண்டு; பயனைப் பற்றிக் கவலைப்படுவது அறியாமை.''

—நெஞ்சில் ஒரு முள் — ப. 443 - 444

இதே கருத்தினை 'மண்குடிசை' நாவலின் இறுதியிலும் தெளிவுறுத்துகின்றார்:

"உலகத்தைத் திருத்த நம் பங்கு முயற்சி செய்வோம். பணவேட்டையும் புகழ் வேட்டையும் அவற்றால் ஆகிய பலவகை ஏக்கங்களும் கவலைகளும் இல்லாமல் சமுதாயம் சீராக அமைவதற்கு உரிய வகையில் அறிவை வளர்ப்போம்; அறநெறியைப் பரப்புவோம். உடனே பயன் காண முடியாமல் போகலாம். கவலை

வேண்டா. எதிர்கால நன்மையைக் கருதிக் கடமையைச் செய்வோம். ஆங்காங்கே நல்ல விதைகளைத் தூவிச் செல்வோம்; அதுவும் இயலாத நிலையானால், இயன்றவரையில் நிலத்தைப் பண்படுத்தி விட்டுச் செல்வோம். அது நம் கடமை; நல்ல கடமையை உணர்ந்து செய்வதே நல்வாழ்க்கை.''

—மண்குடிசை — ப. 504

ஆக, அறிவாற்றலும், கூரிய பார்வையும் கொண்டு சமுதாயத்தை நோக்கிய டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் சமுதாய மருத்துவராகவும் விளங்குவதனை அவருடைய படைப்புகளில் தெளிவுறக் காணலாம்.

* * *

— சென்னை, வானொலி நிலையப் பேச்சு,
27-2-1979

# VI

# தண்டமிழ்ச் சான்றோர் டாக்டர் மு. வ.

எளிய குடும்பத்தில் பிறந்து, உழைப்பாலும் உண்மையாலும் உயரிய பண்பாட்டாலும் உலகத்தார் உள்ளத்திலெல்லாம் நிறைய முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்த பெருந்தகை டாக்டர் மு. வ. அவர்களாவர். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் காவலனாயும் பாவலனாயும் வாழ்ந்த கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி என்ற பாண்டிய குல மன்னன், 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களால் இம் மண்ணுலகம் இடையறாது இயங்கிக் கொண்டிருக்கிறது' என்று குறிப்பிட்டான். சிலர் பலருக்காக வாழ்வதனால் உலகின் இயக்கம் நடைபெற்றுக்கொண்டேயுளது. இம்முறையில் இந் நூற்றாண்டில் சீலமுற வாழ்ந்தவர் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. ஆவர். அவர்தம் அடியொற்றி, அவர்தம் வாழ்வு வழியில் மாறா நம்பிக்கை கொண்டு பெரு வாழ்வு—தூய வாழ்வு — வாழ்ந்தவர் டாக்டர் மு. வ. அவர்கள் ஆவர்.

### நவசக்தி அளித்த தமிழார்வம்

வடாற்காடு மாவட்டத்தில் வாலாசாவிற்கு அருகில் உள்ள வேலம் என்னும் சிற்றூரே நம் பேராசிரியர்

அவர்களின் சொந்த ஊர். ஆயினும் இவர் பிறந்து வளர்ந்து பணியாற்றிய ஊர் திருப்பத்தூராகும். 1912 ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 25 ஆம் நாள் பிறந்தவர் நம் பேராசிரியர். அவர்களின் தாயார் பெயர் அம்மாக் கண்ணு. தந்தையார் பெயர் முனிசாமி என்பது ஆகும். பிறவியிலேயே மெலிந்த உடம்பு. ஊரில் நல்ல செல்வாக்குப் படைத்த பெருந்தனக்காரரின் ஒரே மகன். செல்லங் கொடுத்துச் சீராட்டிப் போற்றி வளர்க்கப் பாட்டியார். இவ்வாறு இளமைப் பருவம் கழிகின்ற காலையில் 'நவசக்தி' என்னும் வார ஏடு அவர் கண்ணிற் பட்டது. தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள் நடத்திய அத் தமிழ் ஏடு, இவர் தம் வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பத்தை உண்டு பண்ணிற்று எனலாம். அவ் வேட்டின் தமிழ் நடையில் இவர் நெஞ்சம் திளைத்தார்; கருத்துகளில் மூழ்கினார்; அழகு தமிழில் அகங்குளிர்ந்தார். விருந்துண்ட மகிழ்ச்சி இவருக்கு ஏற்பட்டது. விடாது அவ்வேட்டினை வாங்கிப் படிக்கும் பழக்கம் வந்து வாய்த்தது. அவ் வேட்டில் இடம் பெற்ற கட்டுரைகளில் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றிருந்த தமிழ்ப் பாடல்களை மனப் பாடம் செய்யத் தொடங்கினார். இதனால் தமிழார்வமும், நல்ல தமிழ் படிக்கும் பழக்கமும் இவரிடம் வந்து படிந்தன.

இவருக்கு அப்போது பதின்மூன்று வயது நடந்து கொண்டிருந்தது. வகுப்புத் தோழன் ஒருவன், எங்கும் கிடைக்காத நூலென்று — யாப்பிலக்கண நூலொன் றினை இவரிடம் காட்டினான். அந் நூலில் செய்யுள் இயற்றும் வகை கூறப்பட்டிருப்பதறிந்து களிப்புக் கொண்டார். ஏற்கெனவே செய்யுள் இயற்ற வேண்டும் என்று ஆர்வங்கொண்டிருந்த இவருக்கு அந் நூல் நல்ல விருந்தினை நல்கியது. யாப்பிலக்கணத்தை வரையறை செய்த அந்நூலே 'யாப்பருங்கலக் காரிகை' எனப்படுவது. அந் நூலினை அந்நண்பனிடம் கெஞ்சிக் கேட்டு, இரண்டு

நாட்களுக்கென்று இரவலாகப் பெற்று, அதனை முழுவது மாகப் படிசெய்துகொண்டு ஓசைப்படாமல் நூலைத் திரும்பத் தந்துவிட்டார். 'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து' என்பார்கள். அம்முறையில் இவர்க்கு யாப் பிலக்கணப் பயிற்சி இளமையிலேயே வாய்த்துவிட்டது. பிற்காலத்தில் பன்முறை இந் நூலினை இவர் சிறப்புத் தமிழ் பயிலும் மாணவர்க்கு வகுப்பறையில் கற்பிக்கும் நிலையும் நேர்ந்தது.

### மெலியாத உள்ளம்

உயர்நிலைப் பள்ளியோடு இவர் படிப்பு முடிவுற்றது. தாலுக்கா அலுவலகத்தில் சேர்ந்தார். கடமையினைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வந்தார். உயர் அலுவலர்கள் இவர்தம் வேலைத் திறனைக் கண்டு மகிழ்ந்தனர்; பாராட்டினர். ஆனால், அதே சமயத்தில் அளவிற்கு மீறிய வேலைச் சுமையால் இவர் உடல் நலிவுற்றது. எனவே, ஊர் திரும்பினார்; உடல் நலம் காத்தார். தமிழ் கற்றார்; புலவர் தேர்வு எழுதினார்; மாநில முதன்மை பெற்றார். ஆயிரம் ரூபாய்ப் பரிசும் வந்தெய்தியது. பி. ஓ. எல். தேர்விற்குத் தொடர்ந்து படித்தார். நன்முறையில் தேறினார். சென்னை, பச்சை யப்பர் கல்லூரியில் தமிழ்ப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றார்.

### தாயினும் பரிவு

பச்சையப்பர் கல்லூரியே இவர் புலமையை வளர்த்தது; புகழைச் சேர்த்தது. இவர்தம் இனிய சொத்தாக மாணவச் செல்வங்கள் வாய்த்தனர். இவர் தம் வீடு விருந்தோம்பும் உணவுச் சாலையாக மாறிற்று. அருமை அம்மா அவர்கள் இன்முகத்தோடு பசியறிந்து, பெற்ற தாயினும் பரிந்து உணவு நல்கி, மாணவர் பலரைப் பெற்ற மைந்தரினும் பேணி வளர்த்தனர். வயிற்றுக்கு

உணவுப் பொறுப்பு அம்மாவுடையதும், அதற்கு முன்னும் பின்னும் நெஞ்சத்திற்கு உணவு ஊட்டுவது நம் பேராசிரியருடையதுமாக ஆயிற்று. கல்லூரியில் ஏட்டுக் கல்வி பெற்ற மாணவர் சிலர், இவர் வீட்டில் வாழ்க்கைக் கல்வியை — கல்வியுணர்வை — பண்பாட்டுக் கல்வியைக் கற்றனர். அவ்வாறு கற்றவர்களில் பலர் இன்று வாழ்வில் பல்வேறு துறைகளில் புகழ் பூத்து விளங்குகிறார்கள்.

டாக்டர் மு. வ. அவர்கள் கடும் உழைப்பாளி. எந்நேரமும் அவர்கள் படித்துக்கொண்டோ அல்லது வருபவர்களிடம் சுருங்க — பெருக உரையாடிக்கொண்டோ இருப்பார்கள். சிந்தனையில் தனித்து மூழ்கிவிடுவார்கள். இதன் விளைவாக நூல்கள் எழுதத் தொடங்கினார்கள். ‘செந்தாமரை’ வெளி வந்தது. பின்னர், ‘கள்ளோ காவியமோ’ வெளிவந்தது. தமிழ்நாட்டில் உயர்நிலைப் பள்ளி, கல்லூரி மாணவர் பலரை இவர் தம் நீங்காத வாசகர்களாக (Readers) இந் நூல்கள் ஆக்கின.

## இரு கண்கள்

இதற்கிடையில் மொழியியல் ஆராய்ச்சி செய்து ‘வினைச் சொற்கள்’ பற்றி ஓர் ஆய்வுக் கட்டுரை யெழுதி எம். ஓ. எல். பட்டமும், இலக்கிய ஆராய்ச்சி மேற்கொண்டு ‘பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை’ (The Treatment of Nature in Ancient Literature) என்னும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரையினை எழுதி ‘டாக்டர்’ (Ph.D.) பட்டமும் பெற்றார்.

## சிறப்புகள் சேர்ந்தன

நூல்கள் பல்துறைகளிலும் பல்கிப் பெருகின. நாவல்கள் படிப்போர் நெஞ்சங்களைக் கவர்ந்தன. அதிகப் படிகள் விற்கும் நூல் இவருடையதே என்ற நிலை ஏறத்தாழப் பத்தாண்டுக்காலம் (1951 — 1960) நிலவியது. நாளும் நாளும் பட்டிதொட்டிகளிலும் இவருடைய நூல்களைப் படிப்போர் தொகை பெருகிற்று.

இந்திய விடுதலைப் போராட்ட நூற்றாண்டு விழா 1957-ல் நாடெங்கும் கொண்டாடப் பெற்றது. தமிழ் நாட்டு அரசாங்கம் — அப்போது அதன் பெயர் சென்னை அரசாங்கம் — முத்தமிழின் மூச்சான அறிஞர் பெருமக்களைப் பாராட்ட எண்ணி, இயற்றமிழுக்கு டாக்டர் மு. வ. அவர்களையும், இசைத் தமிழுக்குத் திருமதி. கே. பி. சுந்தராம்பாள் அவர்களையும், நாடகத் தமிழுக்குப் பம்மல் பி. சம்பந்த முதலியார் அவர்களையும் தேர்ந்தெடுத்துப் பாராட்டியது, இவர் எழுதிய 'அகல் விளக்கு' என்னும் நாவலுக்கு 1963 ஆம் ஆண்டில் சாகித்திய அகாதெமி பரிசு ரூபாய் ஐயாயிரம் கிடைத்தது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசினைக் 'கள்ளோ காவியமோ?' 'கி. பி. 2000', மொழியியற் கட்டுரைகள்' முதலிய நூல்கள் பெற்றன.

## துணைவேந்தரானார்

1939 தொடங்கி 1961 ஆம் ஆண்டு ஜூன் வரை பச்சையப்பர் கல்லூரியில் தமிழ்ப்பணியாற்றிய டாக்டர் மு. வ. அவர்கள் 1961 ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் சென்னைப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியரானார்கள். தமிழ் அன்பர்களின் — மாணவர்களின் இதய வேந்தராக விளங்கிய மு. வ. அவர்கள், 1971 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதல் நாள் தொடங்கி, மூன்றாண்டுக் காலம் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவி வகித்தார். இவ்வாண்டு, மீண்டும் ஒரு முறை மூன்றாண்டுக் காலத்திற்கு அப்பதவி நீட்டிக்கப்பட்டது.

இறுதியில் அவர் வாழ்வு 10-10-1974 வியாழன் அன்று மாலை 5-30 மணிக்கு முடிவெய்தியது.

## அமெரிக்காவின் மதிப்பு

மேலை நாட்டுப் பல்கலைக்கழகம், அமெரிக்காவின் 'இல்லினாய்ஸ்' (Illinois) பல்கலைக்கழகம் இவருக்குச்

சிறப்பு 'டி. லிட்' (D. Litt) பட்டம் வழங்கிப் பாராட்டியிருக்கிறது. தமிழ்ப் படித்த எவரும் இதுவரை பெறாத சிறப்பு இது.

## சான்றாண்மைக்கு ஆழி

டாக்டர் மு. வ. அவர்கள் எளிமையும் தூய்மையும் தொண்டும் கனிவுங் கொண்டு இனிய புன்முறுவல் பூத்த முகத்துடன் காட்சியளிப்பார்கள். எந்தப் பதவி வகித்த நிலையிலும் செருக்கென்பது அவரிடம் ஒரு சிறிதும் காணப் படவில்லை. ஆடம்பரம் அவர் வாழ்வில் கால் கொள்ள வில்லை. எப்போதும் எவரையும் குறை தூற்றாத பண்பு; இயன்றவரை அனைவருக்கும் இயன்ற அளவு உதவுகின்ற மனப்பான்மை — இவை அவருடைய நீங்காப் பண்புகள்.

திருவள்ளுவர் கண்ட 'சான்றாண்மை'க்கு ஓர் உருவம்—வடிவம் தந்தவர் இவர். 'சான்றாண்மைக்கு ஆழி' என விளங்கிய இவர்கள் இயற்கை எய்திவிட்டார்கள்.

தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு என்று மூச்சு ஓயுமட்டும் வாழ்ந்த ஓர் ஒப்பற்ற பெருமகனார் அவர்.

மதுரைப் பல்கலைக்கழகம் பல்கிப் பெருக, அஞ்சல் வழிக் கல்வித் துறை இந்தியாவிலேயே முதலிடம் பெற உயர்த்தி நின்ற ஒருவர் இன்று நம்மிடையே இல்லை.

தமிழ் இசைச் சங்க நிகழ்ச்சிகளில் தவறாது கலந்து கொண்டு, பல ஆராய்ச்சிக்கு உறுதுணையாக இருந்து வந்தவர் இவர்.

சொற்பொழிவுகளுக்குச் செல்வதில் தயக்கங் காட்டிய இவர் நாடகங்களைப் பாராட்டிப் பேச ஒப்புக்கொண்ட நிலை, நாடகத் தமிழ் வளர்ச்சியில் இவர் காட்டிய அக்கறையினை உணர்த்தும்.

## மு. வ. வின் சமயநெறி

'எல்லாரும் வாழ வேண்டும்' எனும் உயரிய மனம் இவருடையது.

திருநாவுக்கரசரிடமும், தாயுமானவரிடமும், இராம தீர்த்தரிடமும் தேர்ந்த மனம் ஆன்மீக நெறியில் திளைத்தது.

நீரில் உப்பு கரைவதுபோல, கற்பூரம் எரிந்து காற்றில் கலப்பதுபோல, உலக உயிர்கள் இறைவனோடு கலந்து விடவேண்டும் என்பது இவர் கோட்பாடு.

நெஞ்சகத்தையே கோயிலாகக் கொண்டு, இறைவன் அருளைச் சுகந்தமாகக்கொண்டு, அன்பையே மஞ்சன நீராக அபிடேகித்து, பராபரனைப் பூசை கொள்ள அழைத்த தாயுமானவர் வழி இவர் ஆன்மீக நெறி.

உலகம் சுற்றி வந்தாலும் செருக்கு தலையைச் சுற்றாத அடக்கம் இவர் இயல்பு.

சுருங்கச் சொன்னால்—

தமிழர் பண்பாட்டின் உயர்தனிக் காவலர் இவர்.

இவர் மறைந்துவிட்டாரா?

இல்லை! நம் நெஞ்சங்களில் வாழ்கிறார்.

டாக்டர் மு. வ. வின் திருப் பெயர் வாழ்க! அவருக்கு நம் வணக்கங்கள்.

* * *

—தமிழ் உறவு, அக்டோபர், 1974

# VII

# அறவோர் மு. வ. அவர்களின் வாழ்வியற் சிந்தனைகள்

அறவோர் மு. வ. அவர்கள் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிய சான்றோர் ஆவர். தமிழ்ச் சமுதாயத்தில் தோன்றிய நல்ல சிந்தனையாளர். தமிழினம் சிறக்க, தழைக்க அவர் பல சிந்தனைகளைச் சமுதாய மேம்பாட்டிற் கெனத் தந்துள்ளார். அவர்தம் கருத்துகளை உணர்ந்து தெளிந்தவர்கள் வாழ்க்கையில் வழக்குதல் இலராக வாழ்வர். குறிப்பாகக் குடும்ப வாழ்விற்கெனச் சீரிய சிந்தனைகளைத் தந்தவர் அறவோர் மு. வ. ஆவர். அவர்தம் சிந்தனைகளில் ஒரு சில இவண் சுட்டப்படுகின்றன.

★ வாழ்க்கையில் பிணக்கு வந்தபோதெல்லாம் அறிவு இருந்து பயன் இல்லை. அன்பு இருந்தால் நன்மை உண்டு.

★ கடவுளின் படைப்பை உள்ளபடியே மதித்து வாழ்வது தான் ஆத்திகம். கடவுளின் உருவத்தை மட்டும் வழிபடுவது ஆத்திகம் அல்ல; அவருடைய படைப்பில் உண்மைகளை உணர்ந்து மதித்து வாழ்வதே ஆத்திகம்.

★ தனிமனிதன் வாழ்க்கைக்கு உணவும் உறக்கமும் இருந்தால் போதும். மக்கள் பலர் கூடி வாழும்

சமுதாய வாழ்க்கைக்கே அறம் கட்டாயம் வேண்டும். மக்கள் எல்லோரும் கூடி நடத்தும் அரசியலுக்கே அறம் சிறப்பாக வேண்டும். உடம்பின் நன்மைக்கு இரத்த ஓட்டம் எப்படிக் கட்டாயம் வேண்டுமோ, அதுபோல உலக நன்மைக்கு அறத்தின் அடிப்படை கட்டாயம் வேண்டும்.

★ எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும், உடல் உணர்ச்சி உள்ளவரையில், கணவன் மனைவி அல்லாத ஆணும் பெண்ணும் நெருங்கிப் பழகாமல் இருப்பது நல்லது.

★ ஆணின் வாழ்க்கை வெளியே பலரோடு பழகித் திரியும் வாழ்க்கை. பலரோடு பழகுவதால் மனம் கெடுவதற்கு வாய்ப்பு உண்டு. சேற்றில் நடந்து வழுக்குவது போன்றது இது. பெண்ணின் வாழ்க்கை குடும்பத் தளவில் பெரும்பாலும் இருந்து கணவனோடும் மக்களோடும் பழகி அமையும் வாழ்க்கை. மனம் கெடுவதற்கும் வாய்ப்பு இல்லை; ஒழுக்கம் தவறு வதற்கும் வழி இல்லை. மணலில் நடப்பது போன்றது இது. ஆகையால் தவறி விழவே கூடாது. விழுந்தால் நொண்டியாக இருக்க வேண்டும். அல்லது நோயாளி யாக இருக்க வேண்டும்.

★ கடவுள் எல்லா உயிர்களின் வாழ்வுக்கும் பொதுவான திட்டங்கள் வகுத்து, பொதுமையான ஆட்சி புரியும் ஒரு பெருஞ்சக்தி என்று உணரவேண்டும். கடவுள் எங்கும் என்றும் உள்ள பெருஞ்சக்தியாய் எல்லாப் பொருளுமாய், எல்லா உயிருமாய் விளங்குதலை எண்ண வேண்டும்.

★ ஆண்களில் ஐந்து சாதி உண்டு. மனைவியே தெய்வம் என்று சொன்னபடி கேட்டு அடங்கி நடப்பவர்கள் முதல் சாதி; குடும்பத்தில் பற்றும், தொழில்

நிலையத்தில் தாமரையிலைத் தண்ணீர் போன்ற மனப்பான்மையும் உடையவர்கள் இரண்டாம் சாதி; மூன்றாம் சாதியினர் குடும்பத்தில் பற்றில்லாமல் வெளியே ஒருத்தியிடம் அல்லது சிலரிடம் காதல் கொள்ளுபவர்கள், திருமணம் செய்து கொள்ளாமலே உண்மையான பிரமசாரிகளாய் வாழ்பவர்கள். அடுத்த சாதியினர்; திருமணம் செய்து கொள்ளாமல் மனம் போன போக்கில் கண்ட பெண்களோடு உரிமை வாழ்க்கை நடத்துபவர்கள் ஐந்தாம் சாதி.

★ கணவனோடு வாழும் ஒருத்திக்குக் கணவனுடைய அன்பே முதன்மையானது; மக்கள் இரண்டாம் நிலையினர். கணவன் பெற்றோரும் தன் பெற்றோரும் மூன்றாம் நிலையினர்; நண்பரும் உறவினரும் நான்காம் நிலையினர்; புகழும் மதிப்பும் ஐந்தாம் நிலையின; கலையும் பொழுதுபோக்கும் ஆறாம் நிலையின; தெருவாரும் ஊராரும் ஏழாம் நிலையினர்; இப்படியே மற்றவற்றையும் மற்றவர்களையும் முறைப்படுத்தி வைத்துக் கொள்ளலாம்.

★ அன்புக்காக விட்டுக்கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே என்று நான் சொல்வேனேயானால், அது உனக்கும் உன்னைப் போன்ற பெண்களுக்கும் மட்டும் சொல்லும் அறிவுரை என்று எண்ணாதே. என்னுடன் பழகும் நண்பர்களான ஆண்கள் பலர்க்கு இதையே நான் சொல்லியிருக்கிறேன். 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்னும் நாலடியாரின் பொன்மொழி இல்வாழ்க்கையின் மந்திரமாக விளங்கவேண்டும்; ஒரு வேளை கணவனும் இன்னொரு வேளை மனைவியுமாக விட்டுக் கொடுத்தால் தான் வாழ்க்கை எளிதாக நடக்கும்.

★ கொஞ்சம் போராடவேண்டும். பிறகு விட்டுக் கொடுக்கவேண்டும். அப்படி நடந்தால்தான் ஆண்களைத் திருத்தமுடியும். அளவுக்கு மேல் போராடவும் கூடாது; அளவுக்கு மேல் விட்டுக் கொடுக்கவும் கூடாது. எதிலும் அளவு தெரிந்து கொண்டு நடந்தால், வாழ்க்கை துன்பம் இல்லாமல் போய்விடும்.

★ ஒரு நாள் இரண்டு நாள் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து குலாவுகிற உறவுக்கு — விபசார நட்புக்கு—அழகு கட்டாயம் வேண்டும். ஆனால் வாழ்நாள் முழுதும் பழகும் வாழ்க்கைத்துணைக்கு அன்புதான் முதலில் வேண்டியது. அழகு இருந்தால் இருக்கட்டும். ஓவியக் கலைஞனுக்கு நுட்பமான செவியும் இருந்தால் இருந்து போகட்டும்; ஆனால் அதையே நாடித் தேர்ந்தெடுக்கக் கூடாது.

★ உள்ளதைக் கொண்டு மகிழவேண்டும். வியாபாரம் செல்வம் இவற்றில் மட்டும் அல்ல; மனைவியோடு வாழும் வாழ்க்கையிலும் இதுவேண்டும். மனைவியிடம் அளவுக்கு மேல் அன்பு பணிவு அடக்கம் ஒடுக்கம் அழகு ஆர்வம் எல்லாவற்றையும் எதிர்பார்த்தால் கடைசியில் ஏமாந்து வருந்த வேண்டி ஏற்படும்.

★ உடல் நோயற்றிருப்பது முதல் இன்பம். மனம் கவலையற்றிருப்பது இரண்டாம் இன்பம். உயிர் பிறர்க்கு உதவியாக வாழ்வது மூன்றாம் இன்பம்.

★ திருமணம் செய்யும்போது ஆணின் உடல் வளத்தையும் பெண்ணின் உடல் வளத்தையும் பார்க்க வேண்டியது கட்டாயம். மூளை உழைப்பு உழைத்து உடல் மெலிந்துள்ள குடும்பத்தில் ஆண் பிறந்து வளர்ந்தவன் என்றால் பெண்ணும் அப்படிப்பட்ட மூளை உழைப்பும் உடல் மெலிவும் உள்ள குடும்பத்திலேயே பார்ப்பது நல்லது. அதை விட்டு விட்டுக் கை கால்களால்

தொழில் செய்து உரமான தசை நரம்புகளைப் பெற்ற குடும்பத்திலிருந்து அவனுக்குப் பெண்ணைக் கட்டினால், அவர்களின் உடல் உறவு அவ்வளவு பொருத்தமாக இருக்காது. அப்படியே மெலிந்த உடம்பு உடைய குடும்பத்துப் பெண்ணை வலிய உடம்பு உடைய உழைப்பாளிக் குடும்பத்து ஆணுக்குக் கொடுத்தாலும் தீமைக்கு இடமாகும். பெண் விரை வில் நோயாளி ஆவாள். இவை எல்லாவற்றையும் விடச் சிறந்தது ஒன்று உள்ளத்தின் பொருத்தமே. உள்ளத்தின் பொருத்தம் அமைந்து காதல் ஏற்பட்டி ருந்தால். எந்தத் தொல்லையும் இல்லை. மெலிந்தவர், வலியவர், மூளை உழைப்பினர், கைகால் உழைப்பினர் என்று எந்த வேறுபாட்டையும் கடந்து அப்போது வாழமுடியும். ஆனாலும் கூடியவரையில் உடல் வளத்தையும் ஆராய்வது நல்லது.

★ இந்த உலகத்தில் கெட்டவர்கள் எதிலும் துணிந்து இறங்குகிறார்கள். நல்லவர்கள் நல்லது செய்வதற்கும் தயங்கித் தயங்கிச் செய்யாமலே விட்டு விடுகிறார்கள். அதனால்தான் உலகத்தில் தீமை தழைக்கிறது; நன்மை நலிகிறது.

★ வீட்டைத் துறப்பது, செல்வத்தை வழங்குவது, உயிரைக் கொடுப்பது இவைகளும் தியாகம்தான். ஆனால், அன்பானவர்கள் ஒருவருக் கொருவர் விட்டுக் கொடுத்து வாழும் தியாகம்தான் பெரிய தியாகம். அந்த விட்டுக்கொடுக்கும் பெருந்தன்மை இல்லா விட்டால், கணவன் மனைவி கூடிவாழ முடியாது. எவ்வளவு அறிவு இருந்தாலும் போரும் பிணக்கும் வளருமே தவிர, அன்பும் அமைதியும் வளரமுடியாது அதனால் கணவனும் மனைவியும் கற்கவேண்டிய முதல் பாடம் விட்டுக் கொடுப்பதுதான். அதுவே கடைசிப் பாடமும் ஆகும்.

★ சிலர் பிறர்க்கு வரும் துன்பத்தைக் காணும்போது மெழுகுபோல் உருகி அழிகிறார்கள். சிலர் யாருடைய துன்பத்திற்கும் இரங்காமல் கல்போல் இருக்கிறார்கள். இருவகையாரும் வாழத் தகுந்தவர்கள் அல்ல. மெழுகு உருகி அழியும்; கல் உருகவே உருகாது. இரண்டும் பயன் இல்லை. உருகவும் வேண்டும். அழியாமல் உருப்படவும் வேண்டும். இரண்டு தன்மையும் உள்ள இரும்பு பொன் முதலியவைகளே பயன் மிகுந்தவை. இரும்பும் பொன்னும் போல் இருப்பவர்களே வாழ்க்கைக்குப் பயன்படுவார்கள்.

★ தேவைகளைக் குறைத்துக் கொண்டு எளிய வாழ்க்கை வாழ்வது என்றைக்கும் நல்லது. அதுவே முதன்மை யான தவம். கவலை இல்லாமல் வாழ்வதற்கு அது ஒரு வழி. தேவையே இல்லாமல் மனிதன் வாழ முடியாது. தேவைகளைக் குறைத்து வாழலாம்.

★ பணம் என்றால் அதற்கு ஒரு தனி மதிப்பு. உலகத்தில் உள்ள வரையில், அதைச் சும்மா விடக்கூடாது. விட்டால், புத்தர், ஏசு, திருநாவுக்கரசர், காந்தி போல் அடியோடு விட்டுத் தொலைக்க வேண்டும். இல்லை யானால் பணத்திற்கு நாம் அடிமையாகாமல், நமக்கு அதை அடிமை ஆக்கிக்கொண்டு ஆட்டிப்படைக்க வேண்டும்.

★ படிப்பால் அறிவு வளருமே தவிர, ஒழுக்கம் வந்து விடாது. விளக்கு ஏற்றினால் வீட்டில் ஒளி பரவுமே தவிர, தூய்மை வந்துவிடாது; விளக்கின் வெளிச் சத்தால் தும்பும் தூசியும் அழுக்கும் போய்விடுவதில்லை. இருள்தான் போகும். அழுக்கும் தூசியும் இருப்பது விளக்கு ஏற்றினால் கண்ணுக்குத் தெரியும். விளக்குமாறு எடுத்துப் பெருக்கினால்தான் அவை போகும்.

★ பெண்கள் முன்னேற வேண்டும். பெண்கள் முன்னேறா விட்டால் நாடு இப்படியேதான் இருக்கும். பெண் களுக்குத்தான் படிப்பு வேண்டும். இன்னும் இரண்டு தலைமுறைகளுக்கு ஆண்களுக்குப் பள்ளிக்கூடம் இல்லாமல் மூடிவிட்டாலும் குறை இருக்காது. எல்லாப் பெண்களும் படித்த காலத்தில்தான், இந்த நாட்டில் அறியாமை ஒழியும். பெண்களுக்கு நல்லறிவு வந்தால் தான் மூடநம்பிக்கை நாட்டை விட்டு ஒழியும். இல்லையானால் வீட்டுக்கொரு விவேகாநந்தர் பிறந்தாலும் இப்படியேதான் குருட்டு வாழ்க்கை நிலையாக இருக்கும்.

★ தமிழர்கள் உணர்ச்சி அளவில் ஊக்கம் மிகுந்தவர்கள்; வாய்ச்சொல் அளவில் வீரம் மிகுந்தவர்கள்; இந்த இரண்டும் மட்டும் பெற்றவர்களால் ஒரு நாடு முன்னேற்றம் அடைய முடியாது. கடமை ஒழுங்கு ஒன்று வேண்டும். இந்த ஒன்று மட்டும் இருந்து, மற்ற இரண்டும் இல்லாதிருந்தாலும் கவலையில்லாமல் தமிழ் நாடு எப்போதோ தலையெடுத்திருக்கும். நீ ஒரு தமிழன்; பழங்காலப் பிற்போக்குத் தமிழனாக இருந்து வாயால் மட்டும் விளங்காதே. உணர்வால் மட்டும் உயராதே. செயலாலே சீர்ப்படு.

★ மனம் பண்படுவதற்கு வழி என்ன? நமக்கு முன் பண்பட்ட வாழ்க்கை வாழ்ந்தவர்களின் வரலாறு களைப் படிக்கவேண்டும். அவர்கள் சொன்ன சொற்களை, அல்லது எழுதி வைத்த எழுத்துகளைத் திரும்பத் திரும்பப் படித்து உணரவேண்டும். கெட்ட காற்றிலும் நீரிலும் உள்ள நோய்க்கிருமிகள் நம் உடம்பில் புகாமல் ஊசி போட்டும் மருந்து உண்டும் காத்துக்கொள்வது போலவே, கெட்ட நூல்களிலும் கெட்ட கலைகளிலும் மனத்தின் பண்பாட்டுக்கு ஆகாத நோய்க் கருத்துகள் உள்ளன. அவை மனத்தில்

புகாமல் காத்துக்கொள்ளவேண்டும். அவ்வாறு காப்போமானால் கட்டாயம் குறிக்கோளை அடைய முடியும். உலகத்தையும் உடம்பையும் திருத்துவதை விட இவ்வாறு மனத்தைப் பண்படுத்துவதுதான் கருதியபடி கைகூடுவது என்பதை உணரவேண்டும்.

★ தமிழர்கள் நல்லவர்களாக மட்டும் இருந்து தனித் தனியாகவும், குடும்பம் குடும்பமாகவும், நாடு நாடாகவும் அழிந்தது போதும். இனிமேல் வல்லவர் களாகவும் வாழக் கற்றுக் கொள்ளவேண்டும். நல்ல தன்மையோடு வல்லமையும் சேரப்பெற்று வாழ வேண்டும்.

★ இன்பத்திற்குத் துணையாக யாராலும் முடியும்; ஈ எறும்பாலும் முடியும்; துன்பத்திற்குத் துணையாக வல்லவர்களையே தேடவேண்டும். உறவானாலும், நட்பானாலும், காதலானாலும் இத்தகையோரையே தேட வேண்டும்.

★ வாழ்க்கையில் மனிதர்களின் தொடர்பு கசக்கும் நாள் வரும். ஆனால் உயர்ந்த புத்தகங்களின் கருத்துகள் என்றுமே கசப்பதில்லை.

★ விரும்பியது கிடைக்கவில்லையென்றால் கிடைத்ததை விரும்ப வேண்டும்.

★ காதல் வாழ்வில் இரண்டு உள்ளம் வேண்டும். ஒன்று அமைதி உள்ளம்; ஒன்று ஆற்றல் உள்ளம். அமைதி, ஆற்றல் பெறவேண்டும். ஆற்றல், அமைதி பெற வேண்டும்.

★ நாம் வாழ்வதற்கு மூன்று நன்றாக இருக்கவேண்டும். ஒன்று, நம் உள்ளம். அது நன்றாக இருப்பதற்காகவே அறநெறியும் கடவுள் வழிபாடும் அமைந்தன. மற்றொன்று உடம்பு அது நன்றாக இருப்பதற்கு நல்ல உணவும் உடையும் தொழிலும் மருந்தும் வேண்டும்.

மூன்றாவது, சுற்றுப்புறம். அது நன்றாக இருப்பதற்கு முன்னோர்கள் சில கட்டுப்பாடுகள் ஏற்படுத்தினார்கள். மூடநம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படுத்தினார்கள். உண்மையின் அடிப்படை இல்லாமையால் அவை உறுதியாக நிற்கவில்லை. இன்று சுற்றுப்புறமும், நன்றாக இல்லாத காரணத்தால்தான், பொதுவாக வாழ்க்கையில் அமைதியும் இன்பமும் இல்லை.

★ கணவனைத் திருத்த முடியவில்லையா? அதற்காக அவனிடம் செலுத்தவேண்டிய அன்பைக் குறைத்துக் கொள்ளாதே; அவனுக்குச் செய்யவேண்டிய கடமைகளைக் கைவிடாதே; ஒருவனை மணந்து கொண்ட பிறகு அவனுடைய இன்ப துன்பமே உன் இன்ப துன்பம்; இன்ப துன்பம் மட்டும் அல்ல, ஆக்கமும் அழிவும் கூட இருவர்க்கும் பொதுவாகக் கருத வேண்டும்; கணவனுடைய அழிவில் நீயும் கலந்து அழிவதில் ஒரு மகிழ்ச்சிவேண்டும்.

★ யாராவது ஒரு பெரியவரிடத்திலாவது ஒரு சிறந்த புத்தகத்திலாவது நம்பிக்கை வைத்து மனத்தைக் கொடுத்திருக்கவேண்டும். அல்லது, ஒத்த உரிமையோடு யாரிடமாவது திறந்த மனத்தோடு பழகியிருக்க வேண்டும்.

★ கடவுளுக்குப் பலகாரங்களை அடுக்கி வைத்து வழிபடுவது கூடாது என்றே சொல்லுவார். சிறுவர்கள் எந்தப் பொம்மையாவது வைத்துக்கொண்டு விளையாடலாம்; ஆனால் புத்தர் சிலையை வைத்துக் கொண்டு விளையாட விடலாமா? இதைப் பார்த்துக் கொண்டிருக்க மனம் வருமா! அதுபோல் மனிதர் தம் நாக்கின் ஆசைக்காக எவ்வளவு தின்பண்டங்களையாவது செய்து தின்னட்டும்; ஆனால் கடவுளுக்குத் தேவை என்று படைத்துப் பூசை செய்வது, சமயத்தையே கீழ்நிலைக்குக் கொண்டுவரும் குற்றம் என்று சொல்வார்.

★ எல்லாரும் உலகத்தைத் திருத்த முயல்கிறார்கள். உள்ளத்தைத் திருத்த அவ்வளவு முயல்வது இல்லை. செய்ய முடிந்ததைச் செய்யாமல் முடியாததற்காக உழைத்துச் சலிப்பும் வெறுப்பும் அடைகிறார்கள்.

★ மனம் ஒரு பெரிய உலகம்; அந்த மன உலகில் அந்தியின் அழகும் உண்டு; காலையின் கவர்ச்சியும் உண்டு; நள்ளிரவின் குளிர் மயக்கமும் உண்டு; நண்பகலின் கொதிப்பும் உண்டு. அந்த மன உலகில் கருமுகில்களும் உண்டு; ஆழ்ந்த கடல்களும் உண்டு; அந்த மன உலகில் வெயில் பரப்பும் கதிரவனும் உண்டு; வெண்ணிலாப் பொழியும் திங்களும் உண்டு; வெப்பமும் உண்டு; தட்பமும் உண்டு; மழையும் உண்டு; பனியும் உண்டு; வளமும் உண்டு; வறட்சியும் உண்டு. அந்த மன உலகை அல்லவா காணவேண்டும்; ஆராயவேண்டும்; பாடவேண்டும்; பண்படுத்த வேண்டும்.

★ உடம்பில் அழுக்கு ஏற்படுகிறது; பிறகு குளிக்கிறோம். உள்ளமும் அப்படித்தான். தூய எண்ணங்களில் அடிக்கடி குளித்துக் கொண்டிருக்கவேண்டும்.

★ நம் நாட்டிலேயே கடமையுணர்ச்சி குறைவு. மேலே இருப்பவர்களுக்கு நடுநிலைமையுணர்ச்சி இல்லை. வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்ற பாகுபாடு தான் உண்டு. அதனால்தான், மனித சக்தி இவ்வளவு இருந்தும், இயற்கையின் துணை இவ்வளவு இருந்தும், மண்ணின் பரப்பு இவ்வளவு இருந்தும், இந்த நாடு முன்னேற முடியாமல் இருக்கிறது.

★ உலகம் பரந்த உலகம். எல்லோருக்கும் இங்கே இடம் உண்டு. அவரவர்கள் தங்களுக்குப் பொருத்தமான இடம் தேடிக் கொண்டு வாழ்வதே நல்லது. பறவைகளும் விலங்குகளும் இப்படிப் பொருந்தாத இடத்தை விட்டு நீங்கும் உரிமை பெற்றிருப்பதால்தான் மகிழ்ச்சி

யாக வாழ்கின்றனர்; அவற்றிற்குத் துன்பம் வந்தாலும் விரைவில் மாறிவிடுகின்றது. மனிதன் நடத்தும் வாழ்க்கையில் மகிழ்ச்சி குறைவு; துன்பம் வந்தால் விரைவில் மாறுவதும் இல்லை; அதை மறக்காமல் நினைத்து நினைத்து வருந்துவதற்கு மூளையும் இருக்கிறது.

★ சாவு என்பது வாழ்வுக்குத் தேவையானது. சாவும் வாழ்வும் சேர்ந்தால் வட்டம். இது இல்லையானால் அது இல்லை. இலை பழுத்து வாடி உதிர்ந்தால்தான், தளிர் பசுமையாகத் தோன்றுகிறது. பழுப்பதும் துளிர்ப்பதும் போல்தான் சாவும் வாழ்வும்.

★ பொதுவாக, தமிழன் முதலில் தன்னை நினைக்கிறான்; தன்னையே நினைக்கிறான். பிறகுதான் சில வேளைகளில் மேற்போக்காக மொழியையும் நாட்டையும் நினைக்கிறான். இவ்வளவு தன்னலம் முதிர்ந்திருப்பதால்தான் மிகப் பழங்காலத்திலிருந்தே பண்பாடு மிக்க இனமாக விளங்கியிருந்தும் இன்று தாழ்வான நிலையில் கிடக்கிறது.

★ அறிவுரையால் பெரும்பாலோரின் மனத்தைத் திருத்தலாம் என்பது வீண் கனவு; அழும் குழந்தையை முத்தமிட்டு அமைதிப்படுத்த முயலும் தாயின் முயற்சி போன்ற வீண் கனவுதான். வாழ்வின் அடிப்படைத் தேவைகளைத் தந்து, தக்க சட்டமும் சூழ்நிலையும் ஏற்படுத்தினால்தான் பெரும்பாலோரைத் திருத்த முடியும்.

★ மனம் வானளாவ உயர வேண்டியதாக இருக்கலாம். ஆனால் தான் வேரூன்றிய மண்ணை மறந்து வாழ முடியாது; வானைப் புறக்கணித்துக் கிளைகளை உயர்த்தாமல் வாழவும் முடியாது. இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர் திருவள்ளுவர். அறநெறியும் வேண்டும், பொருள் வளமும் வேண்டும், இன்ப

வாழ்வும் வேண்டும் என்று உணர்த்தும் நூல் திருக்குறள்.

★ குழந்தைகளுக்கு அறநூல்களைத் திணிப்பதைவிட, அறிவுரைகளைக் கூறுவதைவிட, அவர்கள் பின்பற்றத் தக்க வழியில் நாம் வாழ்வதுதான் நல்லது. அறவுரைகளும் அறிவுரைகளும் வற்புறுத்தி ஊட்டும் உணவு போன்றவை. அவை நன்றாகச் செரிப்பதில்லை. பெரியோரின் நடக்கை அப்படி அல்ல; குழந்தை தாமே விரும்பி உண்ணும் பழம் போன்றது அது.

★ நன்மை தீமை இன்பம் துன்பம் குணம் குற்றம் நிறை குறை எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு, எதற்கும் தயங்கி நிற்காமல் ஓடுகின்ற கடிகாரம்போல் கடமைகளை அஞ்சாமல் செய்கின்றவர்கள்தான் இந்தக் காலத்தில் தலைமைப் பதவிக்குத் தக்கவர்கள். குடும்பத் தலைவியும் இப்படி இருந்தால்தான் வாழ்வு நன்றாக இருக்கும்.

★ எந்த விதிக்கும் விலக்கு உண்டு. விதிவிலக்கைப் பார்த்துவிட்டு நாம் எப்போதும் பின்பற்றக்கூடாது. அதுதான் நம் நாட்டில் எல்லோரும் செய்யும் தீங்கு. விதிவிலக்குக்கும் காரணம் உண்டு. அந்தக் காரணத்தை நாம் ஆராய்ந்து பார்க்கிறோமா?

★ இதுவரையில் தவறு செய்தவர்களைப் பிடித்து விடாமல் தண்டித்து வந்து என்ன பயன் கண்டோம்? குற்றங்கள் வளர்ந்து வருகின்றனவே தவிர, குறைய வில்லை. உடம்பில் உட்கார்ந்து கடித்த கொசுக் களாகப் பார்த்து அவைகளை வேட்டையாடி நசுக்கிப் பொசுக்கி விடுவதில் வல்லவர்களாக இருக்கிறோம். அதற்காகவே நீதிமன்றங்கள், சிறைக் கூடங்கள் எல்லாம் ஏற்படுத்தி ஏராளமாகச் செலவழித்து வருகிறோம். ஆனால் கொசுக்கள் வளர்வதற்கு இடம்

தருகின்ற சாய்க்கடைகளையும் தேக்கங்களையும் ஒழித்துச் சீர்ப்படுத்துவதற்கு அதில் கால் பங்கு முயற்சியும் செய்வதில்லை.

★ தனிமனிதன் இன்புற வேண்டுமானால் சமுதாயம் நன்றாக அமைந்திருக்க வேண்டும். சமுதாயம் பழங்காலத்துப் பெரிய தேர் போன்றது. அதை எல்லோரும் இழுக்கவேண்டும். அப்போதுதான் எல்லோருக்கும் இன்பம் உண்டு. பலர் ஏறி உட்கார்ந்துகொண்டு இன்பம் உற, சிலர் இழுத்துச் செல்கின்ற தேர் அன்று இது. ஒவ்வொருவரும் தம் கடமையைக் குறைவில்லாமல் செய்ய, ஒவ்வொருவரும் தமக்குரிய பங்கைப் பெறுமாறு அமைந்திருப்பதே நல்ல சமுதாயம் ஆகும்.

★ எப்படியும் நல்ல சமுதாயம் அமையவில்லையானால் அமைதியான வாழ்க்கை இல்லாமற் போகும். நூற்றுக்கு ஒருவர் இருவரை மட்டும் திருத்தி இனிப் பயன் விளையாது. பெரும்பாலோர் நெறியோடு வாழ்வதற்கு உரிய வழிவகைகளை அமைக்க வேண்டும். இரண்டில் ஒன்று நடக்க வேண்டும். ஒன்று, இன்றைய பெரிய ஊர்களும் பெரிய அமைப்புகளும் குறைந்து பழங்காலம் போல் மனச்சான்று விளங்கும் சிறிய ஊர்களும் சிறிய அமைப்புகளும் ஏற்படவேண்டும். அதுதான் காந்தியடிகளின் நெறி. மற்றொரு வழி, பழங்காலத்தில் நம்பிக்கையும் உறுதியும் ஊட்டியதாகிய சமயத்திற்கு ஒப்பாக இக்காலத்தில் வேறொன்று ஏற்படவேண்டும்; எல்லோருடைய நன்மைக்காகவும் எல்லோரும் சேர்ந்து செய்யும் சட்டத்தைக் கடவுளின் ஆணை போல் போற்ற வேண்டும்.

★ நூல்கள் எந்த மொழியில் இருப்பினும் இருக்க, கற்பித்தலும் கற்றலும் தாய்மொழியில் இருத்தல் கடமை என்ற தெளிவுதான் இன்று தமிழ்நாட்டு அறிஞர்க்கு

வேண்டும். ஒரு தலைமுறை வரையில் இந்த நிலைக்கு இடம் கொடுப்போமானால், அடுத்த தலைமுறையிலேயே அறிவியல் நூல்கள் பல, தாய்மொழியிலேயே இயற்றப்பட்டுவிடும். இந்தத் தலைமுறையில் தாய்மொழியில் சிந்தனை வளர இடம் கொடுப்போம். அடுத்த தலைமுறையில் நூல்கள் எழ வழிவகுத்தவர்களாவோம். இந்த நாட்டில் அறிவுக்குப் பஞ்சம் இல்லை. தொன்றுதொட்டு மூளை வளம் உள்ள நாடு இது. ஆதலின் நம்பிக்கை கொள்வோம்; துணிவோம்.

★ மனிதன் உடம்போடு வாழ வேண்டும்; மனத்தோடு வாழ வேண்டும். மின்சாரம் முதலிய சக்திகளைக் கண்டுபிடித்து வசதிகளைப் பெருக்குவது மட்டும் போதாது. நோய் குறைந்த உடம்பும், கவலை குறைந்த மனமும் பெறுவதற்கு வழிதேட வேண்டும்.

★ பறவைகள் அன்பாக வாழ்கின்றன. அவைகளுக்கு வாய் இல்லை; பேச்சு இல்லை; பிணக்கும் இல்லை. மக்கள் வாழ்க்கையில் வாய்தான் வம்பும் தும்பும் செய்கின்றது; பேச்சு வளர்கின்றது; பிணக்கும் முற்றுகின்றது; அன்பான வாழ்க்கையிலும் திடீரென்று அன்பு முறிகின்றது.

★ அந்த மலர்கள் என்னோடு பேசுவனபோல் இருக்கின்றன. அவைகள் அப்படியே இருக்கட்டும். வாழ்க்கையைப் பற்றி அவைகள் என்னவோ சொல்கின்றன; உணர்த்துகின்றன.

---



சி. பா.

தேசிங்கு ஆண்ட செஞ்சியில் பிறந்தவர் (3 - 5 - 1935) இந்தச் செந்தமிழ்ச் செல்வர். கண்டாச்சிபுரமும் திருவண்ணாமலையும் இந்த இலக்கியப் பொழில் கற்ற இடங்கள். பைந்தமிழ் வளர்க்கும் பச்சையப்பன் கல்லூரிப் பாசறை மறவருள் ஒருவர். அன்னைத் தமிழில் பி.ஏ. ஆனர்சு. அங்கு! முதல் வகுப்பில் தேறிய முதல்வர். 'குறுந்தொகை' பற்றிய ஆய்வுரைக்கு 1963ல் எம். லிட்., பட்டமும், 'சேர நாட்டுத் தமிழ் இலக்கியங்கள்' பற்றிய ஆய்வுரைக்கு 1970ல் டாக்டர் (பிஎச்.டி) பட்டமும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இவர் பெற்ற சிறப்புகள். நல்ல நடைகொண்ட இந்த நாகரிகர் பேர் சொல்ல நாளும் மாணவர் படை உண்டு நாட்டில்! சென்னைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகச் சேர்ந்தவர் பேராசியராகத் துறைத் தலைவராகச் சிறந்திருக்கிறார். முன்னாள் தமிழக ஆளுநருக்குத் தமிழை முறையாகப் பயிற்றுவித்த ஆசிரியர், இந்த முற்றிய புலமையாளர்!

இருபது நூல்கள் படைத்துள்ள இவர் ஒப்பருந் திறனுக்கும் உயர் தமிழ் அறிவுக்கும், 'தமிழ் இலக்கிய வரலாறு' ஒன்றே சான்று! அண்மையில் வந்துள்ள அணிகலன் 'பெருந்தகை மு.வ. 'ஆங்கிலத்தில் ஒரு நூல், 'சங்ககால மகளிர் நிலை' பற்றிய ஆராய்ச்சி 'இலக்கிய அணிகள்' என்ற நூல் தமிழக அரசின் இரண்டாயிரம் உரூபா முதல் பரிசைப் பெற்றது. படித்துப் பல பட்டம் பெற்ற இந்தப் பைந்தமிழ் வேந்தர்க்குப் பலரும் கொடுத்துள்ள புகழ் மகுடங்கள்: புலவரேறு (குன்றக்குடி ஆதீனம்) செஞ்சொற்புலவர் (தமிழ் நாட்டு நல்வழி நிலையம்), சங்க நூற் செல்வர் (தொண்டை மண்டல ஆதீனம்), சங்கத் தமிழ்ச் செல்வர் (தருமை ஆதீனம்).

பெருந்தகை மு.வ.வின் செல்லப்பிள்ளை சி.பா. அவர் புகழ் பாடும் அந்தமிழ்த் தும்பி; அயராது உழைக்கும் அருஞ்செயல் நம்பி! இலக்கியப் பேச்சில் இன்ப அருவி! எழுத்தில் நல்ல இலக்கியப் பிறவி!

சி.பா. இந்த ஈரெழுத்து ஒரு மொழி. இளைஞர்க்குச் சொல்வது சிறக்கப் பாடு படு!

—மா. செ.